# ஆழ்வார்ப் பாசுரங்களில் சங்க இலக்கியத் தாக்கம்

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு
முனைவர் (பிஎச்.டி. தமிழ்) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

*ஆய்வாளர்:*
**வி.கார்த்திகா,** எம்.ஏ., டி.பி.டி., டி.டி.சி.,
**(பதிவெண்.: 45134/Ph.D.2/Tamil/Full-Time/January 2012)**

*நெறியாளர்:*
முனைவர் **ச.சுப்புரெத்தினம்,**
**எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி., பி.ஜி.எல்.,**
**இணைப்பேராசிரியர் (பணிநிறைவு)**




தமிழ் உயராய்வுத்துறை
**தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரி**
தருமபுரம் – மயிலாடுதுறை – 609 001

பிப்ரவரி 2016

# ஆய்வு நெறியாளர் சான்று

*நாள்: .02.2016*

**முனைவர் ச.சுப்புரெத்தினம்,**
**எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்.,**
**பிஎச்.டி., பி.ஜி.எல்.,**
இணைப்பேராசிரியர் (பணிநிறைவு),
தமிழ் உயராய்வுத் துறை,
தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரி,
தருமபுரம்,
மயிலாடுதுறை–609 001.

**ஆழ்வார்ப் பாசுரங்களில் சங்க இலக்கியத் தாக்கம்** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு, முனைவர் பட்டத்திற்காக, திருமதி **வி.கார்த்திகா** என்பவரால் எனது மேற்பார்வையில் உருவாக்கப் பெற்றது. தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரியின் தமிழ் உயராய்வுத் துறையில் அவர் செய்த இவ்ஆய்வின் மீது வேறெந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என இதன்வழிச் சான்றளிக்கிறேன்.

துறைத்தலைவர் ஆய்வு நெறியாளர்

முதல்வர்

# ஆய்வாளர் உறுதிமொழி

நாள்: .02.2016

**வி.கார்த்திகா, எம்.ஏ., டி.பி.டி., டி.டி.சி.,**
முனைவர் பட்ட ஆய்வாளர் (முழுநேரம்),
தமிழ் உயராய்வுத்துறை,
தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரி,
தருமபுரம்,
மயிலாடுதுறை–609 001.

**ஆழ்வார்ப் பாசுரங்களில் சங்க இலக்கியத் தாக்கம்** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காகப் பணிக்கப்பெறும் இவ்ஆய்வேடு, என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இவ்ஆய்வேடு, இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் பணிக்கப்பெறவில்லை என்று இதன்வழி உறுதியளிக்கிறேன்.

ஆய்வு நெறியாளர் ஆய்வாளர்

# நன்றியுரை

தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரியின் புரவலர் தருமபுரம் ஆதீனம் இருபத்தாறாவது குருமகாசந்நிதானம் **ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** திருவடிகளுக்கு முதற்கண் என் நெஞ்சார்ந்த நன்றி மலர்களைக் காணிக்கையாக்குகிறேன்.

'**ஆழ்வார்ப் பாசுரங்களில் சங்க இலக்கியத் தாக்கம்**' என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய **திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு** என் நன்றி.

ஆய்வாளர் நலனில் அக்கறை காட்டி ஆற்றுப்படுத்தியும், தனது கடமையைத் தவறாது செய்தும் வருபவரான தருமபுரம் ஆதீனம் கல்லூரியின் முதல்வர் **முனைவர் மா.திருநாவுக்கரசு** அவர்களுக்கும் என் நன்றியைச் செலுத்தக் கடமையுடையேன்.

என் ஆய்வுப்பணிக்கு இரவு, பகல் என்று பாராமல் கருமமே கண்ணாக இருந்து என்னை ஊக்கப்படுத்தி, நல்ல அறிவுரைகளையும், சிந்தனைகளையும் வழங்கியுதவிய தருமபுரம் ஆதீனம் கலைக் கல்லூரியின் தமிழ் உயராய்வுத் துறை இணைப்பேராசிரியரும், எனது நெறியாளருமான **முனைவர் ச.சுப்புரெத்தினம்** அவர்களுக்கு என்றென்றும் நன்றி உடையேன்.

ஆய்வுத் தொடர்பான கருத்துகள் பல வழங்கிய எமது கல்லூரியின் தமிழ் உயராய்வுத் துறைத் தலைவர் **முனைவர் க.சேகர்** மற்றும் அனைத்துப் பேராசிரியர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுக்குத் தேவையான நூல்களைத் தந்துதவிய தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரி நூலகரும், பாரதிதாசன் பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினருமான **திரு.இரா.செல்வநாயகம்** அவர்களுக்கும் மற்றும் பொறுப்பாளர்களுக்கும், மயிலாடுதுறை மாவட்டக் கிளை நூலகத்தார்க்கும், மேலப்பாதி திரு.வி.க. நூலகத்தின் பொறுப்பாளர் **திரு.சு.பாலசுப்பிரமணியன்** அவர்களுக்கும் என் நன்றி.

ஆய்வுத் தொடர்பான சிந்தனைகளையும் நூல்களையும் வழங்கி உதவிய சென்னை, செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் ஆய்வறிஞர் பேராசிரியர் **பி.மருதநாயகம்** அவர்களுக்கும் நன்றி.

ஈன்று புறந்தந்த என் தாய் திருமதி லெக்ஷ்மி அவர்களுக்கும், என்னுடைய அனைத்து வளர்ச்சியிலும் உயிர்ப்பாய் இருந்து மகிழும் என்னுடைய அன்புக் கணவர் **திரு.சம்பத்குமார்** அவர்களுக்கும், பல நூல்களைத் திரட்டித் தந்து, என் ஆய்வுக்கு உறுதுணையாக இருந்த என் மகன்கள் **ஸ்ரீவத்ஸன், ஸ்ரீநிவாஸ்** ஆகியோர்க்கும் என் அன்புகலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப்பணிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து என்னை ஆய்வு வழிச்செலுத்திய, என் ஆய்வு நெறியாளரின் மனைவியும், என் தோழியுமாகிய **திருமதி சு.கீதா, எம்.காம்., பி.எட்.,** அவர்களுக்கும் என் நன்றி.

இந்த ஆய்வேட்டினைக் கணினி அச்சில் உருவாக்கி வடிவமைத்த **தஞ்சாவூர், நாகு கம்ப்யூட்டர்ஸ்** நிறுவனத்தார்க்கும் என் நன்றி.

என்றும் நன்றியுடன்,
**வி.கார்த்திகா**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ. | - | அடி |
| அ.ள். | - | அடிகள் |
| அகம். | - | அகநானூறு |
| ஆ.இ. | - | ஆண்டு இல்லை |
| இ.ப. | - | இரண்டாம் பதிப்பு |
| இரண்.திருவந். | - | இரண்டாம் திருவந்தாதி |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலித். | - | கலித்தொகை |
| குறிஞ். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| திருக்குறுந். | - | திருக்குறுந்தாண்டகம் |
| திருநெடுந். | - | திருநெடுந்தாண்டகம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| திருச்சந்த. | - | திருச்சந்தவிருத்தம் |
| திருப்பள்ளி. | - | திருப்பள்ளியெழுச்சி |
| திருவாய். | - | திருவாய்மொழி |
| நாச்சி.தி.மொ. | - | நாச்சியார் திருமொழி |
| நான்மு.திரு. | - | நான்முகன் திருவந்தாதி |
| நூ. | - | நூற்பா |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பெருமாள் தி.மொ. | - | பெருமாள் திருமொழி |
| பெரியாழ்.தி.மொ. | - | பெரியாழ்வார் திருமொழி |

| | | |
|---|---|---|
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| புறம். | - | புறநானூறு |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| முதல் திருவந். | - | முதல் திருவந்தாதி |
| முல்லைப். | - | முல்லைப்பாட்டு |
| முருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| மூன்றாம் திருவந். | - | மூன்றாம் திருவந்தாதி |
| மேலது. | - | மேற்குறித்த நூல் |

# முன்னுரை

தமிழ்மொழியானது இளமையும் இனிமையும் மிக்க மொழியாகும். இது 'பக்தியின் மொழி' என்று பாராட்டப்படும் சிறப்பினைக் கொண்ட மொழியாகும். தமிழ்மொழிக்குச் 'செம்மொழி' என்னும் அங்கீகாரம் பெற்றுத்தர அடிப்படையாய் அமைந்த இலக்கியங்களுள் முதன்மையானவை சங்க இலக்கியங்கள் ஆகும்.

சங்க காலத்திற்குப் பின்னர்த் தோன்றிய பெரும்பாலான இலக்கியங்கட்கு அடிப்படையாகவும், முன்னோடியாகவும் சங்க இலக்கியங்கள் திகழ்வதனையும் எடுத்துக்காட்ட முடியும். அவ்வகையில், ஆழ்வார்களின் பக்திப் பனுவல்களைக் கொண்டு மிளிரும் நாலாயிர திவ்யபிரபந்தம் சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களில் உள்ள பல்வேறு இலக்கியக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டு திகழ்கின்றதென்பது ஏற்கத்தக்க கருத்தே ஆகும்.

புத்திலக்கிய வகையின் வளர்ச்சிக்கும் வித்திட்டனவாக ஆழ்வார்ப் பாசுரங்கள் விளங்குகின்றன எனலாம். அதே வேளை, தொன் மரபினைப் பாதுகாத்தல் என்னும் செய்கையை ஆழ்வார்கள் செவ்வனே நிறைவேற்றியுள்ளனர் என்றும் கூறலாம்.

நிலையாமையுடைய மக்கள், நிலைபேறுடைய பரம்பொருள் ஒன்றிருப்பதாகக் கருதி, அதனை வழிபட்டால், உய்தி பெறலாம் என்றெண்ணி வழிபடுகின்றனர். அவ்வாறு மனிதர்கட்கு இடையேயான அன்பு என்ற நுண்பொருட்கூறு, கடவுளிடத்துப் பக்தி என்ற கூறாக நிலை நின்று இறைவனிடம் செலுத்தப் பெறுகின்றது. நாலாயிர திவ்யபிரபந்தத்தில் மையமிட்டுள்ள பக்திக் கூறுகளுக்கடையே, தொல்காப்பியரால் இலக்கணப்படுத்தப்பட்ட அக, புறத்திணைக் கூறுகள் சங்க இலக்கியச் சாயலில் பதிவு செய்யப்பட்டுள்ளன எனக் கூற முடிகிறது.

**ஆய்வின் நோக்கம்**

*சங்க இலக்கியங்களிலுள்ள கூறுகளையடியொற்றிய நிலையில் பல்லாண்டு, பாவை, மடல், மாலை, பள்ளியெழுச்சி, ஏறு தழுவல் என்பன போன்ற பல செய்திகள் பக்தி இலக்கியமான ஆழ்வார்ப் பாசுரங்களில் அமைந்திருப்பதனால், அவற்றை மையமாகக் கொண்டு சங்க இலக்கியத்தின் வழியே நின்று விளக்குவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.*

**கருதுகோள்**

*ஆழ்வார்ப் பாசுரங்களில் சங்க அக, புற இலக்கியங்களின் தாக்கம் உள்ளது என்பது கருதுகோள் ஆகிறது.*

**ஆய்வு முன்னோடிகள்**

1. *வைணவச் செல்வம், முனைவர் ந.சுப்புரெட்டியார், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் (1995).*
2. *பாவை நோன்பு வரலாறும் இலக்கிய மரபுகளும், முனைவர் இரா.வீரபத்திரன், வெக் பிரிண்டர்ஸ், சென்னை, மறுபதிப்பு: 1999.*
3. *நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சோழநாட்டுப் பாசுரங்கள்-ஓர் ஆய்வு, கு.கோமதி, பாரதிதாசன் பல்கலைக்கழகம் முனைவர்பட்ட ஆய்வு (2009).*
4. *ஆழ்வார்களும் தமிழ் மரபும், முனைவர் ம.பெ.சீனிவாசன், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம் (2010).*
5. *ஆழ்வார்கள் பாடல்களில் அகப்பொருள் மரபுகள், கோ.மலர்விழி, பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர்பட்ட ஆய்வு (2014).*

**ஆய்வு எல்லை**

*சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களும், நாலாயிர திவ்ய பிரபந்தமும் ஆய்வின் எல்லைகளாக அமைகின்றன.*

## ஆய்வு அணுகுமுறை

பகுப்பு முறையில் செய்திகளைப் பகுத்தும், தேவையான இடங்களில் ஒப்புமைகளை விளக்கும் ஒப்பீட்டு முறையிலும் இவ்வாய்வு அமைகிறது.

## ஆய்வுப் பயன்

பெரும்பாலான இலக்கியங்கள் அவற்றின் முந்திய இலக்கண நெறியினின்று வழுவாதும், முந்திய இலக்கியங்களிலுள்ள தேவையான கூறுகளை ஏற்றுக் கொண்டும் முகிழ்ப்பது வெளிப்படை. அவ்வகையில், ஆழ்வார்ப் பாசுரங்கள் பக்தியை நோக்கியன என்றாலும், அதற்குத் தேவையான பாடுபொருட்கூறுகளைச் சங்க இலக்கியங்களிலிருந்து அவை எடுத்தாண்டுள்ளன. அவற்றை இவ்ஆய்வின் வழி வெளிப்படுத்தும்பொழுது, சங்க இலக்கியங்களின் மேன்மை புலப்படுத்தப்படுவதுடன், ஆழ்வார்ப் பாசுரங்களின் ஆக்க முயற்சியும் வெளிப்படுத்தப்படுகிறது.

## ஆய்வுப் பகுப்பு

“ஆழ்வார்ப் பாசுரங்களில் சங்க இலக்கியத் தாக்கம்” என்ற தலைப்பிலான இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பின்வரும் நான்கு இயல்களாகப் பகுக்கப்படுகிறது.

1. திருமால் வழிபாடு
2. அகத்திணைக் கூறுகள்
3. புறத்திணைக் கூறுகள்
4. வேத, புராண, இதிகாசக் கூறுகள்.

முடிவுரைக்குப் பின் துணைநூற் பட்டியல் இடம்பெறுகிறது.

## இயல் 1: திருமால் வழிபாடு

முன்னுரை - கடவுள் வாழ்த்து - திருமால் வழிபாட்டின் தொன்மை - மாயோன் - சங்கத் தமிழரின் வழிபாடு - திருமுருகாற்றுப்படை - மாயோன் முல்லைநிலக் கடவுள் - சங்க இலக்கியத்தில் வரும் வழிபாட்டுச் செய்திகள் - வழிபாட்டிற்கெனப் பயன்பட்ட பொருட்கள் - இசையுடன் வழிபாடு - குலத்தோர்சூழ வழிபாடு - அடியார் பெருமை - வழிபாட்டில் அஃறிணை -

மந்திரம் உச்சரித்து வழிபடுவது - வேள்வி வழிபாடு - வழிபாட்டின் முந்தைய நிலை - நீராடியபின் இறைவழிபாடு - கூட்டு வழிபாடு - ஆலய வழிபாடு - மாயோன் மேய மைவரை உலகம் - முல்லைநிலக் கருப்பொருட்களும் வழிபாட்டு முறைகளும் - திருமால் வழிபாடு - இடையர், ஆயர் - நம்பிக்கைகளும் நிமித்தமும் - ஏறு தழுவுதல் - திருமால் வழிபாட்டின் வளர்ச்சி நிலை - முடிவுரை.

**இயல் 2: அகத்திணைக் கூறுகள்**

முன்னுரை - தொல்காப்பியத்தில் அகத்திணைக் கூறுகள் - அகப்பாட்டு மரபு - திருவாய் மொழியில் அகமரபு - நால்வகை நிலங்கள் - பிரிவு - வன்புறை - நிமித்தம் - தாய் கூறுவதும், கண்டோர் கூற்றும் - வாடைக்கு வருந்துதல் - பிரிவாற்றாமை - எள்ளிக் கூவும் குயில் - கூந்தலைத் தொடுவது தலைவனுக்கே உரியது - ஆற்றாமை, ஆற்றுவிக்கும் வழி தெரியாத் தலைவி - உயிர் தீயிலிட்ட மெழுகாக உருகுதல் - அணிகலன் கழன்றமை - பசலை நோய் - வஞ்சகக் கள்வன் - இயற்கைப் புணர்ச்சி - இயற்பழித்தலும், இயற்பட மொழிதலும் - சுற்றத்தார் ஐயம் - ஊடல் - களவு - இடந்தலைப்பாடு - தொய்யில் - அறத்தொடு நிலை - உடன்போக்கு - நலம் பாராட்டல் - தோழி தலைவியை ஆற்றுவித்தல் - வெறிவிலக்கு - தலைவியும் அன்றில் பறவையும் - தலைவி தலைவனைக் காண விரைதல் - நோய் தீர்க்கும் மருந்து - கனாக் கண்டு தோழிக்கு உரைத்தல் - தாயின் மனநிலை - மடநெஞ்சு - துன்பம் தரும் மாலைப்பொழுது - விட்டுக் கொடுக்கும் குலமகள் - பிறவி தோறும் தொடரும் அன்பு - அந்தி விளக்கு - மடலேறுதல் - சங்ககாலக் கரணமும், பாசுரம் கூறும் திருமணமும் - கூடலிழைத்தல் - தூது - முடிவுரை.

**இயல் 3: புறத்திணைக் கூறுகள்**

முன்னுரை - ஆநிரைகளைக் காத்தல் - பாதீடு - உண்டாட்டு நெடுமொழி - வேத்தியல் - குடிநிலை - மழபுல வஞ்சி - மன்னனை இறைவனுக்கு ஒப்பாகக் கூறுதல் - வள்ளன்மை - பொருண்மொழிக் காஞ்சி - நல்லிசை வஞ்சி - மறக்களவழி - வெட்சி - வஞ்சி - வாகை - குடைமங்கலம் -

வல்லாண்முல்லை - ஏராண்முல்லை - அரசவாகை - பார்ப்பன வாகை - மூதின் முல்லை - காவல் முல்லை - கண்படை நிலை - கடைநிலை - பொலிவு மங்கலம் - நாள் மங்கலம் - கொற்றவை நிலை - நால்வகைப் படைகள் - வள்ளல் தன்மை - ஆற்றுப்படுத்துதல் - சுரத்துய்த்தல் - உடனிலை - ஏம எருமை - தானை மறம் - தும்பை - பொருண்மொழிக் காஞ்சி - பூவை நிலை - மறக்கள வேள்வி - வாழ்த்தியல் - சிறுவர் சிறுமியர் விளையாட்டு - துறவறம் - மகட்பாற் காஞ்சி - மறுமையுலகம் பற்றிய குறிப்புகள் - நிலையாமை - முடிவுரை.

## இயல் 4: வேத, புராண, இதிகாசக் கூறுகள்

முன்னுரை - சங்க இலக்கியங்களில் காணலாகும் புராணக் கூறுகள் - மல்லரைச் சாய்த்தது - சந்திரனின் சாபத்தைப் போக்கியவன் - மகாபாரதப் போர்க்களம் - பாஞ்சாலிக்கு நேர்ந்த துன்பம் - ஊழி முடிவில் உலகம் கடலுள் ஆழ்தல் - கண்ணன் ஆடைகளைக் கவர்ந்த செய்தி - குருந்தொசித்தது - வேதம் கூறும் இறைத் தத்துவம் - சங்க இலக்கியங்களில் வேதக் கருத்துக்கள் - வேள்வி - திருமால் காக்கும் கடவுள் - திருமாலின் அவதாரங்கள் - பிரம்மா - சிவன் - திருமால் குறித்த செய்திகள் - ஆழ்வார்கள் சிவபெருமானைப் பாடிய தலங்கள் - இலக்கியத்தில் கூறப்பட்ட திருத்தலத்தின் புராணம் - திருமால் திருமகள் - தேவர்களுக்கு அமுதமளித்தல் - துழாய் மாலை அணிந்த மார்பன் - தாமரைக் கண்ணன் - மராமரம் துளைத்தமை - அட்டவீரட்டச் செயல்கள், காலனைக் கொன்றது - மன்மதனை எரித்தது - திரிபுரம் எரித்தமை - முடிவுரை.

# இயல் 1

# திருமால் வழிபாடு

**முன்னுரை**

மனிதனின் வாழ்வியலோடு இரண்டறக் கலந்த செயல்பாடாக இறைவழிபாடு அமைந்துள்ளது. எல்லாமே இறைவன் செயல் என்பதில் ஆக்கல், அழித்தல், காத்தல் என்ற மூன்றும் அடங்கியுள்ளது.

தோற்றமும் அழிவும் அற்றவனாக இறைவன் இருக்கிறான் என்பது பொதுவான நம்பிக்கையாகும். தோற்றமும் அழிவும் உடையவனாக மனிதன் இருப்பதால், நிலைபேறுடையதாக நம்பப்படும் பரம்பொருளை நோக்கி, நிலையாமையுடைய மனிதன் வழிபட்டு நிற்பதே வாழ்வின் நோக்கமாகிறது. இதுவே வழிபாடு எனக் கூறத்தக்கது.

அனாதியாக, சுயம்புவாக எல்லாவற்றிலும் விரிந்துள்ளதாகக் கருதப்படும் இறைவனைப் போற்றுவதன் அடிப்படையில், வைணவம் திருமாலை வழிபடு தெய்வமாகப் போற்றுகிறது.

> சங்க காலத்தில் இலக்கியங்களில் பக்திக் கூறுகள் இருந்தன. ஆனால், பக்திக்கெனத் தனிப்பாசுரங்கள் இருக்கவில்லை. அப்பொழுது வடிவம் பெற்றிராத பக்தி இயக்கம் என்பது கி.பி.6 ஆம் நூற்றாண்டிற்குப் பிறகே தமிழகத்தில் வேரூன்றியது எனலாம். சைவத்திற்கு பக்தி இலக்கிய முன்னோடியாகக் காரைக்கால் அம்மையாரையும், முதலாழ்வார் மூவரையும் சுட்டுவர் டாக்டர் மு.வரதராசன்.[1]

> தெய்வப் பாசுரம் பாடிப்பாடிப் பாசுர இலக்கியத்தின் எல்லைகண்டது தமிழ் ஆதலின், எத்தெய்வத்தை யார் பாடினாலும் பழம்பாசுர அமைப்பின் படிவமாகத்தான் இருக்கமுடியும்[2]

என்பர் டாக்டர் வ.சுப.மாணிக்கம். இதற்கொப்பப் பாசுர அமைப்பு என்பது சங்ககாலத்தில் வளர்ச்சியடையவில்லை என்றாலும், ஆழ்வார்கள் பக்தியுடன்

பாசுரம் எழுதுவதற்கான கருத்துக் கூறுகளைச் சங்கப் பாடல்கள் கொண்டிருந்தன எனலாம்.

**கடவுள் வாழ்த்து**

ஆதி மனிதன் இயற்கையை வழிபட்டான். இயற்கையின்றி எந்தவோர் உயிர்ப்பொருளுமில்லை என்று பண்டையோர் உணர்ந்ததால் இயற்கையையே தெய்வமாகப் போற்றினர். தொன்மையான இலக்கண நூலாகக் கருதப்படும் தொல்காப்பியத்தில் கடவுள் வாழ்த்து என்று தனிப்பாடலில்லை. எனினும் ‘கந்தழி’ பற்றிக் கூறுவதை எண்ண முடிகிறது.

பத்துப்பாட்டில், திருமுருகாற்றுப்படையே முருகனைப் போற்றிப் பாடப்பட்டதாக அமைந்துள்ளதேயன்றி, மற்ற நூல் எவற்றிலும் கடவுள் வாழ்த்து என்பது இல்லை எனலாம்.

எட்டுத்தொகை நூல்களான நற்றிணையில் திருமாலும், குறுந்தொகையில் முருகப்பெருமானும், ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து என்ற இவற்றில் சிவபெருமானும் போற்றி வாழ்த்தப்படுகிறார்கள். பரிபாடலில் திருமாலும், குமரக்கடவுளும் வாழ்த்திப் பாடப்பட்டுள்ளனர்.

பரிபாடலில் திருமால் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனாகச் சுட்டப்பட்டுள்ளான். அவற்றைப் படித்தறியும் பொழுது, வழிபடா மனமும் திருமாலின் மேல் வயப்பட்டு வழிபடும் எண்ணத்தை ஏற்படுத்தும் வகையில் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது.

ஆழ்வாரின் பாசுரங்களில் திருமாலே முழுமுதற் கடவுளாகப் போற்றப்படுகிறான். இவற்றில் தனியாகக் கடவுள் வாழ்த்து இல்லை. ஆனால், முதற்பகுதியாக வரக்கூடிய பெரியாழ்வாரின் ‘திருப்பல்லாண்டு’ என்பதன் பாசுரங்களையே கடவுள் வாழ்த்தாகக் கொள்ளலாம். ஏனெனில், வைணவ சமயத்தில் இறைவனை வழிபட ஆழ்வார்களின் பாசுரங்கள் பாடப்படும்பொழுது இப்பல்லாண்டு பாடப்பெற்ற பின்னரே, பிற

*பாசுரங்கள் பாடப்பெறுகின்றன. வழிபாடு நிறைவுறும் தருணத்திலும், மீண்டும் 'திருப்பல்லாண்டினை'ப் பாடியே முடிக்கின்றனர். இதனை 'மங்கல வாழ்த்தாக'க் கொண்டு வைணவர்கள் பாடி மகிழ்வதைக் காணமுடிகிறது.*

**திருமால் வழிபாட்டின் தொன்மை**

*தொல்காப்பியர் உயிர்கள் குறித்துக் கூறும்பொழுது,*

புல்லும் மரனும் ஓர் அறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே[3]

*என்ற நூற்பாவில் ஓரறிவு உயிர்களாகப் புல், மரம் உள்ளிட்டனவற்றைக் குறிக்கிறார். புல், மரம் போன்றன செறிந்து வளர்ந்த காடே முல்லை நிலமெனப்பட்டது.*

*தொடக்கத்தில் இயற்கையை வழிபட்ட பழங்காலத் தமிழர், இறை நம்பிக்கை மிக்கவர்களாயிருந்தனர். அதனால் அவர்கள், அவ்வந்நிலத்திற்குரிய கருப்பொருட்களை வகுத்தபொழுது, முதற்கண் தெய்வத்தையே குறிப்பிட்டனர். பின்னர், மனிதர்களின் மனவியல்புகளுக்கேற்பப் பல்வேறு நிலைகளில் வழிபடத் தொடங்கினர்.*

**மாயோன்**

*முல்லை நிலத்திற்குரிய தெய்வமாக மாயோனைக் குறிக்கும் தொல்காப்பியர்,*

மாயோன் மேய காடுறை உலகம்[4]

*என்கிறார்.*

முல்லைநில மக்கள், செழித்து வளர்ந்திருக்கும், மரம், செடி, கொடிகள் நிறைந்த செறிவான காட்டின் கருமையை 'மாயோன்' எனப் போற்றி மகிழ்ந்தனர். அடவியின் அடர்த்தியான கருமையையே மாயோன் எனக் கருதிப் போற்றினர்[5]

*எனக் குறிப்பிடும் அறிஞரின் கருத்து இதற்கு அரணாகின்றது.*

மேலும், 'மா' என்ற சொல்லுக்குப் பல பொருள்களிலிருப்பினும், அவற்றுள்ளும் 'கரியவன்' என்ற பொருளைக் கொண்டும், பசிய கடலினையும், நீலவானத்தையும், காயாம்பூ மலர்த் தொகுதிகளையும், ஆங்கெல்லாம் பரந்து விரிந்து நிற்கும் வண்ண வனப்புகளையும், அவற்றிற்குப் பொருளாய் ஊடுருவி நிற்கும் பொருளையுமே 'மாயோன்' எனக் கருதும் சான்றோரின் கருத்தும் இத்தகையதே.[6]

**சங்கத் தமிழரின் வழிபாடு**

பழந்தமிழ் நூல்களில் மாயோன் பற்றியச் செய்திகள் மிக்குள்ளன.

தேயா விழுப்புகழ் தெய்வம்[7]

என்ற கலித்தொகையின் அடி மாயோனைக் குறிக்கிறது. இது, இயற்கையுருவான மாயோன் கரியநிறம் ஊடையவன் என்பதையும் செப்புகிறது.

'பெரிய' எனும் பொருண்மையுடைய 'மாஅல்' என்ற பெயரும் மாயோனுக்கு உரியதாகப் பழந்தமிழ்ப் பாடல்களில் பயின்றுவரக் காணமுடிகிறது.

முல்லைநிலக் காட்டுறப் பகுதியின் நெடிய உருவினை மாயோனுக்கு ஏற்றி, அவ்வுருவினை மால் எனக் கொள்ளும் முறையினைப் பத்துப்பாட்டில் பல இடங்களின் காண இயல்கிறது.

சங்க இலக்கியங்களுள் ஒன்றான திருமுருகாற்றுப்படை,

மால்வரை நிவந்த சேணுயர் வெற்பு[8]

எனவும், நற்றிணை,

மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்[9]

எனவும் பாடி, மலையின் நெடியவுருவினை 'மாஅல்' என்று போற்றி வழிபட்டமையைச் சுட்டுகின்றன.

**மாயோன் - முல்லைநிலக் கடவுள்**

காடுறை கடவுளாகச் சுட்டப்படும் மாயோன் காயாம்பூச் சூடினமையை,

பூவை விரிமலர் புரையும் மேனி[10]

என்றும்,

பறவாப் பூவை பூவினோயே[11]

என்றும் வரும் பரிபாடற்றொடர்கள் வெளிப்படுத்துகின்றன.

கானகத்தின் நெடுமையையும், மாமை நிறத்தினையும் உடையவனாய் இருப்பதோடு, அந்நிலத்திற்குரிய பெரும்பொழுதான கார்காலத்துக் கரியமேகத்தின் பொலிவினைப் பெற்றுக் காயாம்பூச் சூடி, முல்லைநிலக் கடவுளாக விளங்குமாறு இந்நில மக்கள் அவ்வுருவினையும், நிறத்தையும் தமது வழிபடு தெய்வமாகிய திருமாலாக மனத்துள் உருச் செய்தவாறு போற்றினர் என்றுணர முடிகிறது.

தம் கண்ணுக்குப் பச்சைப் பசேலெனக் காட்சியளித்த அவ்வியற்கையழகை, ‘மால்’ என்று வாழ்த்தினர்[12]

என்ற கருத்தை முன்வைக்கிறார் திரு.வி.கலியாணசுந்தரனார்.

சங்ககாலத்திலும் அதையொட்டிய காலத்திலும் முல்லைநிலக் கடவுளாகவும், வழிபடுகடவுளாகவும் இருந்த திருமால், பக்தி இயக்கக் காலத்தில் பெருங்கடவுள் வடிவம் கொண்டதைத் திவ்யபிரபந்தம் எடுத்துக்காட்டுகிறது என்று கூறி,

உன்னுமாறு உன்னை ஒன்றும் அறியேன்
ஓவாதே நமோ நாராயணா என்பன்
வன்மையாவது உன் கோயில் வாழும்
வைட்டணவன் என்னும் வன்மை கண்டாயே[13]

என்ற பெரியாழ்வார்ப் பாசுரத்தையும் எடுத்துக்காட்டுகின்றார் தி.அரங்கநாதன்.

ஆழ்வார்களின் பாசுரங்கள்,

பூவை வீயாம் மேனிக்கு[14]
கார் மேனிச் செங்கன்[15]
பச்சை மாமலை போல் மேனி[16]

என்றெல்லாம் பாடித் தத்தம் பாசுரப் பகுதிகளில் பசுமையான இயற்கையழகில் எழிலுறக் காட்சியளிக்கும் திருமாலினைப் பாடியுள்ளார்கள்.

**சங்க இலக்கியத்தில் வரும் வழிபாட்டுச் செய்திகள்**

**வழிபடுதல்**

குறைவில்லாச் செயல்களைச் செய்யும் ஆர்வலர்கள், தாம் தொடங்கிய செயல்கள் நன்கு முடிய வேண்டுமென வேண்டி வழிபடும்பொழுது, அத்தெய்வத்தை நேரிடையாகக் கண்டால் எங்ஙனம் மகிழ்வடைவரோ, அங்ஙனம் மகிழ்வுற்று அல்லது அச்சத்துடன் வேண்டி நிற்கும் நிலையே வழிபாடு எனக் கருதப்பட்டது. இப்பாங்கில் கருத்துக் கூறும்,

அழிவில முயலும் ஆர்வமாக்கள்
வழிபடு தெய்வம் கண்கண்டாங்கு[17]

என்ற நற்றிணையடிகள் குறிக்கத்தக்கனவாகும். இக்கருத்து, அத்தகையோரின் வழிபாட்டினியல்பைச் சுட்டுவதாக உள்ளது.

உயிர்களைக் காப்பதையே தன் தொழிலாகக் கொண்டவன் திருமால் என்பதைக் கலித்தொகை,

வழிபட்ட தெய்வம் வலி எனச் சார்ந்தார்கண்[18]

எனச் சுட்டுகின்றது. அதாவது, வலிமைதரும் என்று நம்பி வழிபடப்படும் அத்தெய்வம், தன்னைச் சரணடைந்தாரைக் காக்கவல்லது என அக்கால மக்கள் நம்பியிருந்தமையை வெளிப்படுத்துவதாக இது உள்ளது.

ஆழ்வார்கள் இறைவனின் திருவுருவைக் காண்பதால் ஏற்படும் மகிழ்ச்சியை,

இரு வல்வினையால் குமைக்கும்
முறைமுறை யாக்கை புகல்ஒழியக்
கண்டு கொண்டு ஒழிந்தேன்[19]

எனப்பாடி வெளிப்படுத்துவதும், அவ்விறைக்காட்சியால் தமக்குற்ற பிறவித் துன்பமெல்லாம் நீங்கப் பெற்றதாகவே கருதி மகிழ்ந்ததை,

காக்கும் இயல்வினன் கண்ண....[20]

எனப் பாடி வெளிப்படுத்துவதும் பாசுரங்களில் உள்ளன. திருமாலானவன், தனது அடியார்களுக்காகவே அவதாரம் எடுத்துவந்து காப்பவனாக ஆழ்வார்ப் பாசுரங்களில் சுட்டப்படுகிறான்.

குறைவிலா நற்செயல்களைச் செய்கின்ற இறையுணர்வு மிக்கவர்களுக்கு, 'சார்ந்தாரைக் காக்கும்' என்று இலக்கியம் கூறுவது போன்று, அவனுடைய நாமத்தைச் சிந்தித்தவர்க்குத் திருமாலின் கருணையால் அனைத்தும் கிடைக்குமென்பதை,

குலம் தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலந்தரச் செய்யும் நீள்விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்[21]

என்று ஆழ்வார்ப் பாசுரம் அழகாகச் சுட்டுகிறது.

### வழிபாட்டிற்கெனப் பயன்பட்ட பொருட்கள்

சங்ககால மக்கள் தாம் வழிபடும்பொழுது சந்தனம், அகிற்கட்டை, மணமுள்ள மலர்கள், மத்தளம், மணி, மழு, பொன்னால் செய்யப்பட்ட யானை மற்றும் மயிலுருவங்கள் எனப் பலவற்றை வைத்து வழிபட்டனர். மேலும், எத்தருணத்திலும், வழிபடச் செல்லும்பொழுது நந்தா விளக்கையும் கையில் ஏற்றிச் சென்றனர் என்பதை,

வேறுபடு சாந்தமும்
வீடுபடு புகையும்
ஆறுசெல் வளியின் அவியா விளக்கமும்
நாறுகமழ் வீயும் கூறும் இசை முழவும்
மணியும் கயிறும் மயிலும் குடாரியும்
பிணிமுகம் உளப்பட பிறவும் ஏந்தி[22]

என்னும் பரிபாடலடிகள் சிறக்கச் சுட்டுகின்றன.

மேலும், சங்ககால மக்கள் நாள்தோறும் இறைவனிருப்பதாகக் கருதப்படும் இடத்திற்குச் சென்று, அங்கு அருச்சனை செய்வர். கடவுளின்

தன்மை இலக்கியப்படுத்தப்படுகிறது. அதாவது, அக்கடவுளைப் பார்க்கின், அக்கடவுளினது கண்கள், வழிபடுவாரைத் தன்னுடன் பிணித்துக் கொள்ளும் தன்மையனவாகும் எனப்பட்டது. அத்தன்மை,

....பூப் பலியிட்ட கடவுளைக் கண்டாயோ?[23]

எனக் கலித்தொகையடியால் சுட்டப்படுகிறது.

இறைவன், தன் கண்களின் பார்வையினால் தன்னைச் சாரும் அடியார்களை இறுகப் பிணைத்துக் கொள்வான் என்று அக்கால மக்கள் நம்பியதைப் புலவர்கள் தமது பாடல்களில் குறித்துள்ளனர். இக்குறிப்புகளை மனத்துட் கொண்ட ஆழ்வார்கள், இறைவனின் தன்மையினை இன்னும் சற்று மேம்படுத்தியுரைக்க முயல்கின்றனர் எனக் கூறமுடிகிறது.

ஆழ்வார்கள், இறைவனான திருமால், தன்னைச் சார்ந்த அடியார்கள் தம் நினைவினை விட்டு மீளாதவர்களாக இருப்பதற்காக, அவர்தம் நெஞ்சத்தினுள்ளேயே புகுந்து ஆட்கொண்டுவிடும் தன்மையன் என்ற நம்பிக்கையை வைணவ மாந்தர்கட்கு அறிவுறுத்தும் விதமாகப் பாடினர் என்பதற்குச் சான்றாக,

நண்ணித்தொழும் அவர் சிந்தை பிரியாத....[24]

என்ற பெரியாழ்வாரின் வாக்கினையும்,

சோலை மலையென்றேன் என் நெஞ்சம் நிறைய புகுந்தான்[25]

என்ற நம்மாழ்வாரின் வாக்கினையும் இங்குச் சுட்ட முடிகிறது.

இதன்மூலம், இறைவனானவன் தன்னை வணங்குபவர்களின் மனத்தைவிட்டு என்றும் அகலாதிருப்பவன் என்றும், அவனிருக்கும் இடத்தைக் கூறியவுடனேயே இறைவன் மனக்கோயிலில் குடிகொண்டுவிடுவான் என்றும் தாம் கொண்டிருந்த நம்பிக்கையினைத் தமது பாசுரங்களிலும் பொதித்து வைத்தனர் என்று கூறமுடிகிறது. மேலும்,

பூவில் புகையும் விளக்கும்
சாந்தமும் நீரும் மலிந்து
மேவித் தொழும் அடியார்....[26]

என்பதுவும்,

தீ நீர் வண்ணமா மலர்கொண்டு விரை ஏந்தி

தூநீர் பரவித் தொழுமின்....[27]

என்பதுவும், இறைவனை நாவால் துதித்துப் பக்தி வழியில் நின்று தூபம், தீபம், சந்தனம், மலர்கள், தண்ணீர் என்பனவற்றைக் கொண்டு வழிபாடு செய்யும் திருமாலடியார்களின் வழிபாட்டுச் செய்கைகளைச் சங்க இலக்கியங்களின் வழிநின்று பாடிச் சித்திரிக்கப்பட்டனவாகும் எனக் குறிப்பிட இயலுகின்றது.

பெரியதிருமொழியில் 'தூப தீபங்களுடன், அக்னி, தீர்த்தம் என்பனவற்றையும், பல நிறமுடைய சிறந்த மணமுள்ள மலர்களையும், வாசனைப் பொருட்களையும் எடுத்துச் சென்று தொழுங்கள்' என்று திருமாலடியார்கட்கு வேண்டுகோள் விடுக்கும் பாங்கில் திருமங்கையாழ்வார் கூறியிருப்பதும் சங்க இலக்கியத் தாக்கமே எனக் கருதமுடிகிறது.

**இசையுடன் வழிபாடு**

கடவுளை வழிபடும் பொழுது இசைக்கருவிகள் ஒலிக்கப் பாடி வழிபடுவது சங்ககால மரபாகும். தற்காலத்திலும் இவ்வழக்கம் இருந்து வருகிறது என்பது வெளிப்படையாகும். அவ்வாறு, பல இசைக் கருவிகள் ஒலிக்கப் பாடியும், பலவண்ண மலர்களைத் தூவியும் அடியார்கள் வழிபட்டதை நற்றிணையிலக்கியம்,

இன் இயம் கறங்கப்பாடிப்

பன்மலர் சிதறிப் பரவுறு பலிக்கே....[28]

என்ற பாடலடிகளால் குறிக்கின்றது. அவ்வாறு இசைக்கப் பயன்பட்ட கருவிகளுள் யாழும் ஒன்று. யாழில் இசையமைத்துக் கடவுளை வாழ்த்திப் போற்றியமையை அகநானூறு,

செவ்வழி நல்யாழ் இசையினை பையெனக்

கடவுள்வாழ்தி பையுள் மெய்ந் நிறுத்து[29]

என்று பாடுகிறது. இது குறித்துக் கூறும் பரிபாடலும்,

அருங்கறை அறை இசை வயிரியர் உரிகை

ஒருங்கு அமர் ஆயமொடு ஏந்தினர் தொழவே[30]

என்கிறது. அதாவது, வெள்ளத்தைக் கண்டு விருந்து அயரும் மதுரையில் இசைக்கு உரிமையுடைய புலவரும் பாணரும் கூத்தரும் ஒருங்கு புகழ்ந்து இறைவனைப் பாடித் தொழுவது பாடலாக்கம் பெற்றுள்ளது.

இன்னிசையை எழுப்பி, அவ்வாறு இறைவனை வழிபட்டமையைச் சங்கப் பாடல்களின் வழியே அறிந்திருந்த தொண்டரடிப் பொடியாழ்வார்,

ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி
யாழ் குழல் முழவமோடு இசை திசை கெழுமி
கீதங்கள் பாடினர்....[31]

என்று பாடி, இசைகொண்டு இறைவனை அணுகும் முறையாகிய வழக்கத்தினைத் தக்கவைக்க முயன்று செயலையாற்ற முன் வந்துள்ளார் என நுவல முடிகிறது.

**குலத்தோர் சூழச் சென்று வழிபடுதல்**

குழந்தைகளைப் பெரியோர்கள் தம்முடன் அழைத்துச் சென்று ஆலயம் வலம் வந்ததைக் கலித்தொகையானது குறிப்பிடுகின்றது. தன் குலத்தினர் அனைவரும் சேர்ந்து வாழ்த்தி இறைவனை வழிபட்டமையை,

மலைஉறைக் கடவுள் குலமுதல் வழுத்தித்
தேம்பலி செய்த ஈர்நறும் கையன்[32]

என்று ஐங்குறுநூறும் தெரிவிக்கின்றது. மேலும், பரிபாடலும் இதே கருத்தினை உட்பொதிந்துப் பாடுகிறது. பக்திப் பெருக்குடன் தமது சுற்றம் சூழச்சென்று இறைவனைப் போற்றிப் புகழ்ந்தமையினை அவ்விலக்கியம்,

தலை உற வணங்கினேம் பல்மாண் யாமும்
கலி இல் நெஞ்சினோம் ஏத்தினோம் வாழ்த்தினோம்[33]

என்று பாடிச் சுட்டுகின்றது.

கள்ளமில்லாத உறுதி படைத்த மனத்துடன் சுற்றத்தினர் புடைசூழ ஆலயம் வந்து தத்தம் தலை தரையில் படும்படி கிடக்கையாகப் பொருந்தி, திருமாலின் திருவடிகளை வணங்கினர் என்பது இவ்வடிகளடங்கிய அப்பாடற்பகுதியின் கருத்தாகவுள்ளது.

16–ஆம் நூற்றாண்டில் சைவசமயம் தழைக்க அவதரித்த ஸ்ரீ குருஞான சம்பந்தரின் பெற்றோர் ஸ்ரீ குருஞான சம்பந்தரைத் தம்முடன் மதுரைக்குச் சென்று ஸ்ரீ சொக்கநாதரை வழிபட்டமையைச் சைவசமய வரலாறு கூறுவதையும் இங்கு எண்ண வேண்டியுள்ளது.[34]

*பரிபாடலின் இக்கருத்திற்கேற்பப் பெரியாழ்வாரும் தனது பாடலில், அடியார்கள் தமது குடும்பத்தினர் சூழச் சென்று இறைவனை வழிபடுதல் என்னும் அவ்வழக்கத்திற்கு மேலும் பெருமை சேர்க்கும் வகையில், தமது குல மரபினரை மட்டுமின்றித் தம்முடன் தொழும் மெய்யடியார்களையும் தம்முடனேயே ஒருங்கிணைத்து வைத்துக்கொள்ள வேண்டுமென்று தனது பாசுரங்களில் பாடியுள்ளார். இது வழிபாட்டு நிலையிலான ஒரு முன்னேற்றத்தினை முன்வைக்கும் உத்திநிலையாகும் எனக் கருதமுடிகிறது.*

எங்கள் குழாம் புகுந்து
கூடுமனம் உடையீர்கள் வரம்பு ஒழி
வந்து ஒல்லைக் குடுமினோ
நாடும் நகரமும் நன்கு அறிய நமோ
நாராயணாய என்று...
பாடு மனம் உடைப் பத்தர் உள்ளீர் வந்து
பல்லாண்டு கூறுமினே[35]

*என்னும் பெரியாழ்வாரின் பாசுர அடிகள் எண்ணத்தக்கன. அதாவது, உறுதியான உள்ளத்துடன் எங்களுடன் வந்துசேர்ந்து கொண்டு, நாடும் நகரமும் அறியும்படியாகப் பாடி அவனின் திருவடியைப் புகழுங்கள் என்று அடியார் கூற்றில் வைத்துப் பாடுவது சிறப்பாக உள்ளது.*

**அடியார் பெருமை**

*இந்து சமயத்திலுள்ள பெரும்பான்மையான நெறிகளில் தொண்டர்களாகிய அடியார்களின் பெருமை பேசப் பெறுகின்றது. இறைவனை அடைவது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்ட வைணவ அடியார்கள் 'பாகவதர்கள்' என அழைக்கப்பட்டனர். இத்தகைய பாகவதர்களைத் தொழுதால் திருமாலைத் தொழுவதற்குச் சமமாகும் என்பது வைணவ நம்பிக்கையாகும்.*

குலசேகர ஆழ்வார் காலத்தில் ஸ்ரீஅரங்கநாதன் சந்நிதியில் பாகவதர்கள் திரளாகக் கூடி இறைவனின் பெருமைகளைப் பாடிக்கொண்டே ஆடத் திருமுற்றம் சேராயிற்று என்பதாக, அவ்வாழ்வாரே பாசுரம் அருளியிருப்பதை[36]

*எடுத்துக் காட்டுகின்றார் கே.சி.இலக்குமி நாராயணன்.*

**வழிபாட்டில் அஃறிணை**

*உயர்திணையாகிய மனிதர்கள்போல், அஃறிணையாகிய மரங்களும் இறைவனை வழிபட்டதாகப் புனைவதும் உண்டு. இத்தகைய புனைவு இறைவழிபாட்டின் மேன்மையை மக்கட்கு உணர்த்துவதற்கே எனலாம். மரங்களும் இறைவழிபாடு செய்ததாகப் புனையத்தக்கன என்னும் கருத்தில் பெரியாழ்வார்,*

ஒருவன் குழல் ஊதினபோது
மரங்கள் நின்று மதுதாரைகள் பாயும்
மலர்கள் வீழும் வளர் கொம்புகள் தாழும்
இரங்கும் கூம்பும் திருமால் நின்ற நின்ற
பக்கம்நோக்கி அவை செய்யும் குணமே[37]

*என்று பாடுகிறார்.*

*கண்ணன் குழலூதுகிறான். அப்பொழுது அக்குழலிசையின் மகிமையால், மரங்களினின்று தேன் துளிகள் துளிர்த்துப் பாய்கின்றன. அம்மரமும், தனது இறைவனான கண்ணனுக்காக மலர்களை அவனது திருவடியை நோக்கித் தூவுகின்றது.*

*வளைந்த கிளைகளெல்லாம் தன்னைத் தானே தாழ்த்திக் குனிந்து, இறையடியார்களைப் போலவே பணிவுடன் வணங்குகிறது. அடியார்கள் தமது கைகளைக் குவிப்பதுபோலவே, அம்மரமும் தனது கொம்புகளைக் குவியவும் செய்கின்றது. இவ்வாறு, கண்ணன் எவ்வெப்புறங்களில் நிற்பானோ, அவ்வப்புறங்களையெல்லாம் நோக்கி அவை வழிபடுவதாக வருணித்து இவ்ஆழ்வார் வியந்து பாடுகின்றார்.*

**மந்திரம் உச்சரித்து வழிபடுவது**

*மந்திரம் பிழைபடாமல் உச்சரிக்கப்பட்டால் உரிய பலனைத் தரும் என்பது வைதிகர்களின் நம்பிக்கையாகும். சங்க இலக்கியங்கள், வழிபாட்டின் பொழுது மந்திரம் உச்சரிக்கப்படுவது குறித்துப் பேசுகின்றன. மந்திரம் கூறி அடியார்கள் இறைவனை வழிபடுதலைப் பதிற்றுப்பத்துக் குறிக்கிறது. சான்றுக்கு ஒன்றாக,*

கடுஞ்சினம் கடாஅய் முழங்கும் மந்திரத்து
அருந்திறல் மரபின் கடவுட் பேணியர்....[38]

*என்னும் அவ்விலக்கியத்தின் அடிகளைக் குறிக்க முடிகிறது. முரசு அதிர கடுஞ்சினத்தைச் செலுத்தி உச்சரிக்கும் மந்திரத்தினால் அம்முரசில் வீற்றிருக்கும் தெய்வத்தை வழிபட, கருங்கண்பேய்மகள் கைகொட்டி அஞ்சும்படி, தெய்வத்தை வழிபடுவர் என்பதை இவ்வடிகள் உணர்த்துகின்றன.*

*சிவனடியார்கள் வழிபாட்டில் 'ஓம் நம சிவாய' என்னும் ஐந்தெழுத்து மந்திரத்தினை உச்சரிப்பர். ஆனால், திருமாலடியார்கள் வைணவ வழிபாட்டு மந்திரமாக 'ஓம் நமோ நாராயணாய' என்ற எட்டெழுத்து மந்திரத்தினை உச்சரிப்பர். இதனை 'அஷ்டாட்சரம்' (எட்டெழுத்து)என்று போற்றுவர்.*

*வைணவச் சின்னங்களுள் ஒன்றாகப் போற்றப்படும் இம்மந்திரமின்றித் திருமால் வழிபாடு இல்லை எனலாம்.*

*திருமாலின் திருமந்திரங்களாக (1) திரு எட்டெழுத்து, (2) துவயம், (3) சரமஸ்லோகம் என்ற மூன்றும் வைணவத்தில் உண்டு[39] ஆனால், அம்மூன்றனுள் சங்க இலக்கியத்தில் திரு எட்டெழுத்து மட்டுமே குறிக்கப்படுகிறது.*

> *'ஓம் நமோ நாராயணாய நம'* என்ற இவ்வெட்டெழுத்து மந்திரத்திற்கு, அழிவில் பொருள் அத்தனைக்கும் இருப்பிடமாக உள்ள நாராயணனுக்கு அனைத்துத் தொண்டுகளையும் செய்யக் கடவேன் ஆகுக[40]

என்பது பொருளாகும். இத்தகைய மந்திரத்தைத் தான் அறிந்து கொண்டதையெண்ணி மகிழும் திருமங்கையாழ்வார், தான் பாடிய பெரிய திருமொழியில்,

....உய்வதோர் பொருளால்
உணர்வு எனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன் நாடி நான் கண்டு கொண்டேன்
நாராயணா எனும் நாமம்[41]

என்றும்,

நம்முடைய அடிகள் தம் அடைந்தார் மனத்து இருப்பார்
நாமம் நான் உய்ய நான் கண்டு கொண்டேன்
நாராயணா எனும் நாமம்[42]

என்றும் வரும் இத்தகைய அவரது இரு பாசுரக் குறிப்புகளுமே நயமிக்கனவாய் உள்ளன. முதலாவதில், உலகவுயிர்களெல்லாம் பிழைப்பதற்குக் காரணமான, இறைவனின் அருளால், அறிவே உருவாகத் திகழும் திருமாலினை, தான் இருந்த இடத்திலேயே நின்று அறிந்துகொண்டுவிட்டதனால், நன்மை தீமைகளை ஆராய்ந்து, அதன்பின் வழிபாட்டிற்குரியதான 'நாராயணா' என்னும் திருப்பெயரினைக் கண்டுகொண்டுவிட்டதாக அவ்வாழ்வார் பெருமைப்படுகிறார்.

இரண்டாவதான அக்குறிப்பில், தன்னைப் போன்ற எளியவர்களுக்குத் தலைவனான திருமாலானவன், அவனைச் சரணடைந்தாரின் நெஞ்சத்தினின்று நீங்காது நிற்பனவனாதலால், அத்தகைய திருமாலடியார்கள் தவறாது உச்சரிப்பதற்காகவே 'நாராயணா' என்னும் அத்திருப்பெயரைத் தான் அறிந்து கொண்டுவிட்டதாக அவரே மகிழ்ச்சியடைகிறார். ஆயிரம் திருப்பெயர்களைக் கொண்ட திருமாலினது பன்னிரு இன்றியமையாத் திருப்பெயர்களைப் பெருமைப்படுத்திப் பேசும் வகையில் பெரியாழ்வார், கேசவன் முதல் தாமோதரன் வரையிலான பெயர்களைத் தனது பன்னிரு பாடல்களில் வைத்துப் பாடியுள்ளமை குறிக்கத்தக்கதாகிறது.

**வேள்வி வழிபாடு**

உலகிலுள்ள அனைத்துயிர்களும் நலம் பெற்றுச் சிறக்கவேண்டிக் கடவுளை வழிபடக் கூடியவர்கள் வேதியர்கள் ஆவர். இவர்களால் முறையோடு இயற்றப்படும் வேள்வித்தீ எழும்போதெல்லாம், அது அனைவரும் விரும்பும் வண்ணமாகப் புகழ்பொருந்திய ஆவூதிப் புகையாகவே எழுந்ததாகப் பாடும் பதிற்றுப்பத்து,

உருகெழு மரபின் கடவுட் பேணியர்
கொண்ட தீயின் சுடர் எழு தோறும்
விருபே மெய் பரந்த பெரும் பெயர் ஆவூதி[43]

என்கிறது.

**வழிபாட்டின் முந்தைய நிலை**

வேத காலத்தில் திருக்கோயில்கள் இல்லை. சங்க காலத்திலும் இல்லை. இயற்கை வழிபாடே இருந்தது. நிலம், மலை, கடல், திங்கள், கதிரவன் உள்ளிட்டவற்றை வழிபட்டனர்.

சங்க காலத்தில் ஆற்றங்கரையிலும், சோலைகளிலும் தெய்வ வழிபாடு நிகழ்ந்தது. சங்க இலக்கியமாகிய பரிபாடல், திருமால் ஆல், கடம்பு, ஆற்றிடைக்குறை, குன்று முதலிய இடங்களில் வழிபடப்பட்டான் என்பதை,

ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால் வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறு வேறு பெயரோய்
எவ்வயி னோயும் நீயே[44]

எனப் பாடுகின்றது.

வழிபாட்டு நிலைகளுள் ஒன்றான வேள்வித் தீயின் மூலமும் வழிபாடு செய்தல் சங்ககாலத்தில் இருந்து வந்ததாகவும், அதற்குப் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற பெயரே சான்றாகும்[45]

என்று டாக்டர் ந.சுப்புரெட்டியார் கூறுகின்றார்.

ஆழ்வார்ப் பாசுரத்தில் எல்லா உயிர்களும் சிறக்க வாழவேண்டுமாயின் உணவுப் பொருட்களின் உற்பத்திச் செழுமை வேண்டும். அச்செழுமை ஏற்பட,

வேள்வி செய்தல் இன்றியமையாததாகும். அந்நோக்கில், வேதியர்கள் சோம வேள்விகளைச் செய்கிறார்கள். அவ்வாறு அவர்கள் செய்வதனால் நெற்பயிர்களெல்லாம் வயலில் செழித்துத் தோன்றுகின்றன என்ற கருத்தினை முன் வைக்க விரும்பும் திருமங்கையாழ்வார் தனது பெரிய திருமொழியில்,

தூய நான் மறையாளர் சோமுச் செய்ய
நெஞ்சாலி விளை வயலுள் திகழ்ந்து தோன்றும்[46]

என்றவாறு பாடுகிறார்.

வடமொழியில் வல்ல வேத, இதிகாச, புராணச் செல்வத்தைப் பெற்றுள்ள அந்தணர்கள் திருப்புலியூரில் கூடி வேள்வி செய்கின்றனர். அவர்கள் அவ்வேள்வியில் சொரிகின்ற நெய்யினால் எழுந்த ஓமப்புகையானது, வானம் வரை உயர்ந்து செல்கிறது. அவ்வாறு செல்லும் அப்புகையின் உயர்ச்சியானது, தேவருலகத்தையே மறைக்கும் அளவிற்கு இருந்ததாக,

வடமொழி மறைவாணர் வேள்வியுள் நெய்அழல்
வான் புகை போய்
திட விசும்பில் அமரர் நாட்டை மறைக்கும்
தன் திருப்புலியூர்[47]

என்ற நம்மாழ்வார்ப் பாசுரப்பகுதி குறிப்பதை அறியமுடிகிறது.

### நீராடியபின் இறைவழிபாடு

இறைவனை வழிபடத் தொடங்குமுன், நீராடி உடல் தூய்மை செய்துவிட்டு வழிபாட்டிற்கான விளக்கினையேற்ற வேண்டும் என்பது சங்க இலக்கியங்களில் பல இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது. இதற்குச் சான்றாகப் பட்டினப்பாலையில் வரும்,

தொண்டி மகளிர் உண்துறை மூழ்கி அந்தி
மாட்டிய நந்தா விளக்கின் மலரணிமெழுக்காம்
ஏறிப் பலர் தொழ வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்
..............................................[48]

என்ற பகுதியைச் சுட்டலாம். அதாவது, தொண்டி மகளிர் இறைவனை வழிபட விரும்பி, முதலில் நீர்த்துறையில் மூழ்கித் தன்னைத்

தூய்மைப்படுத்திக் கொள்கின்றனர். அதன்பிறகு விளக்கேற்றித் தொழத் தொடங்குகின்றனர் என்கிறது.

பெண் ஆழ்வாராகிய ஆண்டாள், திருமால்மீது கொண்ட பக்தியினால் மிகுந்த அன்பானது காதலாகி, அக்காதல் நிறைவேற அவள் முப்பது நாட்கள் வழிபாடு நிகழ்த்துகிறாள். இதனைப் பாவைப்பாட்டுச் சுட்டுகிறது. வைகறைப் பொழுதில் எழுந்து நீராடியபின், இறைவனைத் தொழுவதற்குச் செல்லும் அத்தூய பணியினை,

நாட் காலே நீராடி[49]

என்று நினைவுபடுத்தி ஆழ்வார்ப் பாசுரம் சுட்டுகிறது.

**கூட்டு வழிபாடு**

கூட்டு வழிபாடு என்பது நல்ல பலனளிக்கும் என்பது மக்களிடையே தொன்றுதொட்டு நிலவிவரும் நம்பிக்கையாகும். இதனைச் சங்கப்பாடல்கள் சுட்டியுள்ளமை அறிந்ததே.

கானவனாகிய தலைவன், ஒரு காட்டுப் பசுவின்மீது அம்பினைத் தொடுத்து வீழ்த்த எண்ணுகின்றான். ஆனால், அந்த அம்பானது குறி தவறிப் போய்விடுகிறது. அவ்வாறு குறி தவறிப் போனமைக்குக் காரணம் என்னவெனச் சிந்திக்கிறான். இதுவரை அவன் குறி பார்த்து எய்தியவை தப்பியதேயில்லை. எனினும், ஆனால் அப்பொழுது குறி பிழைக்கக் காரணம் மலையுறை தெய்வத்திற்கு ஏற்பட்ட சினமே என்று எண்ணுகிறான்.

தெய்வத்தின் சினம் தணியும் வண்ணம் மழை பெய்தால், அத்தெய்வம் சினம் தணிந்து அதன் அருள் கிட்டும் என நம்புகிறான். இந்த நம்பிக்கையில், தன் சுற்றத்தினர் அனைவரையும் ஒருங்கிணைத்துக் கொண்டு அங்குச் செல்கிறான். அம்மலைத் தெய்வத்தின் முன் கூட்டமாய் நின்று பலியிட்டு அனைவரும் வழிபடுகின்றனர். இக்கூட்டுவழிபாடு குறித்த செய்தியை நற்றிணை,

அணங்கொடு நின்றது மாலை வான் கொள்க எனக்
கடவுள் ஓங்குவரை பேண்மார் வேட்டு எழுந்து
கிளையொடு மகிழும் குன்ற நாடன்[50]

என்று விவரிக்கிறது. மேலும், கூட்டு வழிபாடு குறித்த பிறிதொரு வகையிலான விவரிப்பினையும் பரிபாடல் பின்வருமாறு தருகின்றது.

காமரு சுற்றமொடு ஒருங்குநின் அடியுறை
யாம் இயைந்து ஒன்றுபு வைகலும் பொலிக! என
ஏமுறு நெஞ்சத்தேம் பரவுவதும்....[51]

என்பன அவ்வடிகளாகும்.

பாண்டிய மன்னன் தன் மனைவியோடும் அமைச்சர் குழாத்துடனும் சேர்ந்து வந்து வழிபட்டதை,

சுடரொடு சூழ்வரு தாரகை மேருப்
புடைவரு சூழல் - புலர் மாண்வழுதி[52]

என்று அனைவரும் வர அந்நாட்டு மக்களும், நகர மாந்தர்களும் புடைசூழக் கோயிலை வலம் வருகின்றான் அவன் என்பது மேற்சுட்டிய பாடலின் கருத்தாகிறது. அவ்வாறு வலம் வருவதைக் காணும் காட்சியானது, சந்திரன் விண்மீன்களோடு மேரு மலையினைச் சுற்றி வருவது போன்றுள்ளதாக உவமிக்கப்பட்டுள்ளமை குறிக்கத்தக்கது.

கூட்டு வழிபாடு பற்றிய சங்க இலக்கியக் கருத்துகள் ஆழ்வார்களால் உள்வாங்கிக் கொள்ளப்பட்டன. எனவேதான், சங்கப்பாடல்களின் அதே சுவையும் கருத்தும் குன்றாமல் ஆழ்வார்களும் தமது பாசுரங்களைச் சரியாகப் பாடமுடிந்தது எனக் கூறமுடிகிறது.

திருமாலினை வழிபடும் பக்தன், தனிமையில் சென்று வழிபடுவது ஒருபுறமிருக்க, உணர்வினால் ஒன்றுபடுபவர்களையும் வழிபடுவது சிறப்பு என்பதாக ஆழ்வார்கள் கருதினர்.

வைணவத் தலமான ‘திருக்கோட்டியூர்’ என்னும் தலமானது, இத்தத்துவத்திற்கு அடிப்படையான பெயரினைக் கொண்டே திகழ்கிறது. இதனை உறுதிப்படுத்துமாறு ஆண்டாள் நாச்சியார், பக்தர்கள் பலரைத் தன்னுடன் அழைத்துச் சென்று அத்தலத்தில் வழிபட்ட சிறப்பினை,

சென்று நாம் சேவித்தால்

எல்லாரும் போந்தார்

நின் பள்ளிக் கட்டிற்கீழே சங்கம் இருப்பார்போல்[55]

*என்று திருப்பாவையில் பாடிச் சங்க இலக்கியங்களிலுள்ள வழிபாட்டு மாண்பினைப் போற்ற முன்வந்துள்ளார் என்று கூறமுடிகின்றது. தலைமைப் பண்புடைய அப்பெண், பலரையும் நீராடி வழிபட வருமாறு அழைக்கின்றாள். வைகறையில் நீராடச் செல்லும் தலைவியான அவள், தான் நீராடுவதைப் போன்றே தனது தோழியரும் நீராடி, பின் அவர்களனைவரும் ஒருங்குகூடி வழிபடும் வண்ணம், தனது தோழியரைத் துயிலெழுப்பச் செல்வதாகப் பக்தி மேலிடப் பாடியுள்ளார் ஆண்டாள்.*

## ஆலய வழிபாடு

*இறைவழிபாட்டினை அனைத்து மக்களும் அவரவர்க்கேற்றதொரு நெறியினைக் கொண்டு நிகழ்த்தி வருகின்றனர். இது, அவரவர் மன இயல்புகளுக்கு ஏற்றவாறும், வாழ்க்கைச் சூழலுக்கு ஏற்பவும் அமையுமென்பது வெளிப்படையான உண்மையாகும்.*

இறைவனை வழிபடுவோர், தம் மனத்திற்கிசைந்த ஏதேனும் ஒரு வடிவில், மெய்யன்போடு வழிபட்டால், அவ்வடிவில் மனத்தில் தோன்றி இறைவன் அருள் புரிவான் என்பது நம்பிக்கையாகும். மேலும், இறைவனிடமான மெய்யன்பு மட்டுமே அடியார்களை அவனுடன் இணைக்குமென்பது கா.சு.பிள்ளை போன்றோரின் கருத்தாகும்.[56]

*இத்தகைய தன்மையைப் பொய்கையாழ்வார்,*

தமருகாந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே

தமருகந்தது எப்பேர் மற்றப்பேர்....[57]

*என்றும், பூதத்தாழ்வார்,*

அன்பே தகளியாக ஆர்வமே நெய்யாக

இன்புறுகுஞ் சிந்தை இடுதிரியா - நன்புருகி

ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணர்க்கு

. . . . . . . . . . . . . . . .[58]

*என்றும் குறித்துள்ளனர்.*

மனிதனின் செயல்பாடுகள் அனைத்தும் அகத்துறுப்பு, புறத்துறுப்பு என்ற இரண்டின் அடிப்படையிலானவை எனலாம்.

> புறநிலையில் மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன ‘புறத்துறப்பு’ என்றும், அன்பு என்பதன் அடித்தளமாக விளங்கக் கூடிய ‘மனம்’ என்பது ‘அகத்துறுப்பு’ என்றும் வழங்கப்படுகிறது. அகத்தினால் வழிபடுவது அகவழிபாடு என்பதும், ஐம்பொறிகளால் வழிபடுவது புறவழிபாடு[59]

என்பதும் தா.மா.வெள்ளைவாரணாரின் கூற்றாகும்.

> வைணவ சமயத்தைப் பொருத்தவரை, அகவழிபாடு என்பது ஆழ்ந்த பக்தியுடனிருந்து, திருமாலின் அட்டாச்சர மந்திரத்தை உச்சரிப்பதாலும், தியானம் செய்வதன் மூலமும் நிகழ்கிறது எனக் கூறப்படுகிறது. புறவழிபாடு ஐம்புலன்களின் இயக்கங்களுடன் செய்யப்படுவதாகும். அகவழிபாடு, புறவழிபாடு என்ற இவ்விரண்டிற்கும் இறைவனின் வடிவமும், பக்தியும், பிரபத்தியும் அடிப்படையாக அமைவன[60]

என்கிறார் தா.குருசாமி தேசிகர்.

இத்தகைய நிலைகள் பற்றியும், பக்தியால் இறைவனை வழிபடுதல் குறித்தும் ஆழ்வார்ப் பாடல்களும், சங்கப் பாடல்களும் விளக்கிக் காட்டுகின்றன.

திவ்யபிரபந்தம் மூலமாக அறியும் குறிப்பு என்னவெனில், கோயிலிருக்குமிடமெல்லாம் தேடிச்சென்று வழிபடுதல், திருமாலின் ஆலயத்தைத் தூய்மை செய்தல், திவ்யதேசப் பெருமைகளைப் பாடிப்பரவுதல் என்பவை வைணவ அடியார்களின் இன்றியமையா நடைமுறை என்பது இலக்கியங்களின்வழிப் பெறப்படுகின்றது.

### அனைத்திலும் இருப்பவன்

‘இறைவன் என்பவன் அனைத்திலும் இருப்பவன்’ என்ற இருக்குவேதக் கருத்தினைப் பரிபாடல் எடுத்துரைக்கிறது. பரிபாடலே, திருமாலை மிகுதியான இடங்களில் போற்றிப் புகழ்கின்றது.

*இறைவன் உயிர்கள் அனைத்தையும் தன்னுள் அடக்கியவனாக இருக்கிறான். தன் வயிற்றில் அடக்கியதைப் பின்பு உமிழ்ந்து உலக உயிர்கள் தோற்றத்திற்குக் காரணனாக இருக்கிறான். மேலும், உலகப் பொருட்கள் அனைத்திலும் உள்ளுறைப் பொருளாக இருந்து விளங்கி நிற்பவன் என்னும் கருத்தினை,*

பூவினுள் நாற்றம்நீ
தியினுள் தெறல்நீ.....[61]

*எனப் பரிபாடல் கூறுகின்றது.*

*சங்க இலக்கியமாகிய பரிபாடல் கூறியுள்ளதை அடிப்படையாக ஏற்றுக்கொண்ட திருமங்கையாழ்வார் தனது பெரிய திருமொழியில்,*

பிண்டமாய் விரிந்த பிறங்கு ஒளி அனலும்
பெருகிய புனலோடு நிலனம்.....[62]

*என்று பாடிப் பரிபாடலில் வரும் அக்கருத்தினைத் தான் ஏற்றுக்கொண்டதை அடையாளப்படுத்துகிறார் என்று துணியமுடிகிறது.*

*எல்லாமாகி நிற்கும் இறைப்பண்பினைத் திருமங்கையாழ்வார் ஆய்ந்து, அதற்கொப்பத் தனது கருத்தினை வெளிப்படுத்துகின்றார். பிண்ட வடிவானது அண்டமாக விரிவடைந்து, ஒன்றன்பின் ஒன்றாக மிகுந்த ஒளியுடைய நெருப்பாக, நீர், நிலம், மேகம், ஏழு கடல்கள், மலை, வானம் என்று தானேயாய் இருக்கும் பெருமானே திருமால் என்று கருதுகின்றார். இப்படி 'அந்தர்யாமி'யாய் இருக்கும் திருமாலின் தனிச் சிறப்பினைக் கீரந்தையார் என்ற சங்கப் புலவர்,*

நின்நிலை தோன்றும் நின் தொல் நிலைச் சிறப்பே[63]

*என்று பாடி மகிழ்கின்றார். இளமை, முதுமை என்ற நிலையினை இறைவன்மீது ஏற்றிப் போற்றாமல் உயிரில் உயிராகத் திகழும் இறைவனாகிய திருமாலே தொன்மையானவன் என்று சுட்டிப் பாடுகின்றார்.*

*உடலையும் உயிர்களையும் வேறுபடுத்திப் பாராத தத்துவம் சங்க இலக்கியங்களில் உண்டு. குறிப்பாக பரிபாடலில் உண்டு என்ற கருத்தினையேற்கும் ஆழ்வார்கள், உடம்பிற்குரிய மனத்துடனான*

தொடர்பினை - அதாவது 'ஆத்மபாவம்' என்பதனை உணர்ந்து, பின் அது தொடர்பாகத் தமது பாசுரங்களைப் பாடினர் என எண்ணமுடிகிறது. வைணவம் வளர்ச்சியுற்ற பிற்காலத்தில் இக்கருத்தின் அடிப்படை மேலும் விரிவுப்படுத்தப்பட்டது எனவும் கூறமுடிகிறது.

**மூவராகிய மூர்த்தி**

'மூன்று' என்பதில் திருமாலின் சிறப்புகள் பலவாறாகப் பேசப்படுகின்றன. திருமாலானவன் மார்பில் ஸ்ரீவத்சத்தையும், கையில் மணியையும், கழுத்தில் கவுத்துவ ஆரத்தையும் என மூன்று அணிகலன்களையுடையவன் என்பர். அவனது அவதார நிலைகளும் 1. அவதாரநிலை, 2. ஆவேச நிலை, 3. அம்சநிலை என்ற மூவகைப்படும். அவனது கோலங்களும் 1. நின்ற கோலம், 2. இருந்த கோலம் 3. கிடந்தகோலம் என மூவகைப்படும். ஆழ்வார்களில் 1. பொய்கையாழ்வார் 2. பூதத்தாழ்வார் 3. பேயாழ்வார் என்ற மூவரும் முதலாழ்வார்களாகப் புகழப்படுகின்றனர். இதுபோன்று, மூன்று என்ற சிறப்புத் திருமாலுக்கு நிரம்ப வழங்கப்படுவது உண்டு எனலாம்.

படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களைச் செய்பவர்களுக்குள்ளிருந்து இயங்கி, அம்மூவரையும் திருமாலே அருளாட்சி செய்கின்றான் என்பதாகப் பரிபாடல்,

முதல்முறை, இடைமுறை, கடைமுறை தொழில்
பிறவாப் பிறப்பு இவை;[64]

என்ற அடிகளில் கூறுகிறது. இதன்மூலம், திருமால் முதலாகவும், இடையாகவும், கடையாகவும் தோன்றிப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் செய்பவனாக இருக்கிறான் என்பதாக அவ்விலக்கியம் உணரவைக்கிறது. அத்திருமால் பிறவாத பிறப்புக்களே இல்லை என்பதாகப் பரிபாடலடிகள் குறிப்பிடுகின்றன.

*முத்தொழில்களுக்கு உரியவர்களை உள்ளிருந்து ஆள்பவன் திருமால் என்ற கருத்து நுட்பத்தினைச் சித்திரிக்கும் பரிபாடற் கருத்தினை உள்வாங்கிக் கொண்ட நம்மாழ்வார்,*

மூவராகிய மூர்த்தியை முதல் மூவர்க்கும் முதல்வன் தன்னை[65]

*என்பதில் திருமாலினை 'ஆயன்' எனப் புகழ்வதுடன், அவன் மூவராகியும் நிற்பவன் என அழகுறப் பாடுகின்றார்.*

**திருமகளுக்கு மார்பில் இடந்தந்தவன்**

*திருமால் தனது மார்பினில் திருமகளைத் தாங்கினான் என்பது புராணம். அவ்வாறு தாங்கப்பட்ட திருமகளும், 'அகலகில்லேன்' என்று அவன் மார்பில் விரும்பித் தங்கினாள் என்பதும் கருத்து. இக்கருத்தினைப் பரிபாடல்,*

மாவுடை மலர் மார்பின்....[66]

*என்றுரைக்கின்றது.*

**ஆதிசேடன்**

*இறைவனுக்குப் படுக்கையாக இருக்கும் ஆதிசேடன் ஆயிரம் தலைகளையுடையவன் என்பதை இளவெயினனார் என்ற சங்கப் புலவர்,*

ஆயிர அணர்தலை அரவு.....[67]

*எனக் குறிக்கின்றார். இதனையே, தனது பாசுரத்தில் சுட்டமுனையும் குலசேகராழ்வார்,*

ஆயிரங்கள் ஆர்ந்த அரவரப் பெருஞ்சோதி அனந்தன் என்னும்[68]

*என்று பாடி, ஆயிரம் தலைகளுடைய அரவின்மேல் பள்ளி கொண்டவனான திருமாலைப் போற்றுகின்றார்.*

**மேனி நிறம்**

*திருமாலின் மேனிநிற அழகினை வருணிக்கும் பரிபாடல், அவ்விறைவன் நீலமேகவண்ணன் என்பதை,*

காரிருள் மயங்கிய மணிமேனியன்[69]

*என்றும்,*

கார் மலர்பூவை கடலையிருள் மணி....[70]

என்றும் கூறிப் பாராட்டுகின்றது. அதாவது, திருமாலானவன் கடல், வான், குவளைமலர் என்னும் இவற்றின் நிறமாகிய நீலவண்ணமாகவே திகழ்கிறான் என்று கூறி, அவனது மேனியழகினை வருணிக்கின்றது. இதனையடியொற்றித் திருமங்கையாழ்வார்,

கருமாமுகில் போல் நிறத்தன்....[71]

எனத் திருமாலின் நீலவண்ண மேனியழகை வருணிக்கின்றார்.

மேகத்தினை உவமை காட்டியபின்,

ஆழி வண்ணன்.....[72]

எனக் கடலினையும் உவமைகாட்ட அவர் தவறவில்லை. இக்கருத்தினைத் திருமழிசையாழ்வாரும் ஏற்று,

கண்டுகொள் கண்டாய் கடல் வண்ணார்[73]

என்பதாக வருணித்துப் பாடிச் செல்கிறார்.

**திருவடிச் சிறப்பு**

திருமாலின் திருவடிகளுக்கு உள்ள ஏற்றத்தினைச் சங்கப் பாடல்கள் காட்டுவதை அறியமுடிகிறது. திருமாலின் திருவடிகளானவை மறுபிறப்பினை அழிக்கக் கூடியதான திருவடிகளாகும் என்பது வைணவம். அத்தகைய திருவடிகளைப் பாடி, அவனைச் சரண் புகுதல் வேண்டும். அவனது குற்றமில்லாத திருவடிப் பேறானது நல்வினை, தீவினைகளைப் போக்கி வீடுபேறளிக்கும் என்ற கருத்து,

மாஅயோயே! மாஅயோயே
மறுபிறப்பு அறுக்கும் மாசு இல்சேவடி[74]

எனச் சங்ககாலத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இக்கருத்தினை ஆதரித்த நம்மாழ்வார்,

கண்டேன் கமலமலர்ப் பாதம் காண்டலுமே
விண்டே யொழிந்த வினையாயின வெல்லாம்[75]

எனத் தனது பாசுரத்தில் பாடுகின்றார். தாமரை போன்ற திருமாலின் திருவடிகளானவை, எக்காலத்தும் தொழப்பட வேண்டியவை என்பதும், அவனது திருவடியை கண்டதுமே நல்வினை, தீவினை என்ற இரண்டும் பக்தனைவிட்டு அகன்றுவிடும் என்பதும் ஆழ்வார்களின் தளராத

நம்பிக்கையாகும். அவர்களது இந்த நம்பிக்கையானது, திருமால் வழிபாடு தொடர்பான சங்கப் பாடல்களைப் படித்த பின்பே மிகுதியானது எனக் கூறலாம்.

“மாம், ஏகம், சரணம் வ்ரஜ” என்று கீதையில் இறைவன் தன் திருவடியைக் காட்டி, ‘என்னிடம் சரணடைந்தவரைக் காக்கிறேன்’ என்று கூறுவதாக வரும் தத்துவத்தை, இப்பாசுரத்தின்வழி நன்கு தெளிவாக்க நம்மாழ்வார் விரும்புகிறார் எனக் கூறமுடிகிறது.

மேலும், கண்ணனின் திருவடிகள் பற்றுதற்கு மிகவும் ஒப்பற்றனவாக, நல்லதொரு புகலிடமாக விளங்கும் என்றும், அப்படித் திருவடிகளைச் சரணடைந்தோர்க்கு வினை நீக்கம் ஏற்பட்டு வீடுபேறு கிட்டும் என்றும் விளக்கும் வகையில் அவரே,

கற்றார்க்கு ஓர் பற்றாகும் கண்ணன் கழலினை[76]

என்று பாடுவதையும் சுட்டமுடிகின்றது.

**நான்கு வண்ணங்கள்**

திருமாலின் மேனி வண்ணம் குறித்துப் பாடும் சங்க இலக்கியங்களுள்ளும் பரிபாடல் முதலிடம் வகிக்கிறது எனக் கூறலாம். திருமாலை நால்வராகப் போற்றிப்பாடும் இவ்விலக்கியம், அந்நால்வரின் வெவ்வேறு வண்ண நிலையில் வைத்து அவ்விறைவனைப் போற்றுகின்றது.

கரியவனாக வாசுதேவனையும், வெண்ணிறத்தனாகப் பலதேவனையும், பசும் பொன்னிறத்தனாகச் சங்கருடனையும், பசுமை நிறத்தையுடையவனாக அனிருத்தனையும் இலக்கியங்கள் பாடியுள்ளன. திருமாலானவன் ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு நிறத்தைக் கொண்டவனாக இருப்பவனெனச் சித்திரிக்கப்படுவது தனித்துவமிக்கதாகும். இச்சித்திரிப்பு,

செங்கண் காரி! கருங்கண் வெள்ளை!

பொன் கண் பச்சை! பைங்கண் மாஅல்[77]

எனப் பரிபாடலில் பதிவாகியுள்ளது.

திருமங்கையாழ்வார் வீரசயனத்திலிருக்கும் திருவிந்தளூர் பரிமள ரெங்கனைக் காண வருகின்றார். அவ்வாறு வரும்பொழுது, கோயிற்கதவுகள் மூடப்பட்டிருந்தன. இதனால் வருத்தமுற்ற திருமங்கையாழ்வார், இறைவனைக் காணாத ஏக்கத்தில், அவன் எப்படி இருப்பான் என்றும், எவ்வண்ணனாக இருப்பான் என்றும் ஊகித்துச் சுவைக்க எண்ணுகின்றார். அந்த ஆவலில்,

பன்னைவண்ணம் பாலின் வண்ணம், முழுதும் நிலைநின்ற
பின்னைவண்ணம் கொண்டல்வண்ணம், வண்ணம் எண்ணுங்கால்
பொன்னி வண்ணம் மணியின் வண்ணம் புரையும்திருமேனி
இன்ன வண்ணம் என்று காட்டீர் இந்தளூரீரே[78]

என்று பாடுகிறார். திருமாலானவன், கிருதயுகமாகிய முதல் யுகத்தில் பாலின் நிறமான வெண்மையாய் இருப்பான். அதற்குப் பிந்திய நிலையில் அதாவது, கலியுகத்தில் மேக நிறத்தைக் கொண்டிருப்பான் என்ற கருத்தை ஆதரிக்கின்றார்.

"பொன்னிறத்தையும், நீலமணி நிறத்தையும் ஒத்திருப்பவன் எனப் பேசப்படும் அவன், இந்த வண்ணத்தன் தான் என நான் அறிந்துகொள்ளுமாறு எனக்கு காட்டியருள்வாயாக" என்று அவனிடமே மன்றாடிக் கேட்டுப் பாடுவது பக்திச்சுவை மிக்கதாகவுள்ளது. இச்சுவையானது, திருமால் குறித்த சங்கப் பாடல்களை அடிப்படையாகக் கொண்டது எனக் கூறமுடிகிறது.

**வீட்டுலகம் பெறுதல்**

மனிதரனைவரும் இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் வேண்டி இறைவனைத் தொழுது வணங்குதல் என்பது இயல்பு. 'வீடுபேறு வேண்டுதல்' என்பது முதன்மையானதாகும். 'வீடுபேறு' என்பதைப் பக்தர் எவரும் தான் விரும்பிய அளவிலேயே பெற்றுவிட இயலாது. வீடுபேறு வேண்டுமென எண்ணி மகிழ்வதே பேரின்பம் எனப்படுகிறது. அப்பேரின்பமானது, எளிதில் கிட்டாது. அது எம்பெருமானின் அருளாலேயே, குறிப்பாக, சுவர்க்கத்தை அவனே விரும்பியளித்தல் வேண்டும் என்ற கருத்துச் சங்ககாலத்திலிருந்தது. இதற்குச் சான்றாக,

நாறு இணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீடு பெற துறக்கம்[79]

என்று பாடும் இளம்பெருவழுதியாரின் அடிகளைச் சுட்டமுடிகின்றது. ஆதலால், சங்ககாலத்தில் வீடுபேறு வேண்டுதலே, பிற எந்த வேண்டுதல்களிலும் முதன்மையானதாகக் கருதப்பட்டமை வெளிப்படுகின்றது.

பிற்கால வைணவர்கட்கும் இக்கருத்தில் மாறுபாடு தோன்றவில்லை. ஆதலால், வீடுபேறு வேண்டும் முதன்மையான குறிக்கோளினைத் தத்தம் பாசுரங்களில் வைத்து அவர்கள் பாடிச் சிறந்தனர் எனலாம். ஆண்டாள் மற்றும் பிற ஆழ்வார்ப் பாசுரங்களிலும் இக்கருத்து நன்கு இழையோடுவதை அறியமுடிகிறது. இதற்குச் சான்றாக,

படி மன்னு பல்கலன் பற்றோடு அறுத்து ஐம்புலன் வென்று
செடி மன்னு காயம் செற்றார்களும், ஆங்கு அவனை இல்லார்
குடி மன்னும் இன்சுவர்க்கம் எய்தியும் மீள்வார்கள் மீள்வு இல்லை
கொடி மன்னு புல்உடை அண்ணல் கழல்கள் குறுகுமினோ[80]

என்ற தம்மாழ்வாரின் பாசுர அடிகளைச் சுட்டமுடியும். இவை, எம்பெருமானைப் பற்றாவிட்டால் வீடுபேறு கிட்டாது; அவனருள் இல்லையெனில், கடுந்தவமியற்றித் துறக்கத்தை அடைந்தாலும், அங்கிருந்து மீண்டும் இப்பூவுலகிற்கு வருவர். ஆதலால், பிறப்பின்மை தவிர்க்கவியலாதது ஆகிவிடும். எனவே, திருமாலின் கழல்களைப் பற்றினால் மீண்டு வருதலில்லா நிலையான 'வீடுபேறு' பெறலாம் எனக் குறிக்கின்றார். ஆதலால், இப்பாசுர அடிகளானவை இளம்பெருவழுதியாரின் கருத்தினை அவ்வாறே அடியொற்றியன எனக் கூறமுடிகின்றது.

சங்க காலத்திலேயே வேர் விட்டிருந்த சமயக் கொள்கைகள் பல, பிற்கால வைணவத்திலும் ஏற்கப்பட்டன என்பதை அறியமுடிகிறது. இக்கொள்கைகள் மேலும் பரிணமிக்கும் நிலையில் ஆழ்வார்ப் பாசுரங்கள் பாடப்பட்டுள்ளன என்பதையும் கூறமுடிகிறது.

இறைவனின் முழுமுதற்தன்மையினை வேதங்கள் உரைக்குமாறு போலவே, சங்க இலக்கியங்களும் சுட்டுகின்றன. பரிபாடலில் வரும்,

அந்தணர் அருமறைப் பொருள்

. . . . . . . . .பணிந்தமை கூறும்[81]

என்ற அடிகள் எண்ணத்தக்கனவாய் உள்ளன. இதனால், வைணவத்தின் தொன்மையும் சிறப்பும் பெறப்படுகிறது.

வேதப் பகுதிகள் பலவற்றைச் சான்று காட்டியே பெரியாழ்வார், மதுரையில் பல் சமயச் சான்றோர்களிடம் வாதிட்டு, நாராயணனே முழுமுதற்பொருள் என்று கூறி, தனது கருத்தினை நிலைநாட்டினார் என்பர். திருமாலின் பரத்துவத்தைப் பலரும் அறிந்து மகிழுமாறு வாதம் செய்து நிலைநாட்டியதற்காகப் பாண்டிய மன்னரிடம் பொற்கிழி பெற்றுப் ‘பட்டர்பிரான்’ என்ற பட்டமும் அவர் பெற்றார் என்ற குறிப்பானது வைணவத்தின் வளர்ச்சியைக் காட்டுவதாக உள்ளது.

**மாயோன் மேய மைவரை உலகம்**

தொல்காப்பியத்தில் ஐவகை நிலங்களுக்குமான கடவுள் பற்றிய குறிப்புகள் உள்ளன. பாலை நிலத்தில் ‘கொற்றவை’ என்ற பெண்தெய்வம் வணங்கப்படுகிறாள். மாயோன், சேயோன், வேந்தன், வருணன் என்ற பெயர்கள் பிற நான்கு நிலங்களுக்குமானவை. ‘மாயோன்’ என்று தொல்காப்பியரால் குறிக்கப்பட்ட தெய்வம், பின்னர்த் திருமாலைக் குறிப்பதற்காயிற்று என்பர்.

மாயோன் என்பது மாயச்செயல்கள் பல செய்துகாட்டிப் பிறரை வியக்கவைத்த கண்ணனைக் குறிக்கும் என்பது கருத்து. மேற்சுட்டியவாறு,

மாயோன் மேய மைவரை உலகம்[82]

என்ற தொல்காப்பிய நூற்பாவின் அடியில் இடம்பெற்றுள்ளது. இங்கு, காடும் காடு சார்ந்த இடமுமான முல்லை நிலத்தில் பசுக்களைப் போற்றிப் பாதுகாக்கும் ஆயர்குலச் செல்வனான கண்ணன் வழிபாடு விளங்கியுள்ளது என்பதை அறியமுடிகிறது.

வழிபடு தெய்வம் நிற் புறங்காப்ப[83]

என்பதில் ‘வழிபடு தெய்வம்’ என்று குறிக்கப்பட்டது. அவரவர் வாழும் இடங்களான அவ்வந்நிலப்பகுதியில் அவர்கள் வழிபட்ட கடவுளைக் குறித்ததாகக் கொள்ளலாம்.

ஒவ்வொரு நிலத்திற்குமான கருப்பொருள்களில், தெய்வம் தொல்காப்பியரால் முதன்மைப்படுத்தப்பட்டுள்ளது. தெய்வம் என்பது தொடங்கிப் பின் உணவு, மா, மரம், புள், பறை என்று வரிசைப்படுத்தும் அவர், மக்களுக்கு உணவு என்பது தலையாயது எனினும் அவ்வுணவுக்கும் முதன்மையானது தெய்வமே எனக் கருதி, உணவு என்பதை அதன்பின்னர் வைத்தார் எனலாம். இது, அக்கால மக்களின் கடவுள் நம்பிக்கையைத் தெளிவாகக் காட்டுவதாகவுள்ளது. கண்ணபிரானையே பரதெய்வமாகக் கொண்டு, அவனின் குழந்தைப் பருவச் செயல்களிலே தமிழ் மக்கள் ஈடுபட்டு வந்தனர் என்பதாகப் பழந்தமிழ் இலக்கியங்கள் சுட்டுகின்றன. பாடாண் திணையில் காமம் குறித்துப் புகழ்தலும் வாழ்த்துதலும் உண்டு. இது கடவுள் மாட்டும் விலக்கப்படாது என்பது கருத்து. இதனைத் தொல்காப்பியர்,

காமப்பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்[84]

எனக் கூறுகிறார். தெய்வக் குழந்தையாகிய கண்ணனிடம், ஆய்ப்பாடி மகளிர் கொண்ட காதலையும், அவனது பருவச் செயல்பாடுகளையும் பெரியாழ்வார் தனது பாசுரங்களின்வழி நன்கு அனுபவித்துப் பாடுகின்றார் என்பதை உணரமுடிகின்றது.

முதலாவதாக, தாயாக யசோதா பாவனையிலும், இரண்டாவதாக, கண்ணனைக் குறித்த ஆய்ச்சியர் நிலையிலும் மூன்றாவதாக, கண்ணனிடம் காதல் கொண்ட கன்னியரின் நிலையில் நின்றும், நான்காவதாக, அக்கன்னியரைப் பார்த்து அவர்தம் நிலையைக் கண்டு அக்கன்னியரிடம் இரங்கி நின்றும் அருள்வழங்கும் நிலையிலும் இத்தெய்வம் குறித்த பாசுரங்கள் அமைவதைக் காணமுடிகிறது.

*பாசுரங்களில் கண்ணனின் அவதாரச் சிறப்பினை அதாவது, கண்ணன் பிறந்த செய்தியினைக் கேட்டு மகிழ்ந்து அறிவழிந்த ஆய்ச்சியர் செய்த செயல்பாடுகளைப் பெரியாழ்வார்,*

ஓடுவார் விழுவார் உகந்து ஆலிப்பார்[85]

*என்றும்,*

. . . . . .செறிமென் கூந்தல் அவிழத் திளைத்து எங்கும்
அறிவு அழிந்தனர் ஆய்ப்பாடி ஆயரே[86]

*என்றும் பாடுகிறார்.*

*ஆநிரை மேய்த்தது, குருந்தொசித்தது உள்ளிட்ட, தெய்வக் குழந்தையாகிய கண்ணனின் செயல்களைச் சங்கப் பாடல்கள் சுட்டுவதைக் காணமுடிகிறது.*

*பெரியாழ்வார், திருவிளையாடல்களைப் பாடுகின்றார். மேலும், கண்ணனின் இச்செய்கைகளுக்காக ஆய்ச்சியர் வந்து யசோதையிடம் முறையிடுவதையும் பாசுரங்களில் அவரே குறித்துள்ளார். பெரியாழ்வார் கண்ணனின் அருட்செயல்களை,*

. . . .உறிஞ்சி உடைத்திட்டு போந்து நின்றான்
அருகு இனத்தார் தம்மை அநியாயம்....
செய்வதுதான் வழக்கோ? அசோதாய்[87]

*என்றும், கன்னியர்களின் நிலையை,*

குழல்களும் கீதமும் ஆகி எங்கும் கோவிந்தன்
வருகிற கூட்டம் கண்டு
மழைகொலோ வருகின்றது என்று சொல்லி
மங்கைமார் சாலக வாசல் பற்றி
நுழைவனர், நிற்பனர் ஆகி எங்கும் உள்ளம்
விட்டு ஊண் மறந்து ஒழிந்தனர்[88]

*என்றும் பாடுகிறார். பெரியாழ்வார்ப் பாசுரங்கள் 'காமப்பகுதி கடவுளும் வரையார்' என்ற தொல்காப்பியர் நூற்பாவிற்கேற்ப அமைந்திருப்பதைக் காணமுடிகிறது.*

இவற்றை நோக்கும்பொழுது, தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே திருமால் வழிபாடு தமிழகத்தில் நன்கு வேரூன்றியிருந்ததையும், பின் ஆலெனத் தழைத்துப் பரவியதையும், சங்க நூல்களின் வழி அறியமுடிகின்றது.

திருமால் வழிபாட்டினைப் பொருத்தவரை, தொல்காப்பியரது கருத்தினைச் சங்க இலக்கியங்கள் பிரதிபலித்தன எனக் கூறும் அதேவேளை, இத்திருமால் பற்றிய கருத்துகள் குறித்த தாக்கம் ஆழ்வார்களிடம் இருந்துள்ளமையினையும் அவர்தம் பாசுரங்களின்வழி அறியமுடிகின்றது.

**முல்லைநிலக் கருப்பொருட்களும் வழிபாட்டு முறைகளும்**

பண்டைக் காலத்தில் பாகுபடுத்தப்பட்ட ஐவகை நிலங்களிலுமிருந்த முதல், கரு, உரிப் பொருள்கள் என்னும் வகைப்பாடு குறிக்கத்தக்கதாகும். இவ்வகைப்பாடு, தொல்காப்பியரால் இலக்கணப்படுத்தப்பட்டிருந்தது. அவ்விலக்கணத்திற்கொப்பச் சங்கப் பாடல்கள் அமைந்திருந்தன எனலாம்.

**முல்லைநிலத்திற்குரிய கருப்பொருட்கள்**

தெய்வம் - திருமால்

தொழில் - ஆநிரை மேய்த்தல், மோர், வெண்ணெய் விற்றல்

மக்கள் - ஆயர், வேட்டுவர்

உணவு - அரிசி, வரகு, பால், தயிர்

விலங்கு - பசு, மான், முயல்

மரம் - கொன்றை, குருந்தம்

பறவை - காட்டுக்கோழி, கிளி

பறை - ஏறுகோட்பறை

யாழ் - முல்லையாழ்

பண் - முல்லைப்பண்

பூ - முல்லைப்பூ

நீர் - புனல்

ஊர் - சேரி, பாடி

**தெய்வம்**

*முல்லை நிலத்திற்குரிய தெய்வமாகத் திருமால் போற்றப்படுகிறான். கலித்தொகையில் தோழியானவள், அனைவரும் இனிதாக வாழவேண்டுமென்பதற்காகப் பாண்டிய மன்னன் பல்லாண்டு வாழ்ந்து புகழ்பெற வேண்டும் என்கிறாள். 'அப்பாண்டிய மன்னன் நீடுவாழ வேண்டுமெனில், நாம் திருமாலைப் போற்றிப் பரவுவோம்' என்கிறாள். அவளது அக்கூற்று,*

ஆடுகொள் நேமியான் பரவுவதும் - நாடுகொண்டு
இன்னிசை முரசின் பொருப்பன், மன்னி
அமைவரல் அருவி ஆர்க்கும்
இமயத்து உம்பரும் விளங்குக எனவே[89]

*என்பதாக வெளிப்படுகிறது.*

*ஆழ்வார்ப் பாசுரங்களில் திருமாலே முழுமுதல் தெய்வமாகப் போற்றப்படுபவன். திருமாலினைத் தொழுதால் என்ன பயன் கிட்டும் என்பதனைக் கூற விரும்பும் ஆண்டாள் தனது பாசுரத்தில்,*

வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் துசாகும் செப்பு.....[90]

*எனப் பாடுகிறாள். அதாவது, திருமாலின் புகழினைப் போற்றி வழிபட்டால் அவனது அடியார்கள், தம்மையறியாது செய்த பாவங்களும் நெருப்பிலிட்ட தூசு போல அழிந்துவிடும் என்று பெருமைப்படுகின்றாள்.*

**மக்கள்**

*முல்லைநில மக்கள் ஆயர், ஆய்ச்சியர், வேட்டுவர், பொதுவர், பொதுவையர், கோவலர், இடையர் என்பதாகச் சுட்டப்படுகின்றனர். இதனைத் தொல்காப்பியர்,*

ஆயர் வேட்டுவர் ஆடுத் திணைப்பெயர்
ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே[91]

*என்று குறிக்கிறார்.*

முல்லை நிலத்திற்குரிய ஆண் மக்களைக் குறிக்கும் நிலையில், ஆயர் கிழவர் என்போர் குறிக்கப்படுகின்றனர். 'தலைவர்' என்ற பெயரும் முல்லை நிலத்து ஆடவர்க்கு உண்டு. ஆயர் என்பது 'ஆநிரை' மேய்ப்பவர் என்ற குலப்பெயராகவும், வேட்டுவர் என்பது வேட்டையாடுதல் என்ற தொழில் அடிப்படையிலான பெயராகவும் அமைந்துள்ளது.

'குறும்பொறை நாடன்' என்பதே 'தலைவர்' என்ற பெயரைப் பெற்ற திணைநிலைப் பெயரை உணர்த்துவதாக அமைகிறது. 'பொதுவன்' என்ற பெயர், முல்லைக்கலியில் ஏறுதழுவும் இளைஞனைச் சுட்டுவதையும் இலக்கியங்களின் வழிக் காணமுடிகிறது. இதனை உறுதிப்படுத்துகிறார் அ.முத்துசாமி அவர்கள்.[92]

ஆழ்வார்கள் தமது பாடல்களில் ஆயர், ஆய்ச்சியர் இடையர் என்று வரும் குலப்பெயர், தொழிற்பெயராகிய அனைத்தும் ஒருங்கிணைந்த ஆய்ப்பாடியையே விவரிக்கின்றன எனக் கூறமுடிகின்றது.

ஆண்டாளின் திருப்பாவையில், ஒரு நங்கை தலைவியால் துயிலெழுப்பப் படுகின்றாள்.

கோவலர் தம் பொற்கொடியே![93]

என்றும்,

ஆயர்தம் கொழுந்தே[94]

என்றும் விளிக்கப்பட்டுக் கண்ணபிரான் 'நந்தகோபன் குமரன்' என்று சுட்டப்படுகிறான். இவற்றில் 'நந்தன்' என்பவரே ஆய்ப்பாடிக்குத் தலைவராக இருப்பவர் என்பதையும் பாசுரங்களைக் கொண்டு அறியமுடிகிறது.

ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கு[95]

என்று ஆயர் தலைவனான நந்தனுக்கு மகனாகப் பிறந்த கண்ணபிரான் கொண்டாடப்படுவதைப் பெரியாழ்வார்ப் பாசுரங்கள் சுட்டுகின்றன.

**தொழில்**

*முல்லைநில மக்கள் ஆடு, மாடுகளை மேய்த்தல், மோர் விற்றல், பண்டமாற்று முறையாக ஆநிரை பெறுதலும், தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்து விற்றல் என்பதான தொழில்களை மேற்கொண்டனர். தொல்காப்பியத்திலுள்ள முல்லை நில மக்களின் இத்தொழிலிலக்கணம், சங்கப்பாடல்களில் இலக்கியப்படுத்தப்பட்டமையினை அறிய முடிகிறது. புல்வெளிகள் நிறைந்த முல்லை நிலப்பகுதி கால்நடைகளை மேய்த்துப் பராமரிப்பதற்கான சிறந்த பகுதியாகும். இந்நிலப்பகுதியானது மேற்சுட்டிய தொழில்கள் அனைத்தும் சிறக்கவும் தகுதியான இடப்பரப்பாகும் எனலாம்.*

*'ஆநிரை மேய்த்தல்' என்பது முல்லைநில மக்களுக்கு முதன்மைத் தொழிலாகும். 'மாடு' என்பது செல்வம் என்றும் பொருள் தருவதற்கேற்ப, ஆயர்களுக்கு மாடுகளே செல்வமாக அமைந்திருந்தன எனக் கூறப்படுவதுண்டு. எனவே, அந்நில மக்கள் அவற்றை அன்புடன் வளர்த்து வந்தனர் எனலாம். இத்தொழில் குறித்துக் கூறும் அகநானூறு,*

முல்லை வியன்புலம் புல் அருந்து உகள
குறும் பொறை மருங்கின் நறும்பூ அயரப்
பதவு மேயல் அருந்து மதவு நடை நல் ஆண்[96]

*எனப் பாடுகிறது. இதில், மாலைக் காலத்தில் பசுக்களானவை தனது மடியிலிருந்து பாலைச் சொரிய, அவை தமது கன்றுகளை நினைத்துக் குரல் எழுப்பிக் கொண்டே தொழுவத்திற்கு வரும். அத்தகைய மாலை நேரக் காட்சியானது சிறப்புற வருணிக்கப்பட்டுள்ளது. இது, ஆயர்களின் முதன்மைத் தொழிலான ஆநிரை பராமரித்தலைச் சிறப்பிப்பதாகவுள்ளது.*

. . . . . கொடுங் கோற் கோவலர்
ஏறுடை யினநிரை வேறுபுலம் பரப்பி[97]

*என்ற அடிகளடங்கிய நெடுநல் வாடை, ஆயர்கள் மேய்ச்சல் நிலத்தில் மேய்ந்து கொண்டிருக்கும் மாடுகளை ஒன்றுதிரட்டத் தமது கையிலுள்ள புல்லாங்குழலை ஊதி, இசையெழுப்பிப் பின் அவற்றை ஒன்று சேர்ப்பர் என அழகாகக் குறிக்கின்றது.*

*ஆயர்கள் தம் கையில் ஊதுகொம்பு வைத்திருக்கும் இயல்பினை அகநானூற்றுப் பாடலானது,*

வாடுபுனல் புக்கென, கோடுவைத்து அகற்றி
ஒல்குநிலைக் கடுக்கை அல்கு நிழல் அசைஇப்
பல் ஆன் கோவலர் கல்லாது ஊதும்
சிறு வெதிரிந் தீம்குழற் புலம்புகொண் தெள்விளி[98]

*என்றவாறு குறிக்கின்றது. பசுக்கூட்டம் பாலை நிலத்திற்குட் புகுந்ததை ஒன்று திரட்டுவதற்கு ஆயர்கள் ஊதுகொம்பினை ஊதி ஒலி எழுப்பி, அவற்றை மர நிழலில் தங்கச் செய்வதும், மூங்கிலால் செய்யப்பட்ட குழலிலிருந்து இசை எழுப்புவதும், அசைபோடும் மான்கள் அந்த இசையினைக் கூர்ந்து கேட்டுச் செல்வதுமாகிய காட்சியை மனத்துட் பதியுமாறு பாடியுள்ளதைப் படித்து இன்புறமுடிகிறது.*

*முல்லைநிலத் தலைவியானவள், ஆயனின் புல்லாங்குழலிசையானது நெருப்புப் போல வருத்துகின்ற மாலைப் பொழுதிற்குத் தூதாகித் தன்னைக் கொல்லும் படையாக வருவதாகக் கூறும்,*

அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை[99]

*என்ற திருக்குறளில், மாலையில் ஆயனால் புல்லாங்குழல் இசைக்கப்படுவது சுட்டப்படுகிறது. இதுவும் இங்கு எண்ணத்தக்கது.*

*கண்ணன் ஆடு, மாடு என்பவற்றை மேய்த்து, பசித்திருந்த அவற்றின் பசி தீர அவை உண்டபின், தான் உண்கின்ற ஆயர் குலத்தில் பிறந்தவன் என்பதை ஆண்டாள் நாச்சியார்,*

பெற்றம் மேய்தி உண்ணும் குலத்தில் பிறந்து நீ[100]

*என்று பாடுகிறாள்.*

*கண்ணன் வளர்ந்ததும், ஆடிப்பாடி விரும்பி விளையாடியதும் ஆயர்பாடியே ஆதலால், கண்ணனுக்கு விருப்பமான இடமாக திருவாய்ப்பாடியே அமைந்ததாகப் பாசுரங்கள் சுட்டுகின்றன.*

கறவைகள் பின் சென்று கானம் சேர்ந்து உண்போம்[101]

என்ற அடிகளின் மூலம் 'பசுவின் பின்னே சென்று காட்டையடைந்து உடம்பை வளர்ப்போம்' என்று ஆயர்கள் கூறுமாறு போல, ஆண்டாள் நாச்சியார் முல்லைப் பகுதியைச் சுட்டிப் பாடுகின்றாள். ஆயர்களின் இச்செயல்களை,

மேட்டு இன மேதிகள் தளை விடும் ஆயர்கள்
வேய்ங் குழல் ஓசையும் விடைமணிக் குரலும்
ஈட்டிய திசை பரந்தன. . . .[102]

என்று தொண்டரடிப் பொடியாழ்வாரும் பாடிக் குறிக்கின்றார்.

ஆநிரைகளோடு தொடர்புடைய கால்நடையினமான எருமையின் இளங்கன்றுகளையும் மேய்த்து வருவர் ஆயர். அவ்வாயர்களின் புல்லாங்குழல் இசையானது, எருதுகளின் கழுத்து மணியோசையுடன் சேர்ந்து ஒலிக்கும் நிலை திருப்பள்ளியெழுச்சியில் பாடப்பெற்று ஆயர்களின் வாழ்வியல் விளக்கப்படுவதும் குறிப்பிட்ட அப்பாசுரத்திற்குச் சுவையூட்டுவதாகும்.

**உணவு**

முல்லைநில மக்கள் உணவிற்கெனத் தினையரிசி, நெல்லரிசி, வரகு போன்ற தானியங்களைப் பயன்படுத்தினர். பசுமேய்த்தல் அவர்தம் இன்றியமையாத் தொழில் என்பதன் காரணமாகப் பால், தயிர், வெண்ணெய் போன்றவற்றையும் அரிசிச் சோற்றுடன் உண்ண இணைத்துக் கொண்டனர். இதனைக் குறிப்பிடும் அகநானூறு,

மதர்வை நல்ஆன் பாலொடு புகுக்கும்
நிரைபல குழீஇய நெடுமொழி புல்லி[103]

என்கிறது. அதாவது, இடையர்கள் சமைத்த அவிழாகிய சோற்றினை மதர்த்த நல்ல பசுவின் பாலோடு சேர்த்து உணவாகத் தருவரென்கிறது அப்பாடற்பகுதி. முல்லை நில மக்கள் பருப்புச்சோறு உண்டதைப் பெரும்பாணாற்றுப்படை விரிவாக விளக்குவதையும் அறியமுடிகிறது.

ஆழ்வார்ப் பாசுரங்களிலும் உணவாக உண்ணப்படும் பலவகை உணவுகள் குறித்துப் பதிவாகியுள்ளது. ஆயர்களின் தலைவனான, நந்தகோபனின் மகனான கண்ணனுக்கு யசோதை அமுதூட்டும் நிகழ்வினைப் பெரியாழ்வார் சிறப்பாகப் பாடுகிறார். பாலும், அரிசியும், வெல்லமும்

கலந்து செய்த அக்கார அடிசிலும், சமைத்து முடித்த சோற்றில் பருப்புச் சேர்த்த அடிசிலும், தயிருடன் நெய்யும் கலந்த அடிசிலும் எனப் பல்சுவையமுது பாசுரங்களில் பேசப்படுகிறது. இதற்கு,

அக்காரம் பாலில் கலந்து. . . .[104]

என்றும்,

அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும்

தயிர் - வாவியும் நெய் - அளலும்[105]

என்றும் பாடப்படும் பாசுரப் பகுதிகளை மேற்கோளாச் சுட்டமுடிகின்றது.

**விலங்கு**

பசு, மான், முயல் போன்ற விலங்குகள் முல்லை நிலத்திற்குரியனவாகத் தொல்காப்பியம் கூறுகிறது. மூன்றாம் திருவந்தாதிப் பாசுரமானது திருமாலானவன் பசு மேய்த்திருந்ததை,

நீயன்றே நின்று நிரைமேய்த்தாய்[106]

எனச் சுட்டுகின்றது. முல்லைநில விலங்கான பசு மிகவும் சிறப்பிக்கப்படுவது எண்ணத்தக்கது. மேலும், மகளிரின் கண்களுக்கு மானின் கண்களை,

மடமயில்களோடு மான் பிணைபோல. . .[107]

என உவமிப்பதன் மூலம், அந்நில விலங்குகளுள் ஒன்றான மானுக்கு அந்நிலத்தார் தந்த சிறப்புப் புலனாகின்றது.

தொண்டரடிப் பொடியாரின், மான் குறித்து வரும்,

உழைக் கன்றேபோல் நோக்கமுடையவர்[108]

என்ற உவமையழகும் இத்தகையதே எனலாம். ஆழ்வார்கள் பாடிய இத்தகைய பாசுரங்கள் சங்க இலக்கியக் கூறுகளின் சாரங்களே எனக் கூறமுடிகிறது.

**மரம்**

முல்லை நிலத்திற்குரியனவாகக் கொன்றை மரத்தையும், குருந்த மரத்தையும் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

அகநானூற்றில், ஆய மகளிர் நீராடும்பொழுது, அவர்களுடைய உடைகளை எடுத்துக் கொண்டு கண்ணன் ஒளிந்திருந்ததாகச் சுட்டப்படும் மரம் குருந்த மரமாகும் (இதனைப் பற்றிய புராணச் செய்தி, பின்வரும் இயலில் ஆய்வாளரால் சுட்டப்படுகிறது. இயல்:4).

கண்ணன் குருந்த மரத்தில் ஏறி விளையாடுவதும், ஆயமகளிரின் துணிகளை மறைத்ததுவுமாகிய செய்தியினைத் திருமாலோடு வைத்துப் புகழ்ந்து பாடும் சங்கப் பாடல்களையொட்டிய பாசுரங்களும் இதனை வெளிப்படுத்துவனவாகவும் உள்ளன. அவற்றிற்கான சான்றுகள் பலவற்றுள்ளும்,

. . . . .

குரக்கு-அரசு ஆவது அறிந்தோழ் குருந்திடை

கூறை பணியாய்[109]

என்று வரும் ஆண்டாளின் பாசுரத் தொடரினைக் குறிக்க இயலுகின்றது.

**புள்**

முல்லை நிலத்திற்குரிய பறவைகளுள் குறிக்கத்தக்கன காட்டுக்கோழியும், கிளியும் ஆகும். ஆயர் மகளிர் கிளிகளை அன்புடன் வளர்த்ததாகவும், அதோடு மட்டுமன்றி, அவற்றுடன் பேசி மகிழ்ந்ததாகவும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

சங்கத் தலைவியொருத்தி, தான் வளர்க்கும் கிளியைக் கையில் ஏந்தி, அதற்கு மொழி பயிற்றுவித்து, விளையாடி மகிழ்ந்திருந்தாகச் சித்திரிக்க முயலும் அகநானூறு,

. . . . . . . . . . . எகினம்
துணையொடு திளைக்கும் காப்புடை வரைப்பில்
செந்தார்ப் பைங்கிளி முன்கை ஏந்தி
இன்று வரல் உரைமோ. . . .[110]

எனப் பாடுகிறது.

அன்னங்கள் விளையாடக்கூடிய, மிக்க காவல் உள்ள வீட்டில் இருக்கிறாள் தலைவி. அவள் ஆசையுடன் வளர்க்கும் கிளியைத் தனது முன்னங்கையில் ஏந்தி, தலைவன் எப்பொழுது வருவான் என்பதைக் கூறுமாறு அதனிடம் கேட்கிறாள். யாருக்கும் தெரியாமல் கிளிக்குப் பேசக் கற்றுக் கொடுக்கக்கூடிய தலைவியை அகநானூற்றுப் பாடலடிகள் அவ்வாறு

அடையாளப்படுத்துகின்றன. இத்தகைய சாயல் ஆழ்வார்ப் பாசுரங்களில் படிந்துள்ளது எனக் கூறமுடிகிறது.

ஆண்டாள் நாச்சியார், கிளியொன்றினை வளர்க்கிறாள் என்பது ஆழ்வார்ப்பாசுரக் குறிப்பாகும். அக்கிளிக்கு அவள், 'கோவிந்தன்' என்னும் பெயரை உச்சரிக்கக் கற்றுக் கொடுத்து, அது, தினந்தோறும் அப்பெயரைச் சொல்லிக் கொண்டிருக்க, ஆண்டாளும் அதனைக் கேட்டுக் கொண்டே மகிழ்ந்திருப்பாள் என்பது குறிப்பு.

கூட்டில் இருந்த கிளி 'கோவிந்தா!. . . கோவிந்தா!' என்று அவனது திருநாமம் சொல்லியழைக்கிறது. ஆயினும், ஆண்டாள் அதற்கு உண்ண உணவினைக் கொடுக்காதிருக்கிறாள். ஏனெனில், அவ்வாறு பசியோடிருப்பின், அது தனது அப்பசி வருத்தத்தினால், மிக்க உரத்தகுரலில் உலகளந்த பெருமானைக் 'கோவிந்தா' என்று மேன்மேலும் பேசி அழைக்கும். திருமாலைத் தனது மனத்தில் வைத்துப் போற்றும் பெண்ணின் அச்செயல்,

கூட்டிலிருந்து கிளி எப்போதும்
கோவிந்தா! கோவிந்தா! என்று அழைக்கும்
ஊட்டக் கொடாது செறுப்பானாகில்
உலகு அளந்தான்! என்று உயரக்கூவும்[111]

என நாச்சியார் திருமொழிக்கெனப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**முல்லைப்பூ**

முல்லை நிலத்திற்குரியதாக 'முல்லைப்பூ'வானது குறிப்பிடப்படுகிறது. இம்முல்லைபூக் குறித்துச் சங்கப் பாடல்கள் நிரம்பப் பேசுகின்றன. தலைவியைப் பிரிந்து சென்ற அகநானூற்றுத் தலைவன், தனது வினை முடித்துத் தலைவியைச் சந்திக்க மீளுகின்றான். மீளும் வழியில் மிகவும் உயரமாக வளர்ந்திருக்கும் பிடவமரம் ஒன்றைக் காணுகின்றான். அம்மரத்தின் உச்சி வரையிலும் முல்லைக் கொடியானது வளர்ந்து சென்று படர்ந்துள்ளது. இக்காட்சியானது அகநானூற்றில்,

சிறு சுரும்பிடவின் வெண்தலைக் குறும்புதல்
கண்ணியின் மலரும் தண்நறும் புறவில்
தொடுதோல் கானவன். . . . .[112]

என்றவாறு இலக்கியப்படுத்தப்பட்டுள்ளது.

முல்லைக்கொடி குறித்த செய்திகள் ஆழ்வார்ப் பாசுரங்களிலும் உள்ளன. நாச்சியார் திருமொழியில் திருமாலிருஞ்சோலை அழகுற வருணிக்கப்படுகிறது. அங்குள்ள சோலை அழகாகவுள்ளது. யானைகள் ஒன்றோடொன்று விளையாடும் இடமான அச்சோலைமலையில் அழகிய தாழ்வரைகளும் உள்ளன. அத்தாழ்வரைகளில் முல்லைக்கொடியானது படர்ந்து, அதில் முல்லைப்பூ அழகாக அரும்பியுள்ளது. அவ்அரும்புகளைக் காணும்பொழுது, அது கள்ளழகரின் வெளுத்த புன்சிரிப்புப் போன்ற தோற்றத்தை நினைவூட்டுவதாகவுள்ளது. அவ்வாறு வருணித்துப் பாடப்பட்ட அவ்வழகிய பாடலின் பகுதியே,

சோலைஅப் பூம் புறவில்
தாரீக் கொடி முல்லைகளும் தவள
நகை காட்டுகின்ற
கார் கொள். . . .[113]

என்பதாகும்.

**பறை**

முல்லை நிலத்திற்குரிய பறையாக ஏறுகோட்பறையினைக் குறிப்பிடுகிறது தொல்காப்பியம். அப்பறையினைச் சங்க இலக்கியங்களும் குறித்துள்ளன. கலித்தொகையில் வரும் ஏறுதழுவும் காட்சியில், பரண் அமைத்துப் பெண்கள் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். பலரும் ஆரவாரஞ் செய்கின்றனர். காளைகள் சூழ்கின்றன. அக்காளைகளின்மேல் இளைஞர்கள் பாய்தலை எதிர்நோக்கிக் காளைகள் நிற்கின்றன. ஏறுதழுவுதலின் தொடக்கமாக ஏறுகோட்பறையை முழங்கச் செய்கின்றனர். இதனை,

அல்வழி பறை எழுந்து இசைப்பப் பல்லவர் ஆர்ப்பப்
குறையா மைந்தர் . . . . . . . . . . . . .[114]

என்கிறது முல்லைக்கலி.

ஏறுகோட்பறை என்பதாக ஆழ்வார்ப் பாசுரங்கள் வெளிப்படையாகச் சுட்டாவிட்டாலும், அந்நிகழ்வில் முழங்கப்படும் 'பறை'யைப் பெயர்சுட்டாமல் குறிப்பதை அறியமுடிகிறது. அக்குறிப்பு,

. . . . . அறை பறை

மாயன் மணி வண்ணன் நென்னலே[115]

எனப் பதியப்பட்டுள்ளது.

கண்ணன் ஆயர் சிறுமியர்க்குப் பறையைத் தருவதாக உறுதியளிக்கிறான் என்பது, ஆலிலை மேலே பள்ளி கொண்டவனான கண்ணனைப் பாடி வாழ்த்துதற்காகப் பெரிய பறைகள் வேண்டுமென்று கூறப்படும் மேற்சுட்டிய பகுதி அடங்கிய பாசுரத்துள் குறிக்கப்பட்டுள்ளது.

சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே[116]

என்ற அடி அடங்கிய திருப்பாவைப் பாடலில் பல்லாண்டு பாடுதற்குத் துணையாக வேண்டியவற்றைக் கேட்பதோடு, போதுமான பறைகளையும் அருளவேண்டுமென வேண்டப்படுகிறது. இவ்வேண்டுகோளினை விடுப்பது ஆய்ப்பாடி நாயகியே என்பதால், இதில் குறிக்கப்படும் பறையும் ஏறுகோட் பறையே என்பதை ஊகிக்க முடிகிறது. ஏறு தழுவுதலிற் பயன்பட்டதால் அப்பறை ஏறுகோட்பறை எனப் பெயர் பெற்றதெனவும், இங்கு வழிபாடு நோக்கிப் 'பறை' என்று மட்டுமே குறிக்கப்பட்டது எனவும் கொள்ளமுடிகிறது.

**பண்**

முல்லை நிலத்திற்குரியதான பண் 'முல்லைப் பண்' என்பதாகத் தொல்காப்பியர் குறிக்கிறார். மாலை வேலைகளில் கோவலர் பசுக்கூட்டத்தினை ஒன்று சேர்த்து வீட்டிற்கு அழைத்துச் செல்வர். அவற்றுள்ளும், ஊடே வந்து கொண்டிருக்கும் காளைகளின் கழுத்தில் கட்டப்பட்ட மணிகள் ஒலித்துக் கொண்டிருக்கும். அம்மணியின் ஒலியானது, கோவலர்களின் புல்லாங்குழலிசைக்குப் பொருத்தமான தாளமாக அமையும். மேலும், அக்கோவலர்கள் இசைப்பது 'செவ்வழிப்பண்'ணாகும் என்ற செய்தியை அகநானூறு,

ஆ பெயர் கோவலர் ஆம்பலொடு அளைஇ

பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப[117]

எனக் குறிக்கிறது.

பூக்கள் பூத்துக் குலுங்கும் சோலையில் நறுமணம் வீசுகிறது. அந்நறுமணமலர்களுக்காக வண்டுகள் மிகுதியாக அச்சோலைக்கு வருகின்றன. அவ்வண்டுகள் ஒலியெழுப்புகின்றன. இதனை வருணிக்கும் நாச்சியார் தனது பாசுரத்தில்,

. . . . . . அலர் காவில் புதுமணம் நாறப்

பொறிவண்டின் காமரம் கேட்டு உன். . . .[118]

எனக் குறிப்பிட்டு, வண்டுகள் ‘காமரம்’ என்ற பண்ணிசைப்பதாகத் தெரிவிக்கின்றாள். ‘காமரம்’ என்ற பண்ணானது, மருத நிலத்திற்குரிய பண்ணாகக் கொள்ளப்படும். எனினும், இதனைத் திணை மயக்கமாகக் கொள்வதில் தவறில்லை எனலாம்.

பெரியாழ்வாரும் தனது பாசுரத்தில்,

பாண் தகு வண்டினங்கள்

பண்கள் பாடி மதுப் பருக. . . .[119]

எனப்பாடி, வண்டுகளின் ஒலியெழுப்பும் பாங்கினை விவரிக்கின்றார். வண்டுகள் பலசேர்ந்து ஒலி எழுப்புகின்றன. இது, பாணர்கள் பண்ணிசைப்பது போன்றுள்ளது என்கிறார் பெரியாழ்வார். இதனை, ‘முல்லைப்பண்’ எனக் கொள்ளமுடிகிறது. இவ்வாறே, வண்டுகள் செவ்வழிப்பண் உள்ளிட்ட பலவகைப் பண்களை இசைத்துச் சென்றதாகக் குறிப்புகள் பல உள்ளமையயறிந்து மகிழ்வதுடன், பண் குறித்த செய்திகள் பாசுரங்களால் அடியொற்றப் பெற்றதும் அறியமுடிகின்றது.

**கருப்பொருள் மயக்கம்**

ஒரு நிலத்திற்கான கருப்பொருட்கள் பிற நிலத்தில் மயங்கியும் வரும் என்பதைத் தொல்காப்பியர்,

எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்

அந்நிலம் பொழுதொடு வாராவாயினும்

வந்த நிலத்தின் பயத்த ஆகும்[120]

என்றவாறு விளக்குகிறார்.

முல்லை நிலத்திற்குரிய பூக்களாக முல்லை, கொன்றை, குருந்தம் என்பன சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றன. ஆயர்கள் பல வண்ணப்பூக்களை மாலையாகக் கோத்து அணிந்திருந்தனரென்பதான குறிப்புகள் பல உள்ளன. சங்கப்பாடல்கள் குறித்துள்ள மருதத்திணைக்குரிய கருப்பொருட்கள், ஆழ்வார்ப் பாசுரங்களில் இடம்பெற்றுள்ளன. 'கொழுங்கொடி முல்லை' என்று தொண்டரடிப் பொடியாழ்வாரின் பாசுர அடியிலும்,

உங்கள் புழக்கடை தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்[121]

என்று ஆண்டாள் நாச்சியாரின் திருப்பாவையிலும், உரிய கருப்பொருட்களாகிய இவ்வகைப் பூக்கள் இடம்பெற்றுள்ளன.

முல்லைநில மக்களின் தொழிலும் தொழில்சார்ந்த கருவிகளும், முல்லைநிலத் தெய்வமான திருமாலுடனும், திருமால் வழிபாட்டுடனும் தொடர்புபடுத்தப்பட்டன. இத்தொடர்புகளைச் சங்கப்பாடல்களிலிருந்து அறியமுடிகிறது.

## திருமால் வழிபாடு - இடையர், ஆயர்

திருமால் கிருட்டினாவதாரத்தில் ஆயர் குலத்தவரால் வளர்க்கப்பட்டவரென்பது புராணப் பதிவாகும். ஆயர்களுக்கும், ஆயர்களின் முதன்மையான செல்வமாகவுள்ள பசுக்களுக்கும் துன்பம் வந்தபொழுது, மலையைக் குடையாகப் பிடித்து அனைவரையும் காத்தவன் திருமால் என நம்பப்படுவதால், அத்தகைய கண்ணனை முல்லை நிலத்தோர் தம் குலதெய்வமாகக் கொண்டாடினர் எனக் கூறமுடிகிறது.

## குழல்

கோவலனாய் வருணிக்கப்படும் கண்ணனின் குழலோசையை அனைவரும் விரும்பிக் கேட்டு மகிழ்வர் என்பது கருத்து. அத்தகைய குழலிசை செவிப்படுவது தமக்கு நன்னிமித்தமாகும் என்று கருதி, ஆயர் குலத்தார் மகிழ்வர் என்பதும் குறிப்பு.

நன்னிமித்தம் பார்க்கும் வழக்கம் சங்ககால மக்களிடம் இருந்ததனைச் சங்கப் பாடல்கள் பல சுட்டுகின்றன. குறிப்பாக, முல்லை நில மக்களிடம் இந்நம்பிக்கை மிக்கிருந்தது எனக் கருத முடிகிறது.

மாலை நேரத்தில், ஆயர் ஊதும் குழலிலிருந்து பரவும் குழலோசையானது காற்றில் பரவும். அத்தகைய ஓசையானது, தனக்கு மாலை சூட்டி மணந்து கொள்ளவிருக்கும் ஆடவனை எண்ணிக் காத்திருக்கும் பெண்களுக்கு நன்னிமித்த நம்பிக்கையை ஏற்படுத்தும். இதனைக் கலித்தொகை,

அணிமாலைக் கேள்வன் தரூஉமார் ஆயர்
மணிமாலை ஊதும் குழல். . . . . . . .[122]

என்கிறது.

குழலோசை காதில் விழுதல் நன்னிமித்தமென்பது, பின்னர்த் தோன்றிய ஆழ்வார்ப் பாசுரங்களிலும் குறிக்கப்பட்டுள்ளது. இவற்றுள், நன்னிமித்தம் குறித்த செய்திகள் நேரிடையாகக் காணப்படவில்லையெனினும், குழலிசையின் ஈர்ப்புத் தன்மை குறித்துப் பேசப்பட்டுள்ளது. பெரியாழ்வார் தனது திருவாய்மொழியில் இக்குழலிசையின் தனித்தன்மையினை,

மருட்டார் மென்குழல் கொண்டு புக்கு வாய்வைத்து
அவ்வாயர் தம் பாடி
சுருட்டார் மென்குழல் கன்னியர் வந்து உன்னைச்
சுற்றும் தொழ நின்ற சோதி[123]

என்றவாறு பாடுகிறார். இப்பகுதியடங்கிய பாடற்கருத்துப் பின்வருமாறு:

இசையால், கேட்பவர்களை மருளச் செய்யும் தன்மையுடைய புல்லாங்குழலைக் கையில் கொண்டு, சோலையில் புகுந்து இசைக்கத் தொடங்குகின்றான் கண்ணன். அதனால், ஆய்ப்பாடியிலுள்ள இளம்பெண்களனைவரும் அவர்தம் காவலைக் கடந்து அச்சோலைக்கு வந்துவிடுகின்றனர். அவனது குழலிசையில் மயங்கி, அவனைச் சூழ்ந்து நின்று கொண்டு அவனை வணங்கி மகிழ்கின்றனர்.

கண்ணன் எழுப்பும் குழலிசையானது ஆய்ப்பாடிக் கன்னியரை மகிழச் செய்ததாகப் பாடியிருப்பது, புல்லாங்குழலை ஒரு புனிதமான இசைக்கருவியாக - வைணவத்தோடு தொடர்புடைய இசைக் கருவியாக ஆழ்வார்கள் வைத்துப் போற்றக் கருதியதை எடுத்துரைப்பதாகவுள்ளது எனக் கூறமுடிகிறது.

**கூடி உண்ணும் பண்பு**

ஆயர்களின் குலப்பண்பினை மலைபடுகடாம் அழகாக விவரிக்கிறது.

பல்யாட் டினநிரை எல்லினிர் புகினே
பாலு மிதவையும் பண்ணாது பெறுகுவிர்
தும்மயிர் அடக்கிய சேக்கை யன்ன
மெய்யுரித் . . . . . . . . . . . . . . . .[124]

என்ற அடிகளானவை, ஆயர்கள் விருந்தினர் வந்த பின்பு சமைக்காது, முன்னரே தனக்கென ஆயத்த நிலையில் வைத்திருந்த பாலையும் பாற்சோற்றினையும் விருந்தினர்க்குத் தருவர். எனவே, அவர்களெல்லோரும் அவற்றைப் பெறலாம் என்று கூறுவதாக அமைந்திருப்பதை அறியமுடிகிறது. தனக்குள்ள உணவினைத் தம்மைக் காண வந்திருப்பவர்க்கு முதலில் அளித்துக் கூடி உண்பதையே விரும்பினர் என்பதும் பெறப்படுகிறது.

சங்கப் பாடல்களில் குறிக்கப் பெற்ற ஆயர்களின் உணவு முறை போன்றவற்றை அடியொற்றியே ஆழ்வார்ப் பாசுரங்களும் குறித்துச் செல்கின்றன. இதற்குச் சான்றாக,

. . . . . . . . ஆடையுடுப்போம் அதன் பின் பாற்சோறு
மூட நெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடி இருந்து குளிர்ந்து[125]

என வரும் ஆண்டாளின் பாவைப்பாடற் பகுதியைச் சுட்டமுடிகிறது. ஆதலால், இக்கருத்தில் ஆழ்வார்களும் சங்கப்புலவர்களும் ஒன்றுபட்டுள்ளமை விளங்குகிறது.

**அணிகலன்**

*ஆயர்களால் அணியப்பட்ட அணிகலன்கள் பலவற்றைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. அவற்றையடியொற்றிய நிலையில், ஆழ்வார்ப் பாசுரங்கள் பலவும் அவற்றைக் குறிப்பிடுகின்றன.*

*ஆயர்குல ஆடவர் பல்வகை அணிகலன்களை அணிந்தனர். அவற்றுள் ஆரம், கழல், தொடி போன்றன குறிக்கத்தக்கன. பெண்டிர் இழையணி, கிண்கிணி, குழை, வளையல் போன்றவற்றை அணிந்தனர் எனச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. இவற்றுள் பொருந்தியவற்றைத் தம் இனச் சிறுவர் சிறுமியர்க்கும் அணிவித்து மகிழ்ந்தனர் என்ற குறிப்பும் உண்டு. இத்தகைய அணிகலன்களை ஆழ்வார்ப் பாசுரங்களும் சுட்டியுள்ளன.*

*வீரர்கள் பகைவர் நாட்டை அழித்துக் கொணர்ந்த அணிகலன்களைப் பாணர்களுக்குப் பரிசாகத் தந்த செய்தியை அகநானூறு,*

சுடர்மணிப் பெரும்பூண் ஆஅய் கானத்து[126]

*என்று குறித்துள்ளது.*

*கழல் குறித்துக் கூறும் அகநானூறு,*

வண்டு படத்ததைந்த கண்ணி ஒண் கழல்[127]

*என்று பாடி, வீரக்கழல் கொண்ட வீரனைச் சுட்டுகின்றது.*

*புறநானூற்றுப் பாடலொன்றும்,*

. . . . . . . . . . . . . . . . . . . . .

கடாஅ யானைக் கழற்கால் பேகன்[128]

*என்ற தொடரில் வீரக்கழலைக் காலில் அணிந்திருந்த பேகனைச் சுட்டுகின்றது.*

**ஆரம்**

*ஆரம் என்ற கழுத்தணியானது பதக்கம், மணிவடம் மற்றும் மாலை, வளையம் என்றும் பெயர்பெறும்.[129] இவ்வாறு கூறக்கூடிய இந்த ஆரமென்னும் கழுத்தணியைப் புறநானூறு,*

விளங்குமணிக் கொடும்பூண் ஆஅய்![130]

*என்று கூறி, ஒளிபொருந்திய மணிகள் அமைந்த ஆரத்தினை 'ஆய்' என்பவன் அணிந்ததைப் பதிவு செய்துள்ளது.*

**தொடி அல்லது பூண்**

*தொடி என்ற அணிகலன் குறித்தும் புறநானூறு பேசுகிறது. ஆடவர்தம் தோள்களில் வீரத்திற்கு அறிகுறியாக அணியும் அணிகலன் தொடி என்பதாகும். இது கைவளை, வீரவளை, உலக்கைப் பூண், வளையம் என்றெல்லாம் அழைக்கப்படும்.[131] மகளிர் அணியும் தொடியும், ஆடவர் அணியும் தொடியும் வடிவில் மாறுபட்டதாகவும் கருதப்படுகிறது.*

*சங்க இலக்கியப் பாடல்களில் குறிக்கப்பெற்றுள்ள அணிகலன்களுள் பல, ஆழ்வார்ப் பாசுரங்களிலும் குறிக்கப் பெற்றுள்ளன. இவற்றுள் பெரும்பாலானவை திருமாலின் திருமேனியில் இருப்பனவாகக் குறிக்கப் பெற்றவை ஆகும்.*

*பெரியாழ்வாரின் பாசுர அடிகள்,*

சங்கின் வலம்புரியும் சேவடிக் கிண்கிணியும்
அங்கைச் சரிவளையும் நாணும் அரைத்தொடரும்[132]

*என்று சங்க இலக்கியங்களில் கூறப்பட்ட சிலவகை அணிகலன்களைக் குறிப்பிடுகின்றது. கிண்கிணி, வளையல் என்பன கண்ணனுக்குப் பூட்டி அழகுபார்க்கப்பட்ட குறிப்பு உள்ளது. மேலும், அவனது வீரக்கழல் அணிந்த காலில் சதங்கை அணியப்பெற்றிருந்த குறிப்பும் உண்டு.*

*கண்ணன் கோலினைக் கையில் ஏந்திய வண்ணம், அகன்றோடும் கன்றுகளை மடக்கிப் பிடித்து ஓட்டி வர எண்ணி ஒருபுறம் ஓடுவான். அப்பொழுது, அவனது திருவடிகளில் அசைந்து கொண்டிருக்கும் வீரக்கழல்களும், சதங்கைகளும் ஒன்றிணைந்து பேரொலியையெழுப்பும் என்ற இக்குறிப்பு,*

அழகிய பைம் பொன்னின் கோல் அங்கை கொண்டு
கழல்கள் சதங்கை கலந்து எங்கும் ஆர்ப்ப
மழக் கன்றினங்கள் மறித்துத் திரிவான்[133]

*என்று பெரியாழ்வார்ப் பாசுரத்தின்வழிச் சுட்டப்படுகிறது.*

*முத்துப் பதித்த ஆரமும், பவளம் பதித்த வளையலும்,*

ஓதக் கடலின் ஒளிமுகத்தின் ஆரமும்

சாதிப் பவளமும் சந்தச் சரிவளையும்[134]

*என்ற அடிகளிலும், கழுத்தணி காதின் குண்டலங்கள்,*

. . . . . . கழுத்துக்குப் பூணொடு

காதுக்குக் குண்டலமும்[135]

*என்ற அடிகளிலும் பெரியாழ்வாரால் குறிக்கப்பட்டுள்ளமை சுவையானதாகும்.*

*ஆண்டாள் நாச்சியார், ஆயமகளிர் அணியும் அணிகலன்களைக் குறிப்பிடும் வகையில்,*

சூடகமே தோள்வளையே, தோடே, செவிப்பூவே

பாடகமே என்றனைய பல்கலனும்யாம் அணிவோம்[136]

*என்று இப்பாடலடிகளின் வழியே தெரியப்படுத்துகிறாள்.*

*எனவே, சங்க இலக்கியங்களில் சுட்டப்பெறும், ஆயர்களால் அணியப் பெற்றதாகக் கூறப்படும் அணிகலன்களுள் பெரும்பாலானவற்றை, ஆழ்வார்கள் தமது பாசுரத்திலும் வைத்துக் குறித்துச் சென்றுள்ளமையை அறிந்து இன்புறமுடிகிறது.*

**விருந்து வரின் உவத்தல்**

*மனிதனுக்கு இன்றியமையாத நற்பண்புகளில் விருந்தோம்பல் என்பதும் ஒன்றாகும். விருந்தினர் தமது இல்லத்தை நாடி வரும்பொழுது, எதிரே வந்து விருந்தினரை வரவேற்பது என்பது தமிழரின் பண்பாடுகளுள் ஒன்றாகும். இரவு நேரத்தில் விருந்தினர் வரினும், மகளிர் மனம் கோணாமல் மனமகிழ்வுடன் வரவேற்று உபசரித்தல் வேண்டும். அத்தகைய நற்பண்பினை நற்றிணையானது,*

விருந்து விருப்பு றூஉம் பெருந்தோய் குறுமகள்[137]

*என்றும்,*

அல்லி லாயினும் விருந்து வரின் உவக்கும் . . .[138]

*என்றும் கூறிப் பதிவு செய்கிறது.*

பெரியாழ்வார்ப் பாசுரத்திலும் இவ்விருந்தோம்பற்பண்பு அவ்வாறே போற்றப்பட்டுள்ளது. திருக்கோட்டியூரில் வாழும் மக்களின் வள்ளல் தன்மையையும், விருந்தோம்பற் பண்பையும் அவர் அழகுற எடுத்துக்காட்டுகிறார். அதாவது, 'ஒரு காசுக்கு ஒரு பிடி நெல் விற்கும் பஞ்சம் நிலவும் காலத்திலும், தம்மிடம் இருப்பதை ஒளிக்காமல் வந்த விருந்தினர்க்கெல்லாம் அவ்வூரினர் விருந்தளிப்பார்' என்கிறார். பிறநாட்டாரும் அவ்வூர் மக்களின் வள்ளன்மையைக் கண்டு வியந்து பாராட்டினர் என்பதாகப் பாடப்படும் பகுதியானது,

காசின்வாய்க் கரம் விற்கிலும் கரவாது
மாற்று இலி சோறு இட்டு
தேச வார்த்தை படைக்கும் வண் கையினர்கள்
வாழ் திருக்கோட்டியூர்[139]

என்பதாகும். விருந்தோம்பல் என்பது கால வெள்ளத்தால் அழியக் கூடாத பண்பு என்பதை நன்கு அறிந்திருந்த ஆழ்வார்கள், தத்தம் பாசுரங்களில் அவ்விருந்தோம்பற் பண்பினைப் பொன்னேபோற் போற்றிப் பதிவு செய்து வெளியிட்டனர் எனக் கூறமுடிகிறது.

**நம்பிக்கைகளும் நிமித்தங்களும்**

நிமித்தம் பார்த்தல் மற்றும் பிற நம்பிக்கைகளானவை தொன்றுதொட்டு நிலவி வருவன என்பது வெளிப்படையானது. இவை பெரும்பாலும், ஏதேனுமோர் அச்சவுணர்வின் அடிப்படையில் தோன்றியது என்பர் ஆய்வாளர்கள்.

வாழ்க்கையில், பிற்காலத்தே நிகழவுள்ள நன்மை, தீமைகளை ஒரு சில அறிகுறிகளின் மூலம் அறிந்து கொள்ளலாமென்பது மக்களின் பரவலான நம்பிக்கையாகும். இந்நம்பிக்கையானது நற்சகுனம், தீயசகுனம் என்ற இரு பிரிவில் வைத்துப் பேசப்பெறும். இவற்றைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. ஒளி, ஒலி என்ற இரு நிலைகளில் இச்சகுனம் கருதப்படும். பல்லி ஒலித்தல் பற்றிக் குறிக்கும் நற்றிணை,

முன்னியது முடித்தனம் ஆயின் நன்னுதல்
வருவம் என்னும் பருவரல் தீர
படும் கொல் வாழி, நெடுஞ்சுவர்பல்லி[140]

என்கிறது.

அன்று வினைவயிற்பிரிந்து செல்லும் தலைவனிடம், அவன் என்று வருவான் எனத் தலைவி கேட்கிறாள். அதற்குத் தலைவன், தான் மேற்கொள்ளும் 'வினை முடிந்தவுடன் வருவேன்' என்று கூறிச் செல்கிறான். இன்று தலைவன் வருகைக்கு முன்பாகவே, வீட்டின் சுவரில் உள்ள பல்லி ஒலித்து அவன் வரவைத் தெரிவிக்குமோ? என்று கேட்பதாக மேற்சுட்டிய பாடற்பகுதி உள்ளது.

ஆழ்வாரின் பாசுரநாயகியானவள், இலக்கியம் கூறுவதற்கு அப்பாலும் சிந்தித்து நன்னிமித்தம் என்பதையும் தாண்டி, தலைவன் இங்கே வருமாறு செய்ய, தலைவியானவள் தான் ஒலியெழுப்பப் பல்லிக்குக் கட்டளையிடுகின்றாள். இதனை,

கொட்டாய் பல்லி குட்டி
குடம் ஆடி உலகு அளந்த
மட்டு ஆர் பூங்குழல் மாதவனை வர
கொட்டாய் பல்லிகுட்டி[141]

என்ற திருமங்கையாழ்வாரின் பாசுர அடிகள் தெரிவிக்கின்றன. பல்லி ஒலித்தல் என்பது நிமித்தத்திற்கான அறிகுறிகள் என்று குறித்த சங்கப் பாடல்களைக் கருத்தில் கொண்ட ஆழ்வார்கள், நிமித்தத்திற்குக் காரணமாகும் பல்லிகளையே கிளவித் தலைவியர் ஒலியெழுப்பக் கூறுவதாகத் தமது பாசுரங்களில் கூறியிருப்பது, அவர்தம் படைப்புத்திற வளர்ச்சியினை வெளிப்படுத்துவதாக உள்ளது.

**கண்களுக்கு மைதீட்டுதல்**

ஆய மகளிர் தம் கண்களுக்கு மைதீட்டி, அழகாகக் காட்சியளித்ததையும், தமது குழந்தைகளுக்கு கண்களில் அஞ்சனம்

*தீட்டியதையும் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன. இவ்வழக்கம் ஐங்குறுநூற்றில்,*

மாதர் உண்கண் மகன் விளையாடக்

காலித் தழீஇ இனிது இருந்தனனே[142]

*என்றும்,*

ஈர் இதழ் உண்கண் உகுத்த

பூசல் கேட்டும் அருளாதோயே[143]

*என்றும் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.*

*பெரியாழ்வாரின் திருமொழியில், கண்ணபிரானாக அவதரித்த திருமாலுக்கு, அவனது சகோதரியான காளிதேவி, குழந்தையான கண்ணனுக்கு உடலில் பூசுதற்காக வாசனைத் திரவியப் பொடியையும், கண்களுக்கு ஏற்ற மையையும் அனுப்பியதாகப் பாடப்பட்டுள்ளது. அப்பாடலானது,*

மெய் திமிரும் நானப் பொடியோடு மஞ்சளும்

செய்ய தடங்கண்ணுக்கு அஞ்சனமும் சிந்தூரமும்

வெய்ய கலைப்பாகி கொண்டு உவளாய் நின்றாள்[144]

*என்பதாகும். இதிலிருந்து, ஆண் குழந்தைகளுக்கு அஞ்சனம் தீட்டும் சங்ககால வழக்கத்தினை ஆழ்வார்ப் பாசுரங்களும் ஏற்று வெளிப்படுத்தின எனக் கூறமுடிகின்றது.*

**ஏறுதழுவுதல்**

*ஆயர்களின் குடியில் பெண் குழந்தை பிறந்தவுடனேயே, அப்பெண்ணின் எதிர்காலத் திருமண நோக்கத்திற்காக (ஏறு தழுவித் திருமணம் செய்தல்) ஆன்கன்று ஒன்றையும் வளர்க்கத் தொடங்குவர்.*

*சில காலத்திற்கு பின்பு, கன்று வளர்ந்து பெரிதான அந்த எருதைப் பிடித்து அடக்குபவனுக்கே அப்பெண்ணைத் திருமணம் செய்து கொடுப்பர் என்ற செய்தியை அவ்விலக்கியம் உணர்த்துகிறது.*

மாறெதிர் கொண்ட தம் மைந்துடன் நிறுமார்

சீறகு முன்பினோன் கணிச்சி போல் கோடுசி இ

ஏறு தொழூஉப் புகுந்தனர். . . . . . . . .[145]

*என்பது அவ்விலக்கியப் பகுதியாகும்.*

ஏராளமான இளைஞர்கள் முல்லை மற்றும் பிற மலர்களைக் கோத்த மாலையை அணிந்து ஏறு தழுவினர். போட்டியில் தங்களின் வலிமையைக் காட்டுவதற்காகக் களத்தில் வரிசையாக நின்றனர் என்பது அதன் கருத்தாகும்.

பெரியாழ்வார், கண்ணன் ஏறு தழுவி நப்பின்னையை மணப்பதற்காக எருதுகளை அடக்கிய செய்தியை,

துப்பு உடை ஆயர்கள் தம் சொல் வழுவாது
தூய கருங்குழல் நற்கோதை மயில் அனைய
நப்பினை தன் திறமா நல் விடை ஏழ் அவிய[146]

எனப் பாடிச் சித்திரிக்கின்றார். யசோதையின் சகோதரன் வளர்த்த ஏழு எருதுகளை அடக்கி, அவன் மகளைக் கண்ணன் மணந்த செய்தி, சங்கப்பாடலின் சுவை மாறாமல், இப்பாசுரத்தில் பொதிக்கப்பட்டுள்ளமை அறிந்து மகிழ முடிகிறது.

## ஆயர்களின் உடை

ஆயர்களின் உடைகள் பலவகைப்பட்டனவாக இருந்ததைச் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. துவராடை, கருந்துவநாடை, கலிங்கம், படாம் என்பதாகவும், பெயர்சுட்டாத ஒரு ஒற்றையாடை பற்றியும் பெரும்பாணாற்றுப்படையும் கூறுகிறது.[147]

கலித்தொகை துவராடை அணிந்திருந்த கரியமேனியுடைய ஆயமகன் ஒருவனை,

அந்துவர் ஆடைப் பொதுவனோடு[148]

என்ற பாடலடியில் குறிக்கின்றது.

ஆயர்கள் இன்றியமையாத ஒற்றை ஆடையினை மட்டும் உடுத்தியவர்களாகக் காணப்பட்டனர் என்கிறது சங்க இலக்கியம்.

இடையில் உடுத்தும் அவ்வாடையில் பொருட்களை வைத்துக் காப்பதற்காக, அதனை மடித்து வைத்துக் கட்டியிருந்தனர் என்ற குறிப்பு உண்டு. அவர்தம் தொழிற்கருவிகளை – அதாவது, வளைந்த கோலையும், இசைக்கருவியான புல்லாங்குழலினையும் அவ்வாறு இடுப்பில் செருகிக் கொண்டனர்.

மேற்சுட்டிய ஓர் உடையையே கண்ணனாக அவதரித்த திருமாலுக்குப் பூமிதேவியானவள், அனுப்பி வைத்தாளெனக் குறிக்கும் பெரியாழ்வார்ப் பாசுரம்,

கச்சோடு பொற்சுரிகை காம்பு கனவளை
உச்சி மணிசுட்டி ஒண்தாள் நிறைப் பொற்பூ[149]

என்கிறது. பொன்னால் செய்த உடைவாளைச் செருக ஏதுவான, நன்கு கரையிருக்கும்படியான ஆடையை அச்சுதனுக்கு அனுப்பியதாக இவ்வடிகள் தெரிவிக்கின்றன. ஆதலால், இடுப்புக் கச்சினைக் கோல் செருகுதற்கும், சிறிய பொருட்களை வைக்கும் வகையிலும் அமைத்திருப்பர் என்பது வெளிப்படுகிறது. பெரும்பாணாற்றுப்படை கூறும், எளிய அந்த ஒற்றையாடை ஆழ்வார்ப் பாசுரங்களில் மேம்படுத்தப்பட்ட ஒற்றையாடையாகப் பரிணமிக்கிறது என்று கூறமுடிகிறது.

## திருமால் வழிபாட்டின் வளர்ச்சி நிலை

திருமாலைப் புகழ்ந்து போற்றும் ஆழ்வார்ப் பாசுரங்களை 'அருளிச் செயல்' என்று வழங்குவது வைணவ மரபு. இது,

ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல் வாழி[150]

என்று வாழ்த்தப்படுகிறது. அப்பாசுரங்களுக்கென்று சிறப்பான விழாவாகக் கொண்டாடப்படுவது 'அத்யயன' விழாவாகும். இவ்விழா நடத்தப்படுவதையே திருமால் வழிபாட்டின் பிற்கால வளர்ச்சி நிலையாகக் கொள்ளலாம். திருமால் எழுந்தருளும் திருக்கோயில்களில் மிகச்சிறப்புடன் கொண்டாடப்படுவது இத்திருவிழாவாகும்.

இருபது நாட்களை உள்ளடக்கிய இந்த 'அத்யயன விழா' மார்கழி மாத வளர்பிறை 'ஏகாதசி' திதிக்கு முன் பத்து நாட்களும், பின் பத்து நாட்களும் கொண்டாடப்படுகிறது. முன் பத்து நாட்கள் 'பகற்பத்து' என்று கூறப்படுகிறது. இப்பகற்பத்து, 'திருமொழித் திருநாள்' என்று குறிப்பிடப்படுகிறது. பின்பத்து நாட்கள் 'இராப்பத்து' எனப்படுவதைத் 'திருவாய்மொழித் திருநாள்' என்றும் குறிப்பிடுவர்.

இராப்பத்து விழா திருமங்கையாழ்வாரால் திரவரங்கத்தில் தொடங்கப் பெற்றது என்பர். பகற்பத்து விழா, நாதமுனிகளால் தொடங்கப்பட்டது என்பதைக் ‘கோயிலொழுகு’ என்ற நூல் குறிப்பிடுகிறது.[151] திருவரங்கத்தில் தொடங்கப்பெற்ற இவ்விழா, மற்ற திவ்யதேசங்களாலும் பின்பற்றப்பட்டது.

நாதமுனிகள் காலத்தில் ‘அத்யயன’ விழாவானது சிறப்புடன் நடைபெற்றதாகவும், அவற்றில் நாதமுனிகளுடன் கவிச்சக்கரவர்த்தி கம்பர் கலந்து கொண்டதாகவும், சடகோபர் அந்தாதியில் குறிப்பு உள்ளது.

**அரையர் சேவை**

திருஅரங்கனின் முன் அவனது குணங்களை வரிசையாகக் கூறி இசையாலே பாடி மகிழ்விப்பது ‘அரையர் சேவையாகும்’. இதனை நிகழ்த்துபவர்கள், ‘அரையர்கள்’ என்று அழைக்கப்படுகின்றனர். கையில் தாளத்தோடு அபிநயித்து ஆழ்வார்ப் பாசுரங்களைப் பாடியதைக் கேட்டு, இறைவன் அதற்கு வசப்பட்டான் என்ற நம்பிக்கை வைணவர்களிடம் இன்றும் உண்டு.

சங்க இலக்கியமான பரிபாடலில்,

பாடுவார் பாணிச் சீரும், ஆடுவார் அரங்கத்தாளமும்
மஞ்சு ஆடு மலை முழக்கும்[152]

என்று பதிவு செய்யப்பட்டுள்ளது.

முருகனை வழிபடும் அன்பர்கள் பாடும் பாட்டின் தாள ஒலியும், நடனமாடுவாரது அரங்கத்தில் எழும் தாள ஒலியும் மேகங்கள் தவழும் மலையில் எதிரொலித்ததாக நல்லந்துவனார் பாடுவதை எண்ண முடிகிறது.

‘அரையர் சேவை’ என்பது இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழும் கலந்து உருவான கலை எனலாம். இக்கலையானது, சங்க இலக்கியங்களிலுள்ள ஆற்றுப்படை இலக்கியக் கூறுகளின் தாக்கத்தால் ஏற்பட்டதோ என எண்ணத் தோன்றுகிறது. சங்ககாலக் கலை மற்றும்

பண்பாடு, அரையர்களிடமிருந்து இயல்பாக வெளிப்படுவதை அறிய முடிகிறது.

ஆழ்வார்ப் பாசுரங்களை இவர்கள் முத்தமிழில் விளக்கிக் கூறுவது, பிறருக்கு பக்தியோடு நல்லறங்களைக் காட்டுவதாக அமைந்துள்ளது. எனவே, சங்க இலக்கியத் தாக்கம் பெற்று ஆழ்வாரின் பாசுரங்கள் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது.

**முடிவுரை**

இறைவழிபாடு என்ற நிலையில் சங்க இலக்கியங்களுக்கும், ஆழ்வார்ப் பாசுரங்களுக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளமையினை அறியமுடிகின்றது. தொல்காப்பியரின் அகத்திணை மரபுகளையும், புறத்திணை மரபுகளையும் அடிப்படையாகக் கொண்ட இறைவழிபாட்டுக் கூறுகள் சங்க இலக்கியங்களில் உள்ளன. இத்தகைய சங்க இலக்கியப் பாடல்களின் கருத்துகளை உள்வாங்கிக் கொண்ட ஆழ்வார்கள், அதே சாயலில் தமது பாசுரங்களையும் பாடி, இறைவழிபாட்டு மாண்பினை வெளிப்படுத்தினர் எனக் கூறமுடிகிறது.

சங்கத் தொகை நூல்களில் ‘கடவுள் வாழ்த்து’ப்பாடும் மரபு இருந்தது. பாரதம் பாடிய பெருந்தேவனார் பல நூல்களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடியுள்ளார். ஆனால், ஆழ்வார்ப் பாசுரங்கள் பக்திப் பனுவல்களாதலால் இவற்றிற்கெனத் தனித்தனியாகக் கடவுள் வாழ்த்து என்பது தேவையில்லை என்ற கருத்தில் அப்பாசுரங்கள் அவ்வாறே அமைந்தன எனக் கூறமுடிகிறது.

முல்லை நிலத் தெய்வமாகத் தொல்காப்பியரால் குறிக்கப் பெற்றுப் பின் சங்க இலக்கியத்தில் போற்றப்பட்ட மாயோனாகிய திருமால், ஆழ்வார்ப் பாசுரங்களிலும் போற்றப்படுகின்றான். முல்லை நிலத்திற்குரியனவாகப் பேசப்பட்டுள்ள முதல், கரு, உரிப் பொருட்களைச் சங்க இலக்கியங்கள் எவ்வாறெடுத்துப் பாடினவோ, அவ்வாறே ஆழ்வார்களும் பாடியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

‘மால்வரை நிவந்த சேணுயர் வெற்பு’ என்று நற்றிணை பாடியுள்ளதை, ‘நெடுமாலார்க்கு என் தூதாய்’ என்று திருவாய்மொழி பாடியுள்ளது; ‘பூவை விரிமலர் புரையும் மேனி’ எனப் பரிபாடல் பாடியதைப் ‘பூவை வீயாம் மேனிக்கு’ எனத் திருவாய்மொழி பாடியுள்ளது. இவை போன்ற சங்க இலக்கியத் தாக்கம் பலவற்றைப் பாசுரங்கள் பெற்றுள்ளமையினை அறியமுடிகிறது.

இறைவனின் திருமேனியைக் காண்பதால் மகிழ்ச்சியும் வளமும் கிடைக்குமென்ற சங்ககால மக்களின் நம்பிக்கையை, அவ்வாறே பிற்கால மக்களிடமும் நிலைநிற்கச் செய்ய வேண்டுமெனக் கருதிப் பாடிய ஆழ்வார்களின் பாசுரப் புனை திறம் பாராட்டத்தக்கதாயுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. மு.வரதராசன், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப.99.
2. வ.சுப.மாணிக்கம், **இலக்கியச் சாறு**, ப.150.
3. **தொல்., மரபியல்**, நூ.25.
4. **தொல்., பொருள்.**, நூ.51.
5. இரா.சாரங்கபாணி, **பரிபாடல் திறன்**, ப.129.
6. க.த.திருநாவுக்கரசு, **தமிழர் நாகரிக வரலாறு - முதற்பகுதி**, ப.156.
7. **கலித்.**, பா.103:76.
8. **முருகு.**, அடி.12.
9. **நற்.**, பா.32:1.
10. **பரி.**, பா.1:6-7.
11. மேலது., பா.3:73.
12. திரு.வி.கலியாணசுந்தரனார், **தமிழ் நூல்களில் பௌத்தம்**, ப.?.
13. தி.அரங்கநாதன், **ஸ்ரீ வைஷ்ணவ சமயக் கலைக்களஞ்சியம்**, 'அணிந்துரை'.
14. **திருவாய்.**, பாசு.3029.
15. **திருப்பாவை**, பா.474.
16. **திருமாலை**, பாசு.872.
17. **நற்.**, பா.9:1-2.
18. **கலித்.**, பா.132:21-22.
19. **திருவாய்.**, பாசு.2786.
20. மேலது., பாசு.2804.
21. **பெரிய திருமொழி**, பாசு.956.
22. **பரி.**, பா.8:97-101.
23. **கலித்.**, பா.93:24.
24. **பெரியாழ்.தி.மொ.**, பாசு.140.
25. **திருவாய்.**, பாசு.3744.
26. மேலது., பாசு.3136.
27. **பெரிய தி.மொ.**, பாசு.1803.
28. **நற்.**, பா.322:11-12.

29. **அகம்.,** *பா.14:15-16.*

30. **பரி.,** *பா.10:130-131.*

31. **திருப்பள்ளியெழுச்சி,** *925.*

32. **ஐங்.,** *பா.259:3-4.*

33. **பரி.,** *பா.2:73-75.*

34. **குருவழிபாடு,** *ப.89.*

35. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.4.*

36. **வேதங்களை ஏற்றிப் போற்றும் தமிழ் இலக்கியம்,** *ப.588.*

37. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.284.*

38. **பதிற்.,** *பா.30:33-35.*

39. *சிவ.திருச்சிற்றம்பலம் (தொ.ஆ.),* **ஸ்ரீ வைணவ சமயக் கலைக்களஞ்சியம்,** *ப.13.*

40. *கு.சுந்தரமூர்த்தி,* **அறுவகைச் சமயம் - சைவசித்தாந்தம் ஒப்பீடு,** *ப.111.*

41. **பெரியதிருமொழி.,** *பாசு.948.*

42. *மேலது., பாசு.950.*

43. **பதிற்.,** *பா21:5-7.*

44. **பரி.,** *பா.41:67-70.*

45. *ந.சுப்புரெட்டியார்,* **சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்,** *ப.373.*

46. **பெரிய திருமொழி,** *பாசு.1138:6-7.*

47. **திருவாய்.,** *பாசு.3542:3-6.*

48. **பட்டினப்பாலை,** *அடி.247-250.*

49. **திருப்பாவை,** *பாசு.475:4.*

50. **நற்.,** *பா.165:3-5.*

51. **பரி.,** *பா.1:61-65.*

52. *மேலது., பா.19:19-29.*

53. **திருப்பாவை,** *பாசு.481.*

54. *மேலது., பாசு.488.*

55. *மேலது., பாசு.495.*

56. *கா.சு.பிள்ளை,* **தமிழர் சமயம்,** *ப.97.*

57. **முதல் திருவந்.,** *பாசு.2125.*

58. **இரண்.திருவந்.,** பாசு.2182.

59. வெள்ளைவாரணர்,

60. தா.குருசாமி தேசிகர், **க.ஆ.குமரகுருபரர் கட்டுரைகள்,** ப.78.

61. **பரி.,** பா.3:63-72.

62. **பெரிய திருமொழி,** பாசு.1408.

63. **பரி.,** பா.2:27.

64. மேலது., பா.3:71-72.

65. **திருவாய்.,** பாசு.2953.

66. **பரி.,** பா.1:3.

67. மேலது., பா.3:59.

68. **பெருமாள் தி.மொ.,** பாசு.647.

69. **பரி.,** பா.13.

70. மேலது., பா.13:42.

71. **பெரிய தி.மொ.,** பாசு.1943.

72. மேலது., பாசு.1947.

73. **நான்மு.திரு.,** பாசு.2407.

74. **பரி.,** பா.3:1-2.

75. **திருவாய்.,** பாசு.3708.

76. மேலது., பாசு.3710.

77. **பரி.,** பா.3:81-82.

78. **பெரிய திருமொழி,** பாசு.1335.

79. **பரி.,** பா.14.

80. **திருவாய்.,** பாசு.3015.

81. **பரி.,** பா.1.

82. **தொல்.பொ.,** நூ.5.

83. மேலது., நூ.109.

84. மேலது., நூ.23.

85. **பெரியாழ் தி.மொ.,** பாசு.14.

86. மேலது., பாசு.17.

87. மேலது., பாசு.204.

88. **பெரியாழ் தி.மொ.,** *பாசு.254.*

89. **கலித்.,** *பா.105.*

90. **திருப்பாவை,** *பாசு.478.*

91. **தொல்.,** *நூ.23.*

92. **இலக்கியத்தில் ஆயர்,** *ப.72.*

93. **திருப்பாவை,** *பாசு.484.*

94. **திருமாலை,** *பாசு.873.*

95. **திருப்பாவை,** *பாசு.478.*

96. **அகம்.,** *பா.14:7-9.*

97. **நெடு.,** *அடி.3-4.*

98. **அகம்.,** *பா.14:7-9.*

99. **குறள்.***1128.*

100. **திருப்பாவை,** *பாசு.502.*

101. மேலது., *பாச.501.*

102. **திருப்பள்ளியெழுச்சி,** *பாசு.920.*

103. **அகம்.,** *பா.393:17-18.*

104. **பெரியாழ் தி.மொ.,** *பாசு.156.*

105. மேலது., *பாசு.264.*

106. **மூன்றாம் திருவந்.,** *பாசு.2329.*

107. **பெரியாழ் தி.மொ.,** *பாசு.276.*

108. **திருமாலை,** *பாசு.907.*

109. **நாச்சி.தி.மொ.,** *பாசு.527.*

110. **அகம்.,** *பா.34:12-14.*

111. **நாச்சி.தி.மொ.,** *பாசு.625.*

112. **அகம்.,** *பா.34:1-3.*

113. **நாச்சி.தி.மொ.,** *பாசு.588.*

114. **கலித்.,** *பா.104:29-31.*

115. **திருப்பாவை,** *பாசு.489.*

116. மேலது., *பாசு.499.*

117. **அகம்.,** *பா.214:12-13.*

118. **நாச்சி.தி.மொ.,** *பாசு.547.*

119. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.354:3.*

120. **தொல்., அகத்.,** *நூ.21.*

121. **திருப்பாவை,** *பாசு.487.*

122. **கலித்.,** *பா.101:34-36.*

123. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.229.*

124. **மலைபடு.,** *அடி.416-418.*

125. **திருப்பாவை,** *பாசு.500.*

126. **அகம்.,** *பா.69:18.*

127. மேலது., *பா.1:1.*

128. **புறம்.,** *பா.142:4.*

129. **வியோவின் தமிழகராதி,** *ப.36.*

130. **புறம்.,** *பா.130:1.*

131. **வியோவின் தமிழகராதி,** *ப.491.*

132. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.47.*

133. மேலது., *பாசு.42.*

134. மேலது., *பாசு.49.*

135. மேலது., *பாசு.8.*

136. **திருப்பாவை,** *பாசு.500:4-5.*

137. **நற்.,** *பா.221:8.*

138. மேலது., *பா.142:9.*

139. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.369.*

140. **நற்.,** *பா.169:1-3.*

141. **பெரிய திருமொழி,** *பாசு.1945.*

142. **ஐங்.,** *பா.406.*

143. மேலது., *பா.480.*

144. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.52.*

145. **கலித்.,** *பா.101:7-9.*

146. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.70.*

147. **பெரும்பாண்.,** *அடி.175.*

148. **கலித்.,** *பா.102:37.*

149. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.51.*

150. மணவாள மாமுனிகள், **உபதேச ரத்தின மாலை,** *ப.3.*

151. **திவ்ய பிரபந்தங்களும் திரு அத்தியயன விழாக்களும்,** *ப.139.*

152. **பரி.,** *பா.8:109-110.*

# இயல் 2

# அகத்திணைக் கூறுகள்

### தொல்காப்பியத்தில் அகத்திணைக் கூறுகள்

*உயிர்கள் அனைத்திற்கும் இன்பம் என்பது பொதுவான ஒன்று என்கிறார் தொல்காப்பியர். ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் தம் உள்ளத்துள் உணரும் உணர்வு அகமாகும்.*

*அகத்திணையானது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என்ற ஏழு திணைகளின் ஒழுகலாறுகளைக் கூறுவது. இவற்றில் அன்பின் ஐந்திணையே சிறப்பானதாகக் கருதப்படுகிறது.*

*சங்ககால நெறியினையொட்டிய அகப்பொருட் கூறுகளை இறைவன் மீது ஏற்றிப் பாடும் புதுமையைப் பல இலக்கியப் புலவர்கள் பிற்காலத்தில் இயற்றினர்.*

*வைணவ பக்தி இலக்கியமான நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் இறைவன் தலைவனாகவும் உயிர்கள் தலைவியாகவும் பேசப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. பசுக்களாகிய ஆன்மாக்கள் பதியாகிய இறைவனைக் காதல் கொள்வதான பாவனையில் ஆழ்வார்கள் பாடிய பாசுரங்கள் உலகியற்காதல் என்னும் நிலையை நினைவூட்டுவனவாகவுள்ளன.*

### அகப்பாட்டு மரபு

*சங்க அக இலக்கியங்களில் கிளவித் தலைவன், தலைவியின் பெயர் சுட்டா மரபு காக்கப்படுகிறது. அது, 'சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்' என்ற தொல்காப்பியத்தின் வழியதாகும். ஆழ்வார்ப் பாசுரங்களில் தலைவனான இறைவன் யார் என்பதும், தலைவி யார் என்பதும் விளக்கம் பெறுகின்றது. பாசுரங்கள், தலைவனும் தலைவியும் என்ற இவர்களின் தன்னுணர்வுப் பாடலாக அமைந்திருப்பதால் தலைவன், தலைவியின் பெயர்கள் வெளிப்படும் நிலையில் அமைந்தது என்று கூறமுடிகிறது.*

'காமப்பகுதி கடவுளும் வரையார் . . .' என்று கடவுளுக்கும் மனிதருக்குமான அகவாழ்வு விதியைத் தொல்காப்பியம் கூறுகிறது. அத்தகைய தன்மையில் ஆழ்வார்கள் 'அகம்' என்பதைத் தாம் வழிபடும் கடவுளுக்கு உரியதாக்கிப் பாடுவதைப் பாசுரங்களில் காணமுடிகிறது. கடவுளிடம் காட்டும் அன்பு புறத்திணை எனப்பட்டாலும், அதன் பொருட்கூறுகள் அனைத்தும் அகப்பொருளைச் சார்ந்ததாகவே அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

**திருவாய்மொழியில் அகமரபு**

'வான்றோய் நல்லிசைச் சான்றோர்' என்ற பெருமைக்குரியவர்களான சங்கப் புலவர்கள், செய்யுட்களை மிகுந்த எண்ணிக்கையில் பாடியுள்ளனர்.

'உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துள' என்பதாகச் சொல்லப்படும் இறைவனைப் போலக் காலந்தோறும் பலவகை இலக்கியங்களிலும் அகத்திணை மரபு ஊடி நிற்கிறது எனலாம். பக்தி இலக்கியங்களில் இதன் தாக்கம் மிகுதியாகும். உலகியலடியாகப் பிறந்த அகத்திணைக் காதலைப் பக்திக் காதலாக, எளிதில் மடைமாற்றம் செய்து பக்தி இலக்கியக் கவிஞர்கள் பாடி மகிழ்ந்தனர். இதன் விளைவாக, இறைவனை அனுபவிக்கும் முறைகளுள் ஒன்றாகத் தலைவன், தலைவி பாவங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது எனலாம்.

ஆழ்வார்கள், சங்க கால நெறியையொட்டி அகப்பொருட் கொள்கைகளை அமைத்துள்ளனர். திவ்யபிரபந்தமானது, சங்ககாலத் தலைவன், தலைவியின் காதல் வாழ்வை விரித்துக் கூறுவதாக அமைந்துள்ளது.

பருவம் நிரம்பிய அனைத்து உயர்திணை அஃறிணை உயிர்கட்கும் பொதுவாய் அமைந்து கிடப்பது இன்பமாகும். இதனைத் தொல்காப்பியம்,

எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தான் அமர்ந்து . . .[1]

என்கிறது. இதனை நன்குணர்ந்த நம்மாழ்வார்,

கண்டு கேட்டுற்று மோந்துண்டு ழலும் ஐங்கருவி
கண்ட இன்பம் . . .[2]

என்கிறார். அதாவது, ஐம்புல இன்பத்தையும் இறைவனின் அருளால் ஆழ்வார் விட்டுவிட்டதாகப் பாடுகிறார். மேலும், காமத்திற்குரிய துறைகள் யாவும் பேரின்பத்தைக் கொடுக்க வல்லதான இன்பத்துறைகள் போன்றனவே என்கிறார்.

**நால்வகை நிலங்கள்**

தொல்காப்பியம் கூறும் எழுவகைத் திணைகளில் நிலம் பெறுவன நான்காகும். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பனவாகும். உலகிலுள்ள பொருட்கள் அனைத்தையும் முதல், கரு, உரி என்று தொல்காப்பியர் வகைப்படுத்துவார். அத்தகைய பொருட்களை மையப்படுத்தியே ஆழ்வார்களும் பாசுரங்களைப் பாடியுள்ளனர்.

தமிழ்ச் சான்றோர், நில அமைப்பினை ஐந்தாக வகைப்படுத்தினர். எனினும், தொல்காப்பியம் பாலைக்கெனத் தனியே நிலம் கூறவில்லை. இதனைக் கொண்டே பாலையை நீக்கி, 'நானிலம்' என்னும் வழக்கு நிலைபெற்றது.

பாலை என்பது குறித்துக் கூறும் சிலப்பதிகாரம்,

. . . வேனலங் . . . . . . . . . . .
தான் நலம் தருகத் தன்மையிற் குன்றி
முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
நல் இயல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் வடிவம் கொள்ளும்[3]

என்கிறது. வேனில் வெப்பத்தால் நிலத்தியல்பு திரிவது இயல்பு. நானிலங்களும் வானம் பொய்த்து வறண்டு விடுமானால், அந்த நிலம் எதுவாயினும் பாலையே. அந்தந்த நிலங்களுக்குரிய வளம் குறைந்த காலத்தில் மட்டுமே அவை பாலை என்று பெயர் பெறும். இது தற்காலிகமானதுதான். எனவே, பாலைக்கெனத் தனி தெய்வமும், நிலமும் கூறுவது பிற்கால வழக்காகும் எனலாம்.

இம்மரபினை நன்குணர்ந்த நம்மாழ்வார், வேனில் வெப்பத்தால் நானிலமும் நீரற்று வறண்டுபோன நிலையை,

நாநிலம் வாய்க் கொண்டு நன்னீர் அறமென்று கோதுகொண்ட
வேனிலஞ் செல்வன் சுவைத்து உமிழ் பாலை கடந்த பொன்னே[4]

என்ற பாசுரத்தில் விவரிக்கின்றார். அதாவது, ‘வேனிலஞ்செல்வன் நானிலத்தையும் தன் வாயகப்படுத்தி, அவனால் உமிழப்பட்ட சக்கை போல் பாலை நிலம் உள்ளது’ என்று கூறுகிறார். நம்மாழ்வாரின் இக்கூற்று, சங்க காலத்தை நினைவிற் கொண்டு வெளிப்பட்டதாகும் எனக் கூறமுடிகிறது.

**முல்லை**

காடுறை உலகிற்கு முதல், கரு, உரிப்பொருளைக் கொண்டதாக,

முல்லை வைந்நுனை தோன்ற இல்லமொடு
பைங்கால் கொன்றை மென்பிணி அவிழ
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
கார் செய்தன்றே கவின்பெரும் கானம்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
உவக்காண் தோன்றும் - குறும்பொறை நாடன்[5]

என்ற அகநானூற்றுப் பாடற்பகுதி உள்ளது. இதில் முல்லை, கொன்றை என்ற மலர்கள் குறிப்பிடப்பட்டு, கார்காலம் வந்ததால் தலைவனும் வந்து சேர்ந்தான் என்ற பொருள்படும்படி சிறப்பாகப் பயின்று வருவதைக் காணமுடிகிறது. ஆழ்வார்ப் பாசுரங்களிலும் இத்தகைய குறிப்புகள் பயின்று வந்துள்ளன.

பெரியாழ்வார் தனது பாசுரமொன்றில் முல்லையின் கருப்பொருளான முல்லை மலரினையும், சிறுபொழுதாகிய அந்திமாலைப் பொழுதினையும் அமைத்து,

முல்லை நல் நறுமலர் வேங்கை . . .
எல்லியம் போதாகப் பிள்ளை வரும்[6]

என்று பாடுகிறார். அதில் முல்லை, வேங்கை மலர்களால் தொடுத்த மாலையை அணிந்தவனாக, ஆயர் குழாமின் நடுவே அந்திப் பொழுது

வந்ததால் கண்ணன் வந்தான் எனக் குறிப்பிடுகின்றார். மேலும், வண்டுகள் நிறைந்த சோலையால் சூழப்பட்டதாக அப்பகுதி விளங்குவதை,

தேனு உலாவிய செழும் பொழில்
தழுவிய . . . . . . .[7]

என்றும், முல்லை நில உரிப்பொருளான 'இருத்தல்' என்பதை,

திருமால் திருமங்கையொடு ஆடு தில்லைத்
திருச் சித்திரகூடம் சென்று சேர்மின்களே[8]

என்றமைத்தும் பாடியுள்ளார்.

**குறிஞ்சி**

நில அமைப்பில் முதலில் தோன்றியது பாறைகளாலான மலைப்பகுதியே என்பர். இவ்வாறான மலையும் மலைசார்ந்த பகுதியும் குறிஞ்சி நிலமாகும். இத்திணைக்குரிய அனைத்துப் பொருட்கூறுகளைக் கொண்டதாக அகநானூற்றில்,

கிளைபா ராட்டும் கடுநடை வயக்கயிறு
முளைதருபு ஊட்டி வேண்டுகுளகு அருத்த[9]

என்ற பாடற்பகுதி அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. மேலும் குறுந்தொகையில் வரும்,

. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
கருங்கோல் குறிஞ்சிப்பூக் கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே[10]

என்ற தொடர்களை உட்கொண்ட பாடலும் கருதத்தக்கது. மலைச்சாரலும், தேன் ஒழுகும் குறிஞ்சி மலர்களும் நிறைந்த நாட்டிலுள்ள தலைவனுடன் நட்புக் கொண்டதாகச் சங்ககாலத் தலைவி கூறுகின்றாள்.

தலைவன் தலைவியின் காதல் நிலையைச் சுட்டும் அதேபாங்கில், திருமங்கையாழ்வார் தனது பாசுரமொன்றில்,

குறவர் மாதர்களோடு வண்டுகள்
குறிஞ்சி மருளிசை பாடும் வேங்கடத்து . . .[11]

என்று பாடி, அகன்ற மலைகளிலுள்ள சோலைகளில் வண்டுகள் ஒலி எழுப்ப, குறப்பெண்டிரும் பாடியதாக வருணித்துள்ளார்.

தொண்டரடிப்பொடியாழ்வார்,

கதிரவன் குணதிசை சிகரம் வந்தணைந்தான்

. . . . . . . . . . . . . . . . . .[12]

என்ற பாசுரத் தொடரின் மூலம் கதிரவன் மலைமுகட்டில் தோன்றினான் என்று கூறிக் குறிஞ்சிக்குரிய மலையும் மலைசார்ந்த பகுதியையும் வருணிக்கின்றார். திருமங்கையாழ்வார்,

. . . . . . . . . . . . . . . . . . .

பைங்கண் ஆனைக் கொம்பு கொண்டு பத்திமையால் அடிக்கீழ்ச்

செங்கண் ஆளியிட்டு இறைஞ்சும் சிங்கவேள் குன்றம்[13]

என்ற பாடலடிகளில், யானைத் தந்தங்களைக் கொண்டு பக்தியினால் அவனது திருவடிகளில் வைத்துப் படைத்து வணங்கும் ‘சிங்கவேள் குன்றம்’ என்று பாடி மலைப்பகுதியினை வருணித்துள்ளார்.

**பண்**

தெய்வங்களைப் பண்ணமையப் பாடிப் பணிந்து வணங்குவது என்ற மரபார்ந்த செய்தியைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. மலைபடுகடாம்,

நறுங்கார் அடுக்கத்துக் குறிஞ்சி பாடி . . .[14]

என்ற அடியில் பக்தியுடன் ‘குறிஞ்சிப்பண்’ பாடும் மரபினைத் தெரிவிக்கின்றது.

தென்றலானது மல்லிகை மணத்தைத் தொட்டும், உடலைத் தீண்டியும் இனிமையாக வீச, குறிஞ்சிப் பண்ணானது காதில் பட்டு ஒலிப்பதாக வருணிக்க எண்ணும் நம்மாழ்வார், தனது திருவாய்மொழிப் பாசுரத்தில்,

மல்லிகைக் கமழ் தென்றல் ஈரும் ஆலோ!

வண் குறிஞ்சி இசை தவழும் ஆலோ![15]

என்று பாடிக் குறிஞ்சிப்பண் என்பதைப் பதிவு செய்துள்ளார்.

**மருதம்**

*மருத நிலம் பற்றி அகநானூறு கூறும்,*

ஊர்க் குறு மகளிர் குறுவழி விறந்த

வராஅல் அருந்திய சிறு சிரல் மருதின் . . .[16]

*என்ற ஓரம்போகியாரின் பாடற்பகுதி சுவைத்து எண்ணத்தக்கது. மருதநிலச் சிறுமியர் வெண்மணலைக் குவித்து, வெள்ளியால் செய்த பூண் அணிந்த கரும்பாகிய உலக்கையால், தம் இடை அசைய குடியின் பெருமையைப் பாடி, அரிசி குற்றுமாறு போலக் குற்றுவர். அப்பாடலைக் கேட்டவாறே இறால் மீன்களைத் தின்னும் மீன்கொத்திப் பறவையானது, மருத மரத்தின் தாழ்ந்த கிளையில் இருந்து உறங்கும் என்கிறது இப்பகுதி.*

*இதேபோன்றதொரு சிறந்த மருதநில வருணனை, திருமங்கையாழ்வாரின் திருநரையூர்ப் பாசுரத்திலும்,*

சீர் தழைத்த கதிர்ச் செந்நெல் செங்கமலத்து இடை இடையின்

பார் தழைத்துக் கரும்பு ஓங்கிப் பயன் விளைக்கும்[17]

*எனப் பதிவாகியுள்ளது. இதில் மருத நிலத்திற்குரிய நெல், கரும்புப் பயிர்கள் செழித்து வளர்ந்துள்ள விதம் வருணிக்கப்படுகிறது.*

**குவளை மலர்கள்**

மை அணைந்த குவளைகள் தம் கண்கள் என்றும்

மலர்க் குமுதம் வாய் என்றும் கடைசிமார்கள்

. . . . . . . . . . . . .[18]

*என்ற அடிகள், உழத்தியர்கள் களையினைப் பறிப்பதற்காகக் கழனியில் இறங்கியும், குவளை மலர்களைத் தமது கண்களாகக் கருதியும், சிவந்த ஆம்பல் மலரைத் தமது வாயாக நினைத்தும் அக்களையைப் பறிக்காமல் கரையேறுமிடம் என்பதாகச் சித்திரிக்கின்றன.*

**அன்னம்**

*மருதநிலக் கருப்பொருள்களுள் ஒன்றான அன்னம் சங்கப்பாடல்களில் பல இடங்களில் குறிக்கப்பட்டுள்ளமை வெளிப்படை. ஆழ்வார்ப் பாசுரங்களிலும் இக்குறிப்பு உண்டு. இதற்குச் சான்றாக,*

எழுந்தன மலர் அணைப் பள்ளிகொள் அன்னம்

ஈன்பனி நனைந்த தம் இருஞ்சிறகு உதறி[19]

என்ற பாசுர அடிகளைச் சுட்டமுடிகின்றது. மலர்களில் மகிழ்ச்சியாக உறங்கிக் கிடந்த அன்னங்கள், இரவு முழுவதும் தத்தம் சிறகுகளில் படிந்திருந்த பனித்துளியை உதறியவாறு எழும் என்று கூறும் இப்பாசுரத்தின் காட்சி வருணனை, சங்க கால வருணனையை நினைவுபடுத்துவதாக உள்ளது.

**பண்**

மருதநிலப் பண்ணாகக் 'காமரம்' என்ற பண் குறிப்பிடப்படுகின்றது. இதனைச் 'சீகாமரம்' என்கிறார் நச்சினார்க்கினியர். இன்பம், காமம் என்ற உணர்வுகளுக்கு ஏற்ற பண் இது என்பதாகக் கூறப்படுகிறது. இப்பண் பல இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது.

விடியலில் அந்தணர் வேதம்பாட, யாழோர் மருதப்பண் இசைத்தனர் என்பதை மதுரைக்காஞ்சி,

ஓத லந்தணர் வேதம் பாடச்
சீரினிது கொண்டு நரம்பினி தியக்கி
யாழோர் மருதும் பண்ணக் காழோர் . . . .[20]

என்ற அடிகளில் கூறுகின்றது.

அதாவது, பொய்கையில் மலரும் பூக்களில் தேன் ஊறியிருக்கும். அதுபோல, அந்தணரின் உள்ளத்தே இறை அன்பானது ஊறி நிற்க, தேனூறிய பூக்களில் வண்டுகள் தேனுண்டு களித்துப் பாடுவது போல், அந்தணர்கள் இறையன்பு பொங்குமாறு வேதம் பாடுகின்றனர் என்று இவ்விலக்கியம் குறிப்பிடுகின்றது. இதற்கேற்ப, நம்மாழ்வார்,

எல்லியும் காலையும் தன்னை நினைந்தெழு
. . . . . . . . . . . . . . . . . . . . . .
அல்லி அம்தண் அம்துழாய்முடி அப்பன் . . .[21]

என்று பாடிச் சங்ககால மருதநிலக் காட்சியை நினைவுபடுத்துகின்றார்.

**நெய்தல்**

*நெய்தல் நிலமானது, உரிப்பொருளாக இரங்கல் மற்றும் இரங்கல் நிமித்தத்தையும், கடலும் கடல்சார்ந்த முதற்பொருளாகிய நிலத்தையும் கொண்டதாகும். அத்தகைய நெய்தல் நிலக் காட்சியை அகநானூறு,*

கானல் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீல்நிறப் பெருங்கடல் பாடு எழுந்து ஒலிப்ப
மீன் ஆர் குருகின் மென்பறைத் தொழுதி
குவை இரும் புன்னைக் குடம்பை சேர
. . . . . . . . . . . . . . . . . . . . . .
தழை தளரத் தூக்கி . . . . . . . . . . .
அழிதக வந்த கொண்டலோடு கழிபடர்க்
காமர் நெஞ்சம் கையுறுபு இனைய . . . . .[22]

*என்ற பாடலடிகளின் வழித் தெரிவிக்கின்றது.*

*கடற்கறைச் சோலையில் உள்ள மலர்கள் குவிந்துள்ளன. கடலானது மிகுதியாக ஒலி செய்கிறது. மீனையுண்ணும் பறவைக் கூட்டம் அங்குள்ள புன்னை மரத்தில் கூடுகட்டி வாழ்கிறது.*

*மாலை நேரம் வந்தவுடன் அவை, அதன் கூடுகளுக்குத் திரும்பிச் செல்லுகின்றன. தாழ்வாக வீசும் காற்றினால் தாழைச் செடிகள் அங்குமிங்குமாக அசைந்து தளர்ந்துள்ளன. தலைவியும் தலைவனும் பிரிந்திருப்பதனால், தலைவியின் நெஞ்சமானது செயலிழந்து வருந்தும் நிலையினை இப்பாடலின் ஆசிரியர் பாடுகின்றார்.*

*நெய்தற் காட்சியின் இத்தகைய வருணனையைச் சுவைத்து மகிழ்ந்த ஆழ்வார்களும், தமது பாசுரங்களில் அவ்வாறே அழகுற வருணித்துள்ளனர்.*

*தலைவனைப் பிரிந்து அவனையே எண்ணி இரங்கும் தலைவியின் உள்ளம், பாசுரமொன்றில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. கடற்கரைப் பகுதியான திருப்புல்லாணி என்ற ஊர் பாடப்பட்டுத் திணை வருணனை முழுமைபெறுவதை அறியமுடிகிறது. பெரிய திருமொழியின்,*

என்னை நைவித்து எழில்கொண்டு அகன்ற பெருமாடம்

புன்னை முத்தம் பொழில் சூழ் புல்லாணியே[23]

என்ற பாசுரப்பகுதி, புன்னை மரத்தையும் தலைவியின் பிரிவையும் நெய்தல் நிலத்திற்குப் பொருந்த விளக்குகின்றது. அத்துடன், அதே வைணவ இலக்கியத்தில் வரும்,

கா ஆர் மடல் பெண்ணை அன்றில் அரிகுரலும்[24]

என்ற தொடரில், பனை மரத்தில் காணப்பட்ட அன்றிற் பறவையின் தழுதழுத்த குரலின் அவலம் காட்சிப்படுத்தப்பட்டுள்ளமையினையும் அறிந்து சுவைக்க இயலுகின்றது.

ஐந்திணை ஒழுக்கங்களைப் பாடிய சங்ககாலப் புலவர்கள், திணைக்குரிய பொருள்களை நிலத்திற்கேற்பச் சுவைப்பட எழுதினர். அதனை மெச்சிய ஆழ்வார்கள், தமது பாசுரங்களிலும் ஐந்திணைக் கூறுகளை அமைத்துப் பாடினர். இவ்வகையில், மேற்சுட்டிய நெய்தல் நிலக் கூறுகளை நெய்தல் நிலப்பரப்பில் அமைந்துள்ள வைணவத் தலங்களைப் பாடும்பொழுது விரித்துரைத்துள்ளனர் எனக் கூறமுடிகின்றது.

**பிரிவு**

தலைவன், தலைவியிடையே ஏற்படும் பிரிவு நிலைகள் பற்றிய விளக்கங்களைத் தொல்காப்பியம் பேசுகிறது,

ஓதல் பகையே தூதிவை பிரிவே[25]

எனக்கூறும் அவ்விலக்கணம்,

ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன . . . .[26]

என்கிறது. அதாவது, கற்பதற்கான பிரிவும், தூது போவதற்கான பிரிவும் நால்வகை வருணத்திலும் உயர்ந்த அரசர்க்கும், அந்தணர்க்கும் உரியதாகக் குறிப்பிடப்படுகின்றது.

உயர்ந்தவர் என்பவர் ஒழுக்கத்தினாலும், குணத்தினாலும், செல்வத்தினாலும் உயர்ந்தோர் என்பது பண்டைக் காலக் கருத்தாகும்.

அத்தகைய தன்மைகளையுடையவனான பார்ப்பான் ஒருவன் தூது செல்ல, அவனது உரிய சொற்களால் சந்து செய்வித்தான். உடனே போர் நிறுத்தத்திற்கு அறிகுறியாக, யானையின் மணி நீக்கப்பட்டது என்னும் செய்தியை,

வயலைக் கொடியின் மருங்குல்
உயவன் ஊர்தி பயலைப் பார்ப்பான் . . .[27]

என்ற புறநானூற்றுப் பாடற்பகுதியானது சுட்டுகிறது.

புறநானூறு இலக்கியத்தில் சொல்லப்பட்ட இச்செய்தியினை இன்றியமையாததாக ஆழ்வார்கள் கருதினர். எனவே, அவர்தம் பாசுரத்தில் இதனைக் குறிக்கத் தவறவில்லை எனலாம். கண்ணன் பஞ்சபாண்டவர்க்குத் தூது சென்றமையினை,

. . . . சென்றான் தூது பஞ்சவர்க்கு ஆய்த் . . .[28]

என்ற தொடர் குறித்துள்ளமையினை எண்ணமுடிகிறது.

பாண்டவர்களுக்குச் சமமான பங்கினைத் தராது, கண்ணனின் சந்து செய்வித்தலை ஏற்க மறுத்த துரியோதனனையும் அவன் சகோதரர்களையும் அழித்து, பூமி பாரத்தை நீக்குவதற்காகப் பாரதப் போரில் தூது சென்று அருச்சுனனுக்குத் தேரோட்டியாக இருந்த பெருமான் அவன் என்பதை,

பார்ஏறு பெரும் பாரம் தீரப் பண்டு
பாரதத்துத் தூது இயங்கி பார்த்தன்[29]

எனத் திருமங்கையாழ்வார் குறிப்பிடுகின்றார். இதிலும் புறநானூற்றுச் சாயல் உள்ளது.

**பொருள்வயிற் பிரிவு**

சங்க இலக்கியங்களில் பாடப்பட்டுள்ள பல துறைகளுள் 'பொருள்வயிற் பிரிதல்' என்பதும் ஒன்று. பொருளீட்டச் செல்லும் தலைவனின் செயலை எண்ணித் தலைவியானவள் கண்ணீர் வடிக்கிறாள். இத்துயர நிகழ்வு நற்றிணையில்,

செலவிரை வுற்ற அரவம் போற்றி
மலர் ஏர் உண்கண் பனிவர ஆயிழை . . .[30]

என்றவாறு குறிக்கப்பட்டுள்ளது.

ஆழ்வார்ப் பாசுரங்களிலும் 'பொருள்வயிற் பிரிதல்' என்ற இத்துறை எடுத்தாளப்பட்டுள்ளது. நற்றிணையில் தலைமகன் கூற்றாகவுள்ள மேற்சுட்டிய பகுதி, பாசுரத்திலும் அதே பாங்கிலேயே அமைக்கப்பட்டுள்ளது. சொல்லொன்றும் செயலொன்றுமாகச் செயல்படும் தலைவன், தனது தலைவிக்குத் தீராத பிரிவுத் துயரினை ஏற்படுத்தி விட்டான் என்பது,

. . . . . .

மான் குன்றம்ஏந்தி தண் மாமலை

வேங்கடத்து உம்பர் நம்பும்

சேண் குன்றம் சென்று பொருள் படைப்பான்[31]

என்றவாறு வருணிக்கப்பட்டுள்ளது. இதுவும் குறிக்கத்தக்கதாய் உள்ளது.

**தலைவியிருக்கும் இடத்திற்கே தலைவன் வருதல்**

பிரிவுத் துயரால் தலைவி வருந்திக் கூறுவதையும், இடத்தையும் கூறவந்த தொல்காப்பியம்,

கிழவனை மகடூஉப் புலம் பெரிதாகலின் . . .[32]

என்றும்,

வண்ணம் பசந்து புலம்புறு காலை

உணர்ந்த போல உறுப்பினைக் கிழவி

புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே[33]

என்றும் இலக்கணப்படுத்தியுள்ளது.

தலைவி உடல் மெலிந்தாலும், அதனை வருந்திக் கூறிய வண்ணம் இருப்பாளேயன்றி அதற்காகத் தலைவனிருக்குமிடம் நோக்கிச் செல்லாத உயர்ந்த நிலையில் தலைவி இருப்பாள் என்பதைத் தொல்காப்பியம்,

உடம்பும் உயிரும் வாடியகாலும்

என்னுற் றனகொல் இல்லையெனின் அல்லது

கிழவோர் சேர்தல் கிழத்திக்கில்லை[34]

என்று கூறுகிறது. இத்தகைய உயர்ந்த தலைவியே சங்ககாலத்தில் பேசப்பட்டவள் என்பது வெளிப்படை,

துயரம் மிகுந்தாலும் தலைவியானவள் தலைவனிருக்குமிடம் நோக்கிச் செல்லாத உயர்ந்த பண்பு இலக்கியங்களில் பேசப்பட வேண்டும் என ஆழ்வார்கள் கருதினர். ஆழ்வார்களின் அத்தகைய கருத்து வெளிப்பாட்டிற்கு,

ஏடி லங்கு தாமரை போல்
செவ்வாய் முறுவல் செய்தருளி
மாடு வந்து, என் மனம் புகுந்து நின்றார்[35]

என்ற பாசுர அடிகளைச் சான்றாக்க முடிகிறது.

திருமால், தாமரைப் பூப்போன்ற சிவந்த திருவாயால் புன்முறுவலுடன் தலைவியின் அருகில் வந்து நின்று, அவளது உள்ளத்திலும் புகுந்தவனாகிறான். மாலையில் வருகின்றான்; வந்து மலர்ப்படுக்கையில் தங்கி, பின் ‘பிரிகிறேன்’ என்று சொல்லிப் போய்விடுகிறான். தலைவியின் கண்களில் நீர்சோர ‘அதனைப் பார்த்தும் அவன் அப்படியே இருக்கின்றானே’ என்று வருந்திக் கூறுகிறாள். அவனது ஊரைச் சொல்லுகின்றாளே தவிர, அவனிருக்குமிடத்தைத் தேடிச் செல்லாதவளான அத்தலைவியின் புலம்பலை,

என் ஐம் புலனும் எழிலும் கொண்டு இங்கே நெருநல் எழுந்தருளி
பொன் அம் கலைகள் மெலிவு எய்த போன புனிதன் ஊர்[36]

என்ற மற்றொரு பாசுரம் குறிப்பதுவும் எண்ணி மகிழத்தக்கது.

**வன்புறை**

தலைவியைத் தலைவன் ஆற்றி வற்புறுத்துதல் ‘வன்புறை’ ஆகும். தலைவியிடம் கூடி மகிழ்ந்த தலைவன், பின் அவளை ஏதேனுமோர் காரணம் பற்றிப் பிரிய நேரும் பொழுது, ‘விரைவாக வந்து வரைந்து செல்வேன்’ என உறுதி கூறுவான். பின் தலைவி அமைதி பெறுவாள். தலைவனின் இச்செயல் சங்க இலக்கியத்தில்,

பேதை நின்னைப் பிரியே னினியென்றகன்றான்[37]

எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

தலைவி, இதைத் தன் தோழியிடம் சொல்லும்பொழுது, ‘உங்கள் கூட்டத்திற்கு ஏதேனும் ஒரு சாட்சி உண்டா?’ என்று கேட்கிறாள். அதற்குக் குறுந்தொகைத் தலைவி, ‘நாங்கள் சேர்ந்திருந்த பொழுது எங்களைப்

பார்த்திருந்த ஒரே ஒரு குருகு உண்டு; அதுவே சான்று' என்று கூறுவதாகப் பாடியிருப்பது குறுந்தொகையின் சிறப்பாகும்.

இதேபோன்றதொரு கற்பனை, பெரியதிருமொழியில் அழகாகப் புனையப்பட்டுள்ளது. பரகாலநாயகியாகிய தலைவி, தனக்கும் தன் தலைவனுக்கும் இருந்த உறவுக்குச் சாட்சியாக ஒரேயொரு வண்டு உண்டு என்று கூறுவதாகப் பெரிய திருமொழியில் வரும்,

கொங்குண் வண்டே கரியாக வந்தான் . . .[38]

என்ற பாடலடியினைச் சுட்டமுடிகிறது. இது ஒன்று தவிர, வேறு எதுவும் இத்துறைக்குப் பொருந்துமாறு பாசுரங்களில் அமையப்பெறவில்லை.

**நிமித்தம் (சகுனம்)**

பண்டைக் காலம் முதல் தற்காலம் வரையிலும், 'நிமித்தம் பார்ப்பது' என்பது பெரும்பாலும் நிகழ்ந்து வருகிறது. பிறர் கூறும் சொற்களையோ அல்லது நேரும் நிகழ்வினையோ கருதி, அதனை நிகழப்போவதற்கு முன்னடையாளமாகக் கொள்வது நிமித்தம் பார்த்தல் என்பதாகும்.

தமக்குரியவர் அல்லது விருந்தினர், ஒருவரது இல்லத்திற்கு வர வாய்ப்பு இருக்குமானால், அதனை அறிந்து காக்கை கரைந்து முன்னறிவிக்கும் என்பது சங்ககால நம்பிக்கையாகும்; இந்த நிமித்தம் உணர்ந்து அதற்கேற்பச் செயல்படுவர்.

ஐங்குறுநூறு இலக்கியத் தலைவியொருத்தி, தலைவனுடன் உடன்போக்கில் சென்று விடுகின்றாள். இதனை அறிந்த நற்றாய் வருந்துகிறாள். அவ்விருவரும் மீண்டு வந்துவிடுவரென்று நம்புகிறாள். ஆதலால், காக்கையொன்றைப் பார்த்து, அவ்விருவரும் வந்து விடுவர் என்பதற்கு அறிகுறியாகக் கரைய முற்பட்டால், அதற்குக் கொழுப்பு கலந்த உணவைப் பொற்கலத்தில் தருவதாக அத்தாய் கூறுகின்றாள். தாயின் அக்கூற்று,

மறுவில் தூவி சிறு கருங்காக்கை[39]

என்ற அடி அடங்கிய அப்பாடலில் பதிவாகியுள்ளது.

*பெரிய திருமொழியில் வரும் பரகாலநாயகி இளம் காக்கையை நோக்கி, 'காளமேகம் போன்ற நிறத்தையுடையவனான புருடோத்தமனை வருமாறு நீ கரைந்து கூப்பிட வேண்டும்' என்ற பாங்கில்,*

கரையாய் காக்கைப் பிள்ளாய் கருமாமுகில்போல் நிறத்தன்
உரையார் தொல்புகழ் உத்தமன் வரக் கூவுவாய்[40]

*என்று பாடுகின்றாள். தலைவனைப் பிரிந்த சங்ககாலத் தலைவியின் மனநிலையை அவ்வாறே உணர்த்திப் பாடினால் இப்பிரபந்தம் சிறக்குமென்று கருதியே, அதே உணர்வினைத் தமது பாசுரங்களினின்றும் பெறுமாறு ஆழ்வார்கள் பாடினர் எனத் துணியமுடிகின்றது.*

**பல்லி - நிமித்தம்**

*தலைவனது வரவை எதிர்பார்த்துக் காத்திருக்கும் தலைவி, தனது இல்லத்தில் உள்ள பல்லியின் ஒலியைக் கேட்டு அதனை நன்நிமித்தமாகக் கருதியதை அகநானூறு,*

. . . . விரைந்துவல் எய்திப ல்மாண்
ஓங்கிய நல் இல் ஒரு சிறை நிலைஇ
பங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்று புகு மாலை நின்றோள் எய்தி[41]

*என்றும்,*

மையல் கொண்ட மதன் அழி இருக்கையள்
பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி
'நல்ல கூறு' என நடுங்கி[42]

*என்றும் குறிக்கின்றது. இக்குறிப்பானது, பிரிவுத் துயரிலிருந்து கொண்டு, எங்காவது பல்லி ஒலித்தால் தெய்வத்தை வணங்கி நல்ல குறி சொல்லுமாறு பல்லியை வேண்டும் தலைவியைக் காட்டுகிறது.*

*பல்லியின் ஒலியினை நிமித்தமாகக் கொண்டு பாடுவதையும் பாசுரங்களில் காணமுடிகின்றது. இதற்கு எடுத்துக்காட்டாக,*

கொட்டாய் பல்லிக் குட்டி
குடம் ஆடி உலகு அளந்த

மட்டு ஆர் பூங் குழல் மாதவனை வரக்

கொட்டாய் பல்லிக் குட்டி![43]

என்ற அடிகளைச் சுட்டமுடிகிறது.

அதாவது, குடக்கூத்தாடியவனும், உலகையளந்தவனுமான 'மாதவன்' என்றவனை இங்கு வருமாறு ஒலி செய்ய வேண்டுமென்று பல்லியிடம் வேண்டுகிறாள் பாசுரத் தலைவி. எனவே, மேற்சுட்டிய இரு சான்றுகளைக் கொண்டு பல்லி ஒலி நிமித்தமாவதன் சங்க இலக்கியத் தாக்கம் ஆழ்வார்ப் பாசுரங்களில் உள்ளமையினை உறுதிப்படுத்த முடிகின்றது.

**தாய் கூறுவதும், கண்டோர் கூற்றும்**

உடன்போகிய தலைவியின் பின் சென்ற தலைவி, முக்கோலுடைய அந்தணரைப் பார்த்து, 'இவ்வழியில் மகளும் இன்னொருத்தி மகனும் உடன் சென்றதைக் கண்டீர்களா?' என்று கேட்க, அதற்கு அவர், 'கண்டோம்' என்று கூறி, அத்தாய்க்குத் தேறுதல் கூறுவதுண்டு. அவ்வகையிலமைந்த கலித்தொகைப் பாடலொன்று,[44] தலைவியானவள் உரிய பருவத்தில் பிறந்த இடத்தை விட்டுத் தலைவனுடன் சேர்ந்து இல்லற நெறி நின்று வாழ்வதே சிறப்பு என்பதையும், ஆதலால், கற்புடைப் பெண்டிர் தலைவனுடன் செல்வது குறித்து வருந்த வேண்டாமென்றும் கருத்துத் தெரிவிக்கிறது.

இவ்வகையில், நறுமணம் தரும் சந்தனமானது அதனைப் பூசிக் கொள்பவருக்கே இன்பம் தருமே தவிர பிறந்த இடமாகிய மலைக்கு அதனால் என்ன பயன் நேரும் என்றும், கடலில் பிறந்த முத்து அவற்றை அணிபவருக்கே இன்பம் தருமே தவிர அது பிறந்த இடமான கடலுக்கு என்ன பயன் உண்டு என்றவாறு எடுத்துக் கூறி, அவளை அமைதிப்படுத்துகின்றனர்.

ஒரு தலைவியானவள் இறுதிவரையிலும் தனது பிறந்த இல்லத்திலேயே இருத்தலென்பது இயலாதவொன்று. உரிய பருவத்தில் தலைவனுடன் சென்று, அவனது இருப்பிடத்தில் இல்லறம் நடத்துவதே உலக நியதி என்பதைக் கலித்தொகை போன்ற சங்க இலக்கியங்கள் உணர்த்துவதில்

உண்மையுள்ளது என்பதை ஏற்றுக் கொண்ட ஆழ்வார்கள், அதனைத் தமது பாசுரங்களிலும் பொதித்துப் பாடினர் எனக் கூற முடிகிறது. இதற்குச் சான்றாக,

கைத் தலத்து உள்ள மாடு அழியக்
கண் ணாலக்கள் செய்து இவளை
வைத்துக் கொண்டு என்ன வாணிபம்
நம்மை வயப்படுத்தும்.
செய்த் தலைத்தலை எழு நாற்றுப்போல் அவன்
செய்வன செய்து கொள்ள
மைத் தடமுகில் வண்ணன் பக்கல்
வளர விடுமின்களே[45]

என்ற பெரியாழ்வார் திருமொழிப் பாசுரத்தினைச் சுட்டமுடிகின்றது.

தனது மகளாகிய இப்பாசுரத் தலைவிக்கு மங்கலச் செயல்களைச் செய்த தாயானவள், தனக்கு அடங்காதுள்ள அத்தலைவியை வைத்துக் கொண்டிருப்பது தனக்குத் துன்பத்தைத் தருவதாகக் கூறி வருந்துகிறாள். அதனைக் கண்ட சுற்றத்தினர், 'வயலில் வளர்ந்த நாற்றினை, அவ்வயலுக்குரியவன் தனது விருப்பப்படி வேறு வயலில் நடவு செய்ய வேண்டியது இயற்கையானது. அதுபோலவே, இவளையும் கண்ணனிடமே கொண்டு போய் விடுங்கள். அவன் செய்ய நினைப்பதைச் செய்து கொள்ளட்டும்' என்று கூறுவதாகக் கண்டோர்க் கூற்றில் வைத்து அமைக்கப்பட்ட இப்பாசுரம், முன்னர்ச் சுட்டிய கலித்தொகையின் தாக்கமே எனக் கூற முடிகிறது.

**வாடைக்கு வருந்துதல்**

பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகள், வாடைக்காற்று வீச, அதனால் துன்பமடைந்தவள், வாடையைப் பார்த்துக் கேட்கின்றாள். தான் ஒருபொழுதும் அவ்வாடைக்குத் தீங்கு நினைத்ததில்லையாதலால், வாடையாகிய அது, அவளின் வளை நெகிழும்படி துன்புறுத்துவது தேவையற்றது என்று கூறி வருந்துகின்றாள்.

*தலைவனைப் பிரிந்து தனித்திருந்து வருந்தும் அத்தலைவியை வாடைக்காற்று மேலும் வருத்துவதாகப் பாடப்பட்ட,*

நினக்குத் தீது அறிந்தன்றோ இலமே;
பணைத் தோள் எல்வளை ஞெகிழ்த்த எம் காதலர்
அருஞ்செயல் பொருட்பிணிப் பிரிந்தனராக
யாரும் இல் ஒரு சிறை இருந்து
பேரஞர் உறுவியை வருத்தா தீமோ![46]

*என்ற பாடல் நற்றிணையில் உள்ளது. அவ்வாறே, தன்னை வருத்தும் வாடையை இரக்கமற்ற வாடையாக வெறுத்துப் பேசும் அகநானூற்றுத் தலைவி,*

பனி கடி கொண்ட பண்பு இல்வாடை[47]

*என்ற அடியினால் அடையாளப்படுத்தப்படுகிறாள்.*

*பாசுரத்தில் பாராங்குச நாயகியானவளின் நெஞ்சு, பெருமானின் பின்னால் சென்ற நிலையில், வாடைக் காற்று வந்து அவளை வருத்துகிறது. அதனைப் பார்த்து, திருமாலின் திருமுடியின்மேல் சூட்டப்பெற்ற துழாயினது குளிர்ச்சியை உடைய வாடைக் காற்றானது, தன்னை வருத்துவதால், அதனை 'விடக்காற்று' (நச்சுக்காற்று) என்று கூறுகிறாள். ஏனெனில், அது இடையில் புகுந்து முன்பே வருந்தியிருக்கும் தலைவியின் உயிரை மேலும் நடுங்கச் செய்கிறது. எனவே, அது, அக்காற்றுக்குத் தகுதியாகுமோ? என்று கேட்பதாகப் பாடப்பட்டுள்ள அப்பாசுரம்,*

தனி நெஞ்சமும் முன்அவர் புள்ளே கவர்ந்தது
    தண் அம் துழாய்க்கு
இனி நெஞ்சம் இங்கு கவர்வது
    . . . . . . . . . . . .
    முடிசூடு துழாய்ப்
பனி நஞ்ச மாருதமே! எம்மது
    ஆலி பனிப்பு இயல்பே . . .[48]

*என்பதாகும்.*

பொதுவாக, எல்லோருடைய தாபத்தையும் தணிப்பது தென்றல் ஆகும். ஆனால், இத்தென்றல் தலைவியை வருத்துகின்றது. இவளை வருத்தி, அழகிய நிறத்தை அழிக்க வேண்டும் என்பதற்காகவே எம்பெருமானானவன் தன் செங்கோண்மையை மாறுபடுத்தி, வாடையைத் தென்றலாக மாற்றி அனுப்பியிருக்கிறான் போலும் என்ற குறிப்பமையப் பாடப்பட்டுள்ள,

பனிப்பு இயல்வாக உடைய தண் வாடை
இக்காலம் இவ் வூர்ப்
பனிப்பு இயல்வு எல்லாம் தவிர்ந்து
. . . . . . . . . .
பனிப் புயல் வண்ணன் செங்கோல்
ஒரு நான்று தடாவியதே?[49]

என்ற பாசுரமும் குறிக்கத்தக்கது.

வாடையில் தலைவி வருந்துவதாகப் படைப்பதில் அவலச்சுவை மிகுந்து, தலைவியின் மீதான பரிவு, பாடலைப் படிப்போர்க்கு மிகும். இந்த உத்தியைச் சங்கப் புலவர்கள் மிகுதியும் கையாண்டுள்ளனர். இதே உத்தியினைத் தம் வயமாக்கிக் கொண்ட ஆழ்வார்களும், அவ்வாறே பாசுரத்தில் அமைத்துப் பாடத் தலைப்பட்டனர் எனக் கூறமுடிகிறது.

**பிரிவாற்றாமை**

தலைவனின் பிரிவால் ஆற்றியிருக்கும் சங்கத் தலைவி பெருமைக்குரியவள் ஆவாள். தலைவனைப் பிரிந்த தலைவி, அவன் தழுவிய தனது தோள்கள் தோய்ந்து வாடுவதாக வருந்துவதுண்டு. அத்துன்பம் கலித்தொகையில்,

வேய் நலம் இழந்த தோள் வியங்குழை பொறை யாற்றான்
வாள் நுதல் பசப்பூர இவை நீ துறந்ததை?[50]

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கலித்தொகையில் வரும் இக்குறிப்பு, ஆழ்வார்ப் பாசுரமொன்றிலும் உள்ளது.

*தலைவனின் பிரிவால் வாடும் தலைவியின் மூங்கில் போன்ற அழகிய தோள்கள் மெலிந்து, அவள் மிகவும் வருந்துகிறாளென்பதைத் திருவாய்மொழி,*

வேய் மருந் தோளிலை மெலியுமாலோ!

மெலியும் என் தனிமையும்[51]

*என்ற அடிகளின் மூலம் தெரிவிக்கின்றது. கலித்தொகை வருணித்த தலைவியின் மூங்கிலையொத்த தோள், திருவாய்மொழியிலும் அவ்வாறே வருணிக்கப்பட்டுள்ளமை ஒப்புமையுடையதாக உள்ளது.*

**எள்ளிக் கூவும் குயில்**

*தலைவனைப் பிரிந்த தலைவியின் தனிமை வருத்தத்தினைத் தனக்கு ஏதுவாக்கிக் கொண்ட குயிலொன்று, தலைவியை எள்ளி நகையாடுவதாகக் கற்பனை செய்து பாடுவது ஒரு வகையான சங்க இலக்கிய அகத்திணை மரபாகும். இம்மரபுக்குச் சான்று,*

நிலம் பூத்த மரமிசை நிமிர்பு ஆனும் குயில் எள்ள[52]

*என்ற கலித்தொகையினடியாகும். இம்மரபினை அவ்வாறே போற்ற எண்ணிய நம்மாழ்வார் அதனை,*

வேய் மரு தோள் - இணை மெலியும் ஆலோ!

மெலிவும் என் தனிமையும் யாதும் நோக்காக்

காமரு குயில்களும் கூவும் ஆலோ![53]

*என்ற அடிகளின்வழி வெளிப்படுத்தியுள்ளார்.*

*குயில்கள் எழுப்பும் இனிய ஓசை தலைவியை எள்ளி நகையாடுவதைப் போன்றுள்ளதாகவும், இதனைக் கேட்டு மயில்கள் நடனமாடுவதைப் பார்த்த தலைவிக்குத் துன்பம் இன்னும் மேலிடுவதாகவும் புனைந்திருப்பது நம்மாழ்வாரின், எதனையும் உள்வாங்கிச் சிறப்பித்துப் பாசுரத்தில் பாடும் வெளிப்பாட்டுத் திறத்தினை வெளிப்படுத்துவதாக உள்ளது.*

**கூந்தலைத் தொடுவது தலைவனுக்கே உரியது**

*தலைவியின் கூந்தலைத் தொடும் தகுதி தலைவனுக்கேயுரியது என்பதும்கூட, அகத்திணைக் குறிப்பாகும். இக்குறிப்பு,*

ஒலிமென் கூந்தல் உரியவால் நினக்கே[54]

*என்ற குறுந்தொகைப் பாடலடியில் உள்ளது. இதனைக் கூறும் புறநானூற்றுப் பாடலடிகளும் உண்டு.*[55]

*தலைவனுக்கே தலைவியின் கூந்தல் உரிமையுடையது என்ற அவ்வகத்திணைக் குறிப்பினை வலியுறுத்தும் கலித்தொகை,*

ஒருஉநீ; எம் கூந்தல் கொள்ளல் - யாம் நின்னை[56]

*என்றும்,*

யார் இவள்? எம் கூந்தல் கொள்வான்? இதுவும்
ஓர் ஊராண்மைக்கு ஒத்த படிநுடைத்து[57]

*என்றும் சுட்டியுள்ளது. இக்கருத்தினையொற்றிய நிலையில் ஆழ்வாரின் பாசுரமானது,*

அணிமிகு தாமரைக் கையை அந்தோ! அடிச்சியோம்
தலைமிசை நீ அணியாய் . . . [58]

*என்கிறது.*

*தாமரை போன்ற தலைவனின் கையை, அவனது அடிச்சியாகிய தலைவியின் தலைமீது அணிவித்து, அவளை அவனது மனைவியாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று வேண்டுவதாக இவ்ஆழ்வார்ப் பாசுரம் புனைந்துள்ளமை சங்கப்பாடல்களில் ஆழ்வார்களுக்கு இருந்த ஆர்வத்தினைக் காட்டுவதாகவுள்ளது.*

**ஆற்றாமை - ஆற்றுவிக்கும் வழி தெரியாத் தலைவி**

*கலித்தொகைத் தலைவியானவள் தன் நெஞ்சத்து ஆற்றாமையை ஆற்றுவிக்க வழிதெரியாது வருந்திக் கூறுவதான பகுதி பின்வருமாறு:*

கருங்கோட்டு நறும்புன்னை, மலர்சினை மிசை தொறும்
. . . . . . . . . . . . . .
காணாமை இருள்பரப்பி கையற்ற கங்குவான்

மாணா நோய் செய்தான் கண்சென்றாய்; மற்று அவனை
காணவும் பெற்றாயோ? காணாயோ? மடநெஞ்சே[59]

*பெண்மையை ஆற்றுவிக்கும் வழிதெரியாது தவிக்கும் தலைவியின் நிலையினை ஆழ்வார்ப் பாசுரமொன்று,*

என் பெண்மை ஆற்றோம் வடித்தடம்கண்
இணை நீரும் நில்லா . . .[60]

*என்று குறிக்கின்றது.*

*தலைவனின் பின்னால் சென்ற தன் மனமும் திரும்ப வந்து ஆற்றாது மறந்து விட்டதே என்று தலைவி கூறும் நிலையில்,*

வாராய் மடநெஞ்சே மணிவண்ணா
சீரா திருத்துழாய் மாலை நமக்கருளி[61]

*என்றவாறு பாடும், திருமங்கையாழ்வாரின் சிறிய திருமடலின் பாடலடிகள் சங்கப் பாடலடிகளுடன் பொருந்தி வந்துள்ளமையினை அறியமுடிகிறது.*

**உயிர் தீயிலிட்ட மெழுகென உருகுதல்**

*தலைவனின் காதல் நோய் அவனது மனத்திட்பத்தைச் சிதைத்து விடுகிறது. அத்துன்பத்திலிருந்து விடுபட முயன்றால் அது உப்பின்மீது பட்ட மழைத்துளியால் உப்புக் கரைவது போன்று கரைந்து விடுகிறது என்றும், உயிரானது நெருப்பிலிட்ட மெழுகாக உருகி மெல்லத் தேய்வதாக உள்ளது என்றும்,*

பரிசு அழி பைதல் நோய் மூழ்கி எரிபரந்த
நெய்யுள் மெழுகின் நிலையாது பையத்
தேயும் . . .[62]

*என்ற பகுதியின் வழிக் கலித்தொகையானது சுட்டுகின்றது.*

*காதல்நோயால் உள்ளம் உருகி வருந்துமாறு பாடப்படும் இக்கருத்தினை ஆழ்வாரின் பாசுரமொன்று,*

நின் பசு நிரை மேய்க்கப் போக்கு வேம் எமது
உயிர் அழல் மெழுகில் உக்கே . . .[63]

என்று பிரதிபலிக்கிறது. தலைவனாகிய கண்ணன் பசுக்களை மேய்க்கச் சென்று விடுகிறான். அவனைப் பிரிந்த ஏக்கத்தினால் தலைவியின் கண்கள் கண்ணீர் மல்க, மனம் துயரில் வாடுகின்றது. அது, தீயில் பட்ட மெழுகு போன்று உருகி வெந்து மடிவதாகப் பாடப்பட்டுள்ளமையானது, கலித்தொகையின் தாக்கம் இப்பாசுரத்திலுள்ளது என்பதை உணர்த்துகிறது.

**அணிகலன் கழன்றமை (வளையல், மேகலை கழன்றமை)**

தலைவனைப் பிரிந்ததால் தலைவிக்குப் பசலை பாய்ந்து, அவள் உடல் மெலிகிறாள். அதன் காரணமாகக் கைவளைகளும், இடுப்பு மேகலையும் கழன்று விடும் என்பதாகப் பாடுவது சங்ககால அகமரபுகளுள் ஒன்றாகும்.

கை வளை யாழி தொய்யகம் புனைதுகின்
மேகலை காஞ்சி வாகு வலய மெல்லாம் . . .[64]

என்றும்,

தாளித நொய்ந் நூர் சரணத்தார் மேகலை[65]

என்றும் வரும் சங்கப் பாடலடிகள் வளையல்களும் மேகலையும் குறித்துக் கூறுவனவாகும்.

தார்மணி பூண்ட தமனிய மேகலை[66]

என்ற கலித்தொகையடியும் இத்தகையதே.

தலைவியின் உடல் மெலிவை வெளிப்படுத்தும் அங்கங்களுள் கையும், இடுப்பும் குறிக்கத்தக்கன. இதனையுணர்த்த சங்கப் புலவர்கள், தலைவியின் மெலிவைப் புனைய வளையல்களையும் மேகலையினையும் எடுத்தாண்டனர் எனக் கூற முடிகிறது.

பிரிவுத் துயரினை வெளிப்படுத்த உரியனவாயிருந்த வளையல்களையும், மேகலையையும் அப்புலவர்கள் போன்றே ஆழ்வார்களும்,

வேம் எமதுயிர் அழல் மெழுகினுக்கு
வெள்வளை மேகலை கழன்றுவிழ[67]

என்றவாறு முன்னிலைப்படுத்தி எழுதிச் சிறந்தனர் எனக் கூறமுடிகிறது.

**பசலை நோய்**

*தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஏற்படும் ‘பசலை’ என்பது சங்ககாலப் புலவர்களால் துன்பந்தரும் நோயாகவே சித்திரிக்கப்பட்டது எனலாம். இதற்குச் சான்றாக,*

வில்லினும் கடிது அவர் சொல்லினுள் பிறந்த நோய்[68]

*என்றும்,*

பகைமையின் கடிது அவள் தகைமையின் நலியும் நோய்[69]

*என்றும்,*

தீயினும் கடிது அவர் காயலின் கனலும் நோய்[70]

*என்றும் வரும் அடிகளைச் சுட்ட முடிகிறது.*

*வைணவத்தில் மெய்யுருகப் பாடப்பாடும் பாசுரங்கள் பலனளிப்பன என்ற நம்பிக்கை உண்டு. இதனை மேலும் வளர்க்க வேண்டுமென்பதில் ஆழ்வார்கள் மிக்க நாட்டம் கொண்டிருந்தனர் எனலாம்.*

*பதியாகிய இறைவன் தலைவனாகவும், பசுக்களாகிய உயிர்கள் தலைவியாகவும் வைத்துப் புனையப்படும் நிலையில், தலைவியின் துயரம் மிகுமாறு பாடினால்தான் பக்தியானது சிறக்கும் என்று அவர்கள் நம்பினர். ஆதலால், பசலை என்பது சங்கப் புலவர்களால் நோயாகச் சித்திரிக்கப்பட்ட அதே உத்தியை ஆழ்வார்களும் மேற்கொண்டனர். எனவேதான்,*

தூமலர்க் கண் இணை முத்தம் போர்[71]

*என்று கண்ணீர் மல்கும் தலைவி,*

துணை முலை பயந்து என் தோள்கள் வாட[72]

*என்றவாறு, மார்பகங்களில் படர்ந்திருந்து வருத்தும் பசலை நோயால் துன்புறுவதாகப் பாடப்பட்டுள்ளாள்.*

**வஞ்சகக் கள்வன்**

*தலைவன் ஒருநாள் தனக்கு நீர்வேட்கையிருப்பதாகக் கூறித் தண்ணீர் கேட்கிறான். தலைவியின் தாய் மகளிடம், வீட்டிற்கு வெளியே காத்திருக்கும் அவனுக்காக நீர்கொடுத்து அனுப்புகிறாள். ஆனால், தண்ணீர் பெறும் பாங்கில் தலைவியின் கையைப் பற்றி விடுகிறான் அவன். அதிர்ந்த தலைவி*

அலற, அதுகேட்டுத் தாய் ஓடிவருகிறாள். அங்கு நடந்ததை மறைக்கும் தலைவி, அவன் நீர் பருகியபோது விக்கியதாகக் கூறுகிறாள். அந்நிலையில், தலைவன் தன் கடைக்கண்ணால் தலைவியை நோக்கினான் என்பதாகக் குறிக்கும்,

கூடர்தொடீஇ! கேளாய் - தெருவில் ஆடும்
மணற் . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . .
கடைக் கண்ணால் கொல்வான்போல் நோக்கி நகைக் கூட்டம்
செய்தான் அக்கள்வன் மகன்[73]

என்ற கலித்தொகைப் பகுதி, தலைவனின் நடிப்புத் தன்மையை வெளிப்படுத்தும் நயமுடையது. கலித்தொகையில் சுவையினை ஏற்படுத்திய, குறும்புகாட்டிய அக்களவுத் தலைவன், ஆழ்வார்ப் பாசுரத்தில் மாயக் கண்ணனாகச் சித்திரிக்கப்படுகிறான் எனலாம். திருமாலின் திருத்தேவியான பெரியபிராட்டி அறியாதவாறு மாயக்கண்ணன் செய்த மாயம்,

செஞ்சொல் கவிகாள்! உயிர்காத்து ஆட்செய்மின்
. . . . . . . . . . . . . . . . . . .
வஞ்சகக் கள்வன் மாமாயன் மாயக்
கவியாய் வந்து என்
நெஞ்சும் உயிரும் - அவை உண்டு
தானே ஆகி நிறைந்தானே[74]

என்று பாடிச் சிறப்பிக்கப்படுகிறது.

சோலைமலை பிரான் மிகவும் வஞ்சனையான திருட்டுத்தனமுள்ளவன், மாயம் செய்வதில் வல்லவன், மாயம் செய்து தன்னுடைய உள்ளத்துக்குள்ளேயும் தண்ணீர் போல் கலந்து ஒன்றாகிவிட்டவன். இதனைப் பெரிய பிராட்டியார் அறியாதபடி தன்னுடைய நெஞ்சையும் உயிரையும் விழுங்கி அனுபவித்துத் ‘தானேயாகி நிறைந்து நின்றான்’ என்று பாடப்படும் இப்பாசுரக் கருத்துச் சுவையானது.

**இயற்கைப் புணர்ச்சி**

*இயற்கைப் புணர்ச்சியாவது, ஒருவரையொருவர் கண்டதும் ஊழ்வினையாலோ அல்லது தெய்வச்செயலாலோ விருப்பம் ஏற்படுவது என்கிறது தொல்காப்பியம். அத்தகைய செய்தியைக் கூறும்,*

யாயும் ஞாயும் யாராகியரோ . . .

. . . . . . . . . . .

செம்புலப் பெயநீர் போல அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே[75]

*என்ற அடிகளடங்கிய குறுந்தொகைப் பாடல் பலரால் அறிந்து பாராட்டப்பட்ட ஒன்றாகும்.*

*அதே சுவை வருமாறு பெரிய திருமொழியில் பாடப்பட்டுள்ள,*

தஞ்சம் இவர்க்கு என் வளையும் நில்லா
நெஞ்சமும் தம்மதே, சிந்தித்தேற்கு
வஞ்சி மருங்குல் நெருங்க நோக்கி
வாய்திறந்து ஒன்று பணித்தது உண்டு
நஞ்சம் உடைத்து இவர் நோக்கும் நோக்கம்
நான் இவர் தன்மை அறிய மாட்டேன்[76]

*என்ற பாசுரம், குறுந்தொகையின் தாக்கத்தினைப் பெற்றுள்ள பாசுரம் எனக் கூறமுடிகிறது.*

**இயற்பழித்தலும், இயற்பட மொழிதலும்**

*'இயற்பழித்தலும் இயற்பட மொழிதலும்' என்ற துறையானது இலக்கியத்தில் தலைவனின் பிரிவினை ஆற்றாத தலைவி துயருற்றுப் புலம்புவதைக் கண்ட தோழி, தலைவன் அன்பில்லாதவன் எனப் பழித்துரைக்க, அதுகண்ட தலைவி, அவனது பெருமையைக் கூறுவதாக அமைவதாகும். இத்துறையானது நற்றிணையில் வரும் பாடலொன்றில் மாமூலனாரால்,*

கொல்கவின் தொலையத் தோள் நலஞ் சாஅய்
நல்கார் நீத்தன ராயினு நல்குவர்[77]

*எனக் குறிக்கப்பட்டுள்ளது.*

தோழி தலைவனை இயற்பழித்தவழி, தலைவனைக் குற்றமில்லாதவனாகக் காட்ட இயற்பட மொழியும் பண்பானது தலைவிக்கு உண்டென்பதைத் திருமங்கையாழ்வார் தனது பெரிய திருமொழியில் சுட்டுகின்றார். பெருமானின் திருக்கல்யாண குணங்களின் மேன்மையையும், எளிமையினையும் பேசுகின்ற பாசுரமாகவே பதினோராம் பத்து ஐந்தாம் திருமொழி அமைந்துள்ளது. அவ்வமைவுக்குச் சான்றாகச் சாழல் ஆடிக்கொண்டே உரையாடுவதாக வரும்,

மான் அமரும் மென்நோக்கி வைதேவிஇன் துணையா
கான் அமரும் கல்அதர் போய்க் காடு உறைந்தான் காண் ஏடீ!
கான் அமரும் கல் அதர் போய்க் காடு உறைந்த பொன்னடிகள்
வானவர் - தம் சென்னி மலர் கண்டாய் சாழலே![78]

என்ற பாசுரத்தில், மேற்சுட்டிய துறையின் சங்கப் பாடற் புனைவின் தாக்கம் உள்ளமையினைச் சுட்ட முடிகின்றது.

**அம்பல், அலர்**

களவு நிகழும் போது அது ஏதேனும் ஒரு விதத்தில் ஐயப்பாட்டிற்குப் பின், புறத்தார்க்குப் புலப்படும். தலைவியின்பால் ஏற்பட்ட மாற்றம் கண்டு ஐயத்துடன் அயலார் வினவுவர். இதனைத் தொல்காப்பியம்,

களவல ராயினுங் காம மெய்ப்படுப்பினும்
அளவு மிகத் தோன்றினுந் தலைப்பெய்து காணினும்[79]

எனக் குறிக்கிறது.

இவ்வாறு ஐயப்பட்ட சுற்றத்தார் இதனைப் பற்றி ஒருவரோடு ஒருவர் பேசுவது அம்பல், அலர் என்பதாக இலக்கியங்களில் குறிப்பிடப்படுகிறது. இதனை அகநானூறு,

ஊரும் சேரியும் உடன் இயைந்து அலர்எழத்
தேரொடு மறுகியும் பணிமொழி பயிற்றியும்[80]

என்று கூறி, அயலார் பழிதூற்றிப் பேசுவதை வெளிப்படுத்தியுள்ளது. அயலார் குறித்து வருந்தி அஞ்சும் தாயினைப் பெரியாழ்வாரின் பாசுரத்தின்வழிக் காணமுடிகிறது. அப்பாசுரமானது,

நாடும் ஊரும் அறியவே போய்
நல்ல துழாய் அலங்கல்
சூடி நாராயணன் போம் இடம் எல்லாம்
தோதித்து உழி தருகின்றாள்
கேடு வேண்டுகின்றார் பலர் உளர்[81]

*என்பதாகும். கண்ணன் செல்லுமிடமெல்லாம் சென்று தேடித் திரியும் தலைவி பற்றிப் பலர் பழிதூற்றுவரே என்று தாயார் அஞ்சுவதாகப் பாடப்பட்டுள்ளமை சிறப்பானதாகும்.*

**ஊடல்**

*சங்க இலக்கியங்களில் ஊடல் குறித்த செய்திகள் பல உண்டு. ஊடல் குறித்துத் தொல்காப்பியர்,*

உணர்பு வரை சிறப்பினும் செய்குறி பிழைப்பினும்
புலத்தலும் ஊடல் கிழவோற்குரிய[82]

*என்றும்,*

காமக் கடப்பினுட் பணிந்த கிளவி
காணுங்காலைக் கிழவோற் குரித்தே
வழிபடுங்கிழமை அவட்கியலான[83]

*என்றும் கூறுகிறார்.*

*ஊடல் ஆகிய இவ்அகத்துறையை மருதக்கலியொன்று சித்திரிக்கிறது.[84] பரத்தையிற் பிரிந்து மீண்டு வந்த தலைவன் தலைவியிடம் வருகின்றான். சினம் கொண்ட தலைவி, அவன் செய்தது இழிவுதரக் கூடியது என்றும், அவன் பரத்தைவயிற் சென்றதைவிட, ஊரார் அது குறித்துத் தூற்றும் பழியே மிகவும் கொடுமையானதன்றோ என்றும் பேசி அவனிடம் ஊடுகின்றாள்.*

*ஆழ்வார்ப் பாசுரமொன்று இத்துறை சேர்ந்த தொல்காப்பிய நூற்பாவிற்கேற்பவும், கலித்தொகை கூறும் ஊடல் குறித்த பாடல் கருத்திற்கேற்பவும் வந்துள்ளதைக் காணமுடிகிறது.*

காதில் கடிப்பு இட்டு கலிங்கம் உடுத்து
தாது நல்ல தண் அம் துழாய் கொடு அணிந்து

போது மறுத்து புறமே வந்து நின்றிர்
எதுக்கு? இது என்? இது என்னோ?[85]

என்ற பாடலடிகளில் கண்ணன் ஓர் ஆய்ப்பெண்ணோடு சேர்ந்து, பின் பிரியும் பொழுது மீண்டும் 'இன்ன பொழுதில் வருகிறேன்' என்று ஒரு குறிப்பிட்ட நேரத்தைக் கூறுகிறான். அந்நேரத்திற்கு அங்கு வந்து சேரமுடியாதபடி வேறு ஆய்ச்சியொருத்தியோடு கழித்து விடுகிறான். காலம் கடந்து மீண்டு வரும் அக்கண்ணனிடம் இவ்வாய்ச்சி ஊடல் கொண்டு பேசுவதாகப் புனையப்பட்டுள்ளது. மேலும்,

ஆடி அசைந்து ஆய் மடலாரொடு நீ போய்
கூடிக் கூரவை பிணை கோமளப் பிள்ளாய்
தேடித் திருமாமகள் மண்மகள் நிற்ப
ஏடி! இது என்? இது என்? இது என்னோ?[86]

என்ற பெரியதிருமொழிப் பாசுரமும் அத்தாக்கத்திற்கு உட்பட்டதே எனலாம்.

**களவு வாழ்வு**

ஆணும் பெண்ணும் அன்பினால் கூடும் உள்ளப்புணர்வு என்பதே களவொழுக்கத்திற்கு அடிப்படையாகுமென்கிறது தொல்காப்பியம். களவு குறித்த பாடல்கள் சங்க இலக்கியங்களில் நிரம்ப உண்டு என்பது வெளிப்படையானது.

களவு பற்றிப் பாடிய ஆழ்வார்கள், சிற்றின்ப நெறியினைப் பேரின்ப நெறியாக மாற்ற முயன்றுள்ளனர் எனலாம். தாய் கூற்றாக வரும் பெரியாழ்வாரின்,

ஐய புழுதி உடம்பு அளைந்து இவள்
. . . . . . . . . . . . .
நூலின் சிற்றாடை செப்பன்
உடுக்கவும் வல்லல் அல்லள்
. . . . . . . . . . . . .
பை அரவணைப் பள்ளியானோடு
கைவைத்து இவள் வருமே[87]

என்ற பாசுரம் எண்ணத்தக்கது. 'மிகச் சிறிய பெண்ணாக, புழுதியளைந்து பூசிக்கொண்ட, சிற்றாடையைச் சீராக உடுப்பதற்குத் தெரியாதவளாய் தன் கையில் மண்சோறாக்கும் சிறுபானை வைத்து விளையாடுபவளான இத்தலைவி, ஆதிசேடன் படுக்கையில் படுப்பவனான கண்ணனுடன் களவொழுக்கம் நிகழ்த்தி விடுகின்றாளே! இது என்னே' என்று தாயானவள் இரங்கிக் கூறுவதாக வரும் இப்பாசுரம், சங்கப் பாக்களில் வரும் தலைவன் தலைவியின் களவொழுக்கத்தை நினைவுபடுத்தும் நோக்கிலானது எனக் கூற முடிகிறது.

**இடந்தலைப்பாடு**

இயற்கைப் புணர்ச்சியில் ஊழினால் சந்தித்த தலைவனும் தலைவியும், அடுத்த முறையும் சந்திக்க முற்பட்டு, அதற்கான இடத்தைத் தேர்வு செய்து சந்தித்தல் 'இடந்தலைப்பாடு' என்பதாகும். இத்துறையில் பகற்குறி, இரவுக்குறி என்ற இரண்டும் பேசப்படும். அத்தகைய சங்கப் பாடல்கள் பல உள்ளன. அவற்றுள்,

இன்மீன் அருந்து நாரையொடு பனைமிசை
அன்றில் சேக்கும் முன்றில் பொன் என
நன் மலர் நறுவீ தாஅம்
புன்னை நறும்பொழில் செய்த நம் குறியே[88]

என்று வரும் அகநானூறு பாடற்பகுதி குறிக்கத்தக்கது. இது பகற்குறிவந்த தலைமகனை மறுத்து, இரவுக்குறியில் வருமாறு தோழி கூறியதை எடுத்துரைக்கிறது.

பகற்குறியும், இரவுக்குறியும் ஆழ்வார்ப் பாசுரங்களிலும் விளக்கப்பட்டுள்ளன.

. . . உன் தன் பொய்யைக் கேட்டு
கூர் மழைபோல் பனிக்கூதல் எய்திக்
கூசி நடுங்கி யமுனை யாற்றில்
வார்மறை குன்றில் புலர நின்றேன்
வாசுதேவா! உன் வரவு பார்த்தே[89]

என்ற பாசுரத்தில் குலசேகரர், அழகாக 'இரவுக்குறி' நேர்ந்த செய்கையைக் கூறுகின்றார்.

அதாவது, கண்ணனைப் பற்றித் தெரிந்திருந்தும் தலைவியானவள் அவனின் வார்த்தையை மெய்யென்று நம்பி மழைபோல் பெய்கின்ற பனியில், ஏற்பட்ட குளிரில் நடுங்கியபடியே, யமுனையாற்றங்கரையில் கண்ணன் வரச்சொன்னதன் காரணமாக இரவில் வந்து நிற்கிறாள். யாரும் தன்னைப் பார்த்து விடுவார்களோ? என்று அஞ்சி, கரையோரத்திலிருந்த மணற்குன்றில் அமர்ந்து, தலைவன் வரவை எதிர்பார்த்து விடியும் வரையில் காத்து நின்ற செய்தியைக் கூறி ஊடி நிற்கிறாள் என்பதை இப்பாடல் தெரிவிக்கிறது.

'இல்வரை இகவா' என்ற நிலை மாறியும், இலக்கியத்தில் தலைவன் காத்திருப்பான். ஆனால், பாசுரத்தலைவி இறைவனான கண்ணனைத் தலைவனாகக் கொண்டதால் தலைவி காத்திருப்பதாகப் பட்டுள்ளது எனக் கூறமுடிகிறது.

**தொய்யில்**

தொய்யில் எழுதுதல் என்பது, தலைவனானவன் தலைவியின் மார்பகங்களில் செம்பஞ்சுக் குழம்பினால் வரைதலாகும். இவ்வாறு தொய்யில் எழுதுதல் தலைவனுக்கே உரியதாகும். இம்மரபிற்குக் கலித்தொகையின்,

> . . . . . . . .
> பேணித் துடைத்தாள் . . . .
> முதிரா இளமுகை ஒப்ப எதிரிய
> தொய்யில் பொறித்த வன முலையாய்! மற்று நின்[90]

என்ற பாடலடிகளைச் சான்றாக்கலாம். இதில், 'தொய்யில்' எழுதிய அழகிய மார்பையுடையவளே! என்று தலைவன் தலைவியை விளிப்பதாக வந்துள்ளதைக் காணமுடிகிறது.

*திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழியும், தொய்யில் எழுதப்பட்ட மார்பகங்களையுடைய பெண்களைக் குறிப்பிடும் வகையில்,*

. . . . . . .

கொங்கு அலர்ந்த மலர்க்குழலார் கொங்கை தோடர்ந்த
குங்குமத்தின் குழம்பு அளைந்த கோலன் தன்னால்
செங்கலங்கல் வெண் மணல் மேல் தவழும் நாங்கூர்[91]

*என்று பாடியுள்ளது.*

*வாசனை வீசும் மலர்களையணிந்த கூந்தலையுடைய பெண்கள் நீரில் படிந்து நீராடுகையில், அவர்களுடைய தனங்களின் மீது படிந்த குங்குமச் சாந்து அளைந்ததால் செந்நிறமாக மாறிய வெள்ளம், வெண்மணற் குன்றுகளின் மேல் பரவும். 'அத்தகைய வளமான நாங்கூர்' என்று வைணவத் திருத்தலமான நாங்கூர் பற்றிப் பாடுகையில், இத் 'தொய்யில்' பற்றிய குறிப்பு வந்து சிறந்துள்ளது.*

*நாச்சியார் திருமொழியும் 'தொய்யில்' எழுதும் பண்டைய மரபினை அவ்வாறே போற்றியுள்ளது என்பதற்குச் சான்று,*

கொங்கை மேல் குங்குமத்தின் குழம்பு அழியப் புகுந்து ஒருநாள்
தங்குமேல் என் ஆவி தங்கும் என்று உரையீரே[92]

*என்பதாகும். இதுவும் சங்க இலக்கியத் தாக்கமே எனக் கூற முடிகிறது.*

**அறத்தோடு நிலை**

*தலைவி தான் விரும்பிய தலைவனைத் தவிர வேறு எவரையும் மணத்தல் இயலாதென்பதைத் தன் பெற்றோர்க்குத் தோழி மூலமாக வெளிப்படுத்துவதே 'அறத்தொடு நிலை' எனப்படுகிறது. தலைவி தோழிக்கும், தோழி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் அவளின் குடும்ப அங்கத்தினர்களுக்கும் உணர்த்துவதாக அமையும். அவ்வாறு தோழி செவிலிக்கு அறத்தோடு நிற்றலை அகநானூறு,*

திரை உழந்து அசை இய நிரைவளை ஆயமொடு
உப்பின் குப்பைஏறி ஏற்பட,

வருதிமில் எண்ணும் துறைவனொடு, ஊரே

. . . . .[93]

என்றவாறு கூறுகிறது.

வேறு ஒருவருக்கும் தன்னை மணம் பேசுவதை ஒவ்வாத தலைவியின் கூற்று,

. . . . . .

மற்று ஒருவர்க்கு என்னைப் பேசலொட்டேன்

மாலிருஞ்சோலை என் மாயற்கு அல்லால்[94]

என்றவாறு பாசுரப்படுத்தப்பட்டுள்ளது. இதில் 'கண்ணனைத் தவிர வேறு ஒருவருக்கும் என்னை மணம் பேசுவதைச் சம்மதியேன்' என்றும், 'திருமாலிருஞ்சோலை மணாளர்க்கு அல்லாமல் வேறு யாருக்கும் வாழ்க்கைப் படேன்' என்றும் கூறுவதாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

ஆண்டாள் நாச்சியார், அவ்வாறு வேறு ஒருவர்க்குத் தான் மணம் பேசப்படுவதை மறுப்பதாக வரும்,

வானிடை வாழும் அவ்வானவர்க்கு

மறையவர் வேள்வியில் வகுத்த அவி

கானிடைத் திரிவது ஓர் நரிபுகுந்து,

கடப்பதும் மோப்பதும் செய்வது ஒப்ப

ஊனிடை ஆழி சங்கு உத்தமர்க்கு என்று

உன்னித்து எழுந்த தடமுலைகள்

மானிடவர்க்கு என்று பேச்சுப் படில்

வாழ கில்லேன் கண்டாய்! . . .[95]

என்ற பாசுரத்தைப் பாடியுள்ளார். இதுவும் சங்க இலக்கியம் போல் தலைவியின் மனநிலையை உரியவாறு வெளிப்படுத்துவதாக உள்ளதெனக் கூறமுடிகிறது.

**உடன்போக்கு**

*களவில் இணையும் தலைவனும் தலைவியும் கற்பு வாழ்க்கையுட் புகும் வண்ணம், அதற்கு உடன்படும் தலைவி தனது இல்லம் நீங்கித் தலைவனுடன் செல்வது 'உடன்போக்கு' ஆகும்.*

*அகத்திணைக் கூறுகளுள் ஒன்றான இது, சங்க இலக்கியங்களில் வைத்துப் பாடப்பட்டுள்ளது. உடன்போக்குச் சென்ற தலைமகளை நினைத்துச் செவிலித்தாய் மனையில் வருந்திப் புலம்புவதாகவுள்ள நிலையினை அகநானூறு,*

கிளியும் பந்தும் கழங்கும் வெய்யோள்
அளியும் அன்பும் சாயலும் இயல்பும்
. . . . .[96]

*என்று பாடுகிறது.*

*பெரியாழ்வார் தனது பாசுரமொன்றில் தாயானவள் தலைவி உடன்போக்குச் சென்ற நிலையை எடுத்துக்காட்டும் விதமாக,*

நல்லது ஓர் தாமரைப் பொய்கை
　　நாண் மலர் மேல் பனிசோர
அல்லியும் தாதும் உதிர்ந்திட்டு
　　அழகழிந்தால் ஒத்த தாலோ!
இல்லம் வெறி யோடிற்றாலோ!
　　என் மகளை எங்கும் காணேன்
மல்லரை அட்டவன் பின்போய் . . .[97]

*என்று பாடுகின்றார். இதில் உடன்போக்கில் சென்ற தலைமகளுக்கு நடக்க வேண்டிய சீர்மைகள் குறித்தும், தாய் சிந்தித்திருப்பதையும், இலக்கியத்தில் தலைவனின் பெயர் சுட்டாத பாசுரத்தாயார் 'தலைவன்' இத்தன்மையன் என்று கூறுவதாகவும் அமைக்கப்பட்டுள்ளமையினை எண்ண முடிகின்றது. அவ்வமைவுள்ள அதே இலக்கியத்தின் மற்றொரு பாசுரம்,*

ஒருமகள் தன்னை யுடையேன்
　　உலகம் நிறைந்த புகழால்,

திருமகள் போல வளர்ந்தேன்
செங்கண்மால் தான் கொண்டுபோனாள்
பெருமகளாய்க் குடி வாழ்ந்து
பெரும்பிள்ளை பெற்ற அசோதை
மருமகளைக் கண்டு உகந்து
மாணாட்டுப் புறம் செய்யுங் கொ(ல்)லோ[98]

*என்பதாகும். உடன்போக்கின் பொழுது நிலவும் பாசுரத் தலைவியின் தாயின் மனநிலையானது சங்கத்தாயின் மனநிலையை மிகவும் ஒத்ததாக உள்ளதை எண்ணி மகிழமுடிகிறது.*

**நலம் பாராட்டல்**

*தலைவியின் உருவமேன்மையினையும், அவளது பண்பு நலன்களையும், தலைவன் பாராட்டுதல் அகத்திணை மரபுகளுள் ஒன்றாகும். இதனைத் தொல்காப்பியம் இலக்கணப்படுத்துகிறது. இதனைச் சங்கப் பாடல்கள் பல இலக்கியப்படுத்தியுள்ளன. அவ்வாறு நலம் பாராட்டிய பாடல்களுள்,*

கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி!
காமம் செப்பாது கண்டது மொழிமோ?
பயிலியது கெழீஇய நட்பின் மயில் இயல்
செறி எயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ அறியும் பூவே?[99]

*என்ற குறுந்தொகைப் பாடல் குறிக்கத்தக்கது. இதில், தலைவன் வண்டை நோக்கி, 'இந்த அரிவையின் கூந்தலைப் போன்ற மணமிக்க பூக்களை நீ பார்த்ததுண்டா? என்று வினவும் பாங்கில் நலம் பாராட்டுகின்றான்.*

*நக்கீரர் பாடிய அகநானூற்றுப் பாடலொன்றில், பாரியின் பறம்பு மலைச் சுனையிலுள்ள புதுமலர் போலத் தலைவியின் கூந்தல் மணம் கமழ்கிறது என்ற கருத்துப் பதிவு செய்யப்பட்டு,[100] 'நலம் பாராட்டல்' என்னும் இலக்கணத்திற்கு இலக்கியம் படைக்கப்பட்டுள்ளது.*

*'நலம் பாராட்டுதல்' என்னும் இம்மரபினைச் சங்கப் பாடல்களின் மூலம் நன்குணர்ந்து சுவைத்த நம்மாழ்வார்,*

வண்டுகளே! வம்மின், நீர்ப்பூ, நிலப்பூ, மரத்தில் ஒண்பூ
உண்டுகளித்து உழல்வீர்க்கு ஒன்று உரைக்கியம் ஏனம் ஒன்றாய்.
மண்துகள் ஆடி வைகுந்தம் அன்னாள் குழல்வாய் விரைபோல்
வண்டுகள் வாரும் மலர் உளவோ நும் வியலிடத்தே?[101]

என்று பாடுகின்றார். இப்பாசுரத்தின் கருத்து இனிமையானது.

நீரில் உண்டாகிற பூவும் மரத்தில் உண்டாகிற பூவும் என்கிற இவை, எல்லாவற்றிலும் உள்ள தேனைக் குடித்துக் களிப்படைந்து எங்கும் திரிகின்ற வண்டுகளை நோக்கி, 'வண்டுகளே! இப்பாராங்குச நாயகியினுடைய கூந்தலிலே இயற்கையாய் அமைந்துள்ள மணம்போல, மலர்ந்து மணம் வீசித் தேன்பெருகப் பெற்ற மலர்களில் நீங்கள் கண்டதுண்டா? என்று கேட்பது இங்கு 'நலம் பாராட்டல்' என்னும் துறையைச் சிறப்பிப்பதாக உள்ளது. இத்தகைய புனைவு குறுந்தொகைப் பாடலின் தாக்கமே எனக் கூறமுடிகிறது.

**தோழி தலைவியை ஆற்றுவித்தல்**

தலைவன், தலைவியைப் பிரிந்திருக்கும் காலத்தே பிரிவைப் பொறுக்க இயலாத தலைவியைத் தோழி பொறுத்துக் கொள்ளும்படியாகக் கூறி ஆற்றுவிப்பதாக அமைப்பதும் ஒரு துறையாகும். ஐங்குறுநூறு இலக்கியப் பாடல் ஒன்றனை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

கார்ப்பருவம் தொடங்கி விட்டதால், தலைவியைப் பிரிந்திருக்கும் போர்ப் பாசறையிலுள்ள தலைவன் விரைவில் வருவான் என்று கூறித் தோழி தலைவியை ஆற்றுவிக்கிறாள். இது,

வான் பிசிர்க் கருவியில் பிடவுமுகை தகைய
கான் பிசிர் கற்பக் கார் தொடங்கின்றே
. . . . . . . . . . . . . . .
நிற்துறந்து அமைகுவர் அல்லர்[102]

என்றவாறு வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

நம்மாழ்வாரின் திருவிருத்தமானது, 'ஆற்றுவித்தல்' என்ற துறை விளங்குமாறு பாசுரம் ஒன்றனைத் தந்துள்ளது. தலைவியை ஆற்றுவிக்கும்

பொருட்டுத் தோழியானவள் தலைவனின் பெருமைகளைக் கூறுவதாகவும், அதனைக் கேட்டு ஓரளவு மனம் மகிழ்ந்த தலைவி, சற்று ஆறுதலடையும் வண்ணம், தலைவனை விட உயர்ந்தவர் யாருமில்லை என்ற பாங்கில் கூறுவதாகவும்,

கழல் - தலம் ஒன்றே நிலம் முழுது ஆயிற்று ஒருகழல் போய்
நிழல்தர எல்லா விசும்பும் நிறைந்தது நீண்ட அண்டத்து
உழறு அலர் ஞானச் சுடர்விளக்காய் உயர்ந்தோரை இல்லா
அழறு அலர் தாமரைக் கண்ணன் என்னோ
. . . . . . . . . . . . . . . . . . . . இங்கு[103]

என்ற பாசுரம் புனையப்பட்டுள்ளது.

தலைவனின் அல்லது தலைவியின் பெருமைகளைக் கூறினால், இவ்விருவரில் ஒருவர் ஆற்றியிருப்பர் என்பது அகத்திணை அமைதி என்பது சங்ககால மரபு. இம்மரபினைப் பாசுரங்களில் போற்ற ஆழ்வார்களும் முயன்றுள்ளனர். ஆதலால், திருமாலாகிய இறைவனின் புகழினைப் பாடி, வைணவ அடியார்களை முக்திப் பேற்றுக்காகக் காத்திருக்குமாறு அறிவுறுத்த முயன்றார் எனலாம். அவர்தம் இம்முயற்சிக்குச் சங்கப் பாடல்களே துணைநின்றன எனவும் கூறமுடிகின்றது.

**வெறிவிலக்கு**

தலைமகளின் வேறுபாடு கண்ட தாயானவள் வேலனை அழைத்து 'வெறியாடல்' என்ற ஒன்றினை நிகழ்த்த நினைப்பாள். இந்த மாறுபாடு எத்தெய்வத்தினால் ஏற்பட்டது என்று அவ்வேலன் வெறியாடித் தெரிவிப்பான். அவ்வாறு நிகழ்த்தும் பொழுது, தலைவியின் களவு வெளிப்பட்டு விடும். எனவே, அப்படி வெளிப்படாதிருக்க வேண்டும் என்பதற்காகத் தோழி வெறியாடலை விலக்குவிக்க எண்ணுகிறாள். இதனை அகநானூறு,

பனிவரை நிவந்த 'பயம் கெழு கவாஅன்
. . . . . . . . . .
செறிந்து இலங்கு எல்வளை நெகிழ்ந்தனம் நோக்கிக்
. . . . . . . . . .
முருகன் ஆர் அணங்கு என்றலின் அது . . .
. . . . . . . . . .

பாவை அன்ன பலர் ஆய் மாண் கவின்

பண்டையின் சிறக்க என் மகட்கு என்பரைஇ[104]

என்கிறது.

வெறியாடல் குறித்த இலக்கியத்திலமைந்த தோழியின் இத்தகைய கூற்றுப் போன்று பாசுரத்திலும் உள்ளது. வெறியை விலக்க நினைக்கும் தோழி தலைவியைப் பெற்று வளர்த்த தாய்மார் உடலை வருத்திப் பெறவில்லையோ? இவளின் தலையில் திருத்துழாய்ச் சூட்டிப் பழமையான திருமலையில் கொண்டு சேர்க்க வேண்டுமென எண்ணி, இவளின் பிரிவினால் தளர்ச்சி மிகுகின்றது. இதனையறிந்திராத தாய், வெறியாடல் நிகழ்த்த நினைக்கிறாளே? என்று தோழி இரங்கிக் கூறுவதாக வரும்,

உறுகின்ற கன்மங்கள் மேலன ஓர்ப் பிலராய் இவளைப்

பெறுகின்ற தாயார் மெய்ந் நொந்து பெறார்கொல்

துழாய் குழல் வாய்த்து

உறுகின்றிலர் தொல்லை வேங்கடம் ஆட்டவும் சூழ்கின்றிலர்

இறுகின்றதால் இவள் ஆகம் மெல் ஆவி எரி கொள்ளவே[105]

என்ற பாசுரம் மனங்கொள்ளத்தக்கதாகவுள்ளது. மேலும்,

சில்மொழி நோயோ கழிபெருந் தெய்வம்

இன்நோய் இனது என்று

இல்மொழி கேட்கும் இளந்தெய்வம் அன்று இது

வேல! நில் நீ

என்மொழி கேண்மின் என் அம்மனையீர்!

உலகு ஏழும் உண்டான்

சொல்மொழி, மாலை அம் தண்ணம்

துழாய் கொண்டு சூட்டுமினே[106]

என்ற பாடலில், பாசுரத் தோழியானவள் வெறியாடல் நிகழ்த்துபவர் நிகழ்த்தாமல் இருக்க வேண்டுமென எண்ணிச் செயல்படுபவளாக உள்ளாள். அதனால் வெறியாட்டாளனை விலகி நிற்கச் சொல்லி, நோய் சிறுதெய்வத்தினால் வந்ததன்று என்றும், தலைவிக்கு நோய் நேர்ந்தது திருமாலால் என்றும் கூறி, அவனது நாமத்தை அவளது காதில் கூறி, திருமாலின் துழாய் மாலையை அணிவித்தாலே இவளது நோய் தீரும் என்று

தோழியே உரைத்து விடுபவளாகச் சுட்டப்படுகிறது. வெறியாடலில் முருகனை உட்படுத்திய அகநானூற்றுப் பாடலானது, மேற்சுட்டிய பாசுரம் பாடிய ஆழ்வார்க்கு ஏற்படுத்திய தாக்கமே இவ்வாழ்வாரை திருமாலைப் பாசுரப்படுத்தக் காரணமாயிற்று எனக் கூறமுடிகிறது.

**தலைவியும் அன்றில் பறவையும்**

தலைவனைப் பிரிந்த தலைவி, மாலை நேரத்தில் தனிமையில் இருக்கிறாள். அப்பொழுது அன்றில் பறவையானது தன் துணையைப் பிரியாது பனை மரத்தில் கட்டிய கூட்டில் புகுந்து துணையை அணைத்தது. அச்செய்கையானது, தலைவியின் மனதை வருத்தியது. அவ்வாறு மிகவும் துன்பத்தைத் தந்த தலைவனை 'அன்பில்லாதவன்' என்று எண்ணச் செய்கிறது. இதனை,

. . . . . . .
செக்கர் தோன்ற துணைபுணர் அன்றில்
எக்கர் பெண்ணை அகமடல் சேர
கழிமலர் கமழ்முகம் கரப்ப பொழிமனைப்
நெஞ்சு நெகிழ் பருவரல் செய்த
அன்பிலாளன் அறிவு நயந்தேனே . . .[107]

என்ற அகநானூற்றுப் பாடல் குறிக்கிறது.

தலைவியின் இத்தகைய நிலையினையுணர்த்தும் வகையில் நம்மாழ்வாரின்,

விளரிக் குரல் அன்றில் மென்படை மேகின்ற முன்றில் பெண்ணை
முளரிக் குரம்பை இது இதுவாக முகில்வண்ணன்[108]

என்ற திருவிருத்தத்தின் அடிகள் அமைந்துள்ளன.

வீட்டு முற்றத்தில் அமைக்கப்பட்டுள்ள, பனைமர முட்களையரிந்து கட்டிய கூட்டில், தன் பெண் பறவையை விரும்பிய அன்றில் பறவை அதனைத் தழுவுகிறது. அது 'விளரி' என்னும் உச்சக்குரலில் கூப்பிடுவதைத் தலைவி கேட்பதாகவும், அதனைக் கண்டு ஆற்றாமை மிக்கவளாகத் தலைவனை நினைத்து மெலிந்து உயிர் பிழைக்கும் வழிதெரியாது பிதற்றுபவளாகவும் உள்ள நிலையினைப் பாடுகிறார் அவர்.

அகநானூற்றுப் பாடலில் இணைபிரியாமைக்காகச் சுட்டப்பட்ட அன்றிற் பறவையின் செய்கைகள் ஆழ்வார்களின் மனத்தை ஈர்த்துத் தாக்கத்தை ஏற்படுத்தியதால் அதே பறவையினத்தைத் தம் பாசுரங்களிலும் அவர்கள் உவமைப்படுத்தினர் எனக் கூறமுடிகிறது.

**தலைவி தலைவனைக் காண விரைதல்**

தலைவியே ஆர்வம் மீதூரத் தன் தலைவனைக் காண அவனிருக்கக் கூடிய இடங்களைத் தேடிச் செல்வதை,

மள்ளர் குழீ இய விழலி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டும் காணேன்; மணந்தக் கோனை
யானும் ஓர் ஆடுகள மகளே; . . .[109]

என்ற குறுந்தொகைப் பாடல் சுட்டுகின்றது.

வீரர் குழுமியிருக்கும் இடங்களிலும், தலைவனுக்கு விருப்பமான துணங்கைக் கூத்து நிகழும் இடங்களிலும் தேடுகிறாள். இத்தலைவன் ஆடற்கலையிலும், போர்க்கலையிலும் வல்லவன் என்பதால், தலைவி அத்தகைய இடங்களில் தேடி விரையும் செயலைக் காட்டுவதாக அமைந்துள்ளது.

தலைவியின் இச்செயல் குறித்த இத்தகைய வருணனை, அவளது அன்பை நன்கு வெளிப்படுத்தும் என்றெண்ணிய ஆழ்வார்கள், அதனைத் தமது பாசுரத்துள் அமைத்தனர். இதற்குச் சான்றாக,

தையல் நல்லார்கள் குழாங்கள் குழிய குழுவினுள்ளும்
ஐய நல்லார்கள் குழிய விழவினும், அங்கு அங்கெல்லாம்
கைய பொன் ஆழி வெண் சங்கொடும் கண்டான் அவாவுவன் நான்[110]

என்ற திருவிருத்தப் பகுதியைச் சுட்டமுடிகின்றது.

கரிய நிறமுடைய திருமாலாகிய தன் தலைவனைக் காணவேண்டித் தேடிச் செல்கிறாள் தலைவி. அழகிய பெண்கள் கூட்டமாகவுள்ள திரள்களின் நடுவிலும், ஆண்கள் கூடும் திருவிழா நடைபெற்றுக் கொண்டிருக்கும்

இடங்களிலும் இருப்பானோ என்ற ஆர்வத்தில் பல இடங்களுக்கும் செல்கிறான். அத்துடன், சங்கமும் சக்கரமும் ஏந்தியவாறு இருப்பவனை எங்காவது காணமுடியுமா? என்று ஆர்வத்துடன் அலைந்து திரிகிறாள் என்பது அப்பாசுரக் கருத்தாகும்.

சங்கப்பாடற் தலைவி தனது தலைவனை வீரர் குழுமிய இடங்கள், கூத்தாடுமிடங்கள் இங்கெல்லாம் தேடி அலைகின்றாள். ஆனால், பாசுரத் தலைவியோ ஆயர்களாகிய பெண்கள் கூட்டம், திருவிழா நடைபெறுமிடம் என இங்கெல்லாம் அலைவதாகப் படைக்கப்பட்டுள்ளாள். ஆதலால், இத்தகைய வைணவப் பாசுரங்களின் படைப்புக்கு அடிப்படையாகச் சங்கப் பாடல்கள் இருந்துள்ளமையினை வெளிப்படுத்த முடிகின்றது.

**நோய் தீர்க்கும் மருந்து**

காதலர்களின், காதல் நோய் தீர்க்கும் மருந்து அக்காதலர்களே என்பதும் அகத்திணைக் கூறுகளுள் ஒன்றாகும். அன்புத் தலைவனின் பிரிவு காரணமாகத் தலைவிக்குப் பசலை கண்டுள்ளது என்பதைக் கூறும் தோழி, தலைவனிடம் அவளைப் பிரிந்து செல்லும் முன்பு அவளின் நிலையையுணருமாறும், அவளின் நோய்க்கு மருந்து அவனைத் தவிர வேறெதுவும் இல்லை என்பதை உணர்ந்து, பின்பு அவன் நினைத்தால் பிரிந்து செல்லலாம் என்றும் கூறுவதாக,

நங்காய் ஆயினும் நயன் இல செய்யினும்
நின்வழிப்படூஉம் என் தோழி நல்நுதல்
விருந்து இறைகூடிய பசலைக்கு
மருந்து பிறிது இன்மை நன்கு அறிந்தனை சென்மமே[111]

என்ற நற்றிணைப் பாடல் அமைந்துள்ளது.

இதேபோன்றதொரு கூற்று,

அருந்துயர் ஆரஞர் தீர்க்கும்
மருந்தாகிச் செல்கம் பெரும! . . .[112]

என்ற கலித்தொகையடிகளிலும் உள்ளது.

நம்மாழ்வாரின் பாசுரத்தில், பாசுரத் தலைவியின் நோய் தீர்க்கும் மருந்து நாராயணனே என்பது 'தீர்ப்பாரையாம்' எனத் தொடங்கும் பாடல் தொடங்கிப் பத்துப் பாடல்களிலும் பாடப்பட்டுள்ளது. இதற்குச் சான்றாக,

தீர்ப்பாரையாம் இனி எங்ஙனம் நாடுதும் நாடுதும் அன்னைமீர்
ஓர்ப்பால் இவ் ஒள் நுதல் உற்ற நல்நோய் இது தேரி னோம்[113]

என்ற பாசுரப்பகுதியைச் சுட்டமுடிகிறது.

தலைவனான, திருமால் என்ற பெருந்தெய்வம் காரணமாகத் தலைவிக்கு நோய் ஏற்பட்டது. எனவே, அவனது சங்கு, சக்கரம் மற்றும் பிற ஆயுதங்களைக் கூறிய அளவிலேயே கூட இத்தலைவியின் உடலில் உயிர்தங்கும் என்ற பொருளில் இது பாடப்பட்டுள்ளது. அதே இலக்கியத்தில் வரும்,

மதுவார் துழாய் முடி மாயபிரான் கழல் வாழ்த்தினால்
அதுவே இவள் உற்ற நோய்க்கும் அருமருந்து ஆகுமே[114]

என்ற அடிகளையும் இதற்கான மற்றுமொரு சான்றாகச் சுட்டமுடிகின்றது.

தலைவனின் பிரிவால் தலைவிக்கு ஏற்பட்ட நோயினைத் தீர்க்கும் மருந்து, திரும்ப வரும் தலைவனே என்பது, அகத்திணை மாந்தர்களைப் பொருத்தவரை சரி என்பது கருத்து. அதே கருத்தினை ஏற்ற ஆழ்வார்களும், அதற்கொப்பவே தலைவனாகிய திருமாலின் அருங்காட்சியே இறையருளை வேண்டி நிற்கும் அடியார்களுக்கு மருந்தாகும் என்ற கருத்தில் தமது பாசுரங்களைப் படைத்துள்ளனர் எனக் கூறமுடிகிறது. சங்கப் பாடல்களின் தாக்கமாகிய இதுவும் எண்ணி மகிழத்தக்கதாக உள்ளது.

**கனாக் கண்டு தோழிக்கு உரைத்தல்**

பிரிவாற்றாத தலைவி, தலைவனுடன் கூடி இன்புற்றதாகத் தோழியிடம் கூறுகிறாள். இக்கூற்று,

வெல்போர்ச் சோழர் அழிசி அம் பெருங்காட்டு
நெல்லியம் புளிச்சுவைக் கனவி யா அங்கு
அது கழிந்தன்றே தோழி . . . .
துறைமேல் இப்பி ஈர்ம் புறத்து உறைக்கும்

சிறுகுடிப் பரதவர் மகிழ்ச்சியும்

பெருந்தண் கானலும் நினைந்த அப்பகலே[115]

என்று நற்றிணையின்வழி வெளிப்பட்டுள்ளது. இதனை உள்வாங்கிய ஆண்டாள், அவ்வாறே நாச்சியார் திருமொழியில் பாடியுள்ளார். பாசுரத் தலைவியான ஆண்டாள் நாச்சியார், தான் கனவில் கண்ணனைத் திருமணம் செய்து கொண்டதான நிகழ்வினை,

மத்தளம் கொட்ட வரிச்சங்கம் நின்றூத

முத்துடை த்தாமம் நிரை தாழ்ந்த பந்தல்கீழ்

மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்து என்னைக்

கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழீ! நான்[116]

என்று பாடுகின்றார்.

காதல் மிகுந்த தலைவன் தலைவியர் இவ்வாறு கனவு கண்டதாகப் புனைவது, காதல் மாண்பினை உரியவாறு எடுத்துரைக்க வாய்ப்பாக இருக்குமெனச் சங்கப் பாடல்களின்வழி ஊகித்த ஆழ்வார்கள், இவ்வாறு புனைந்தனர் எனக் கூறமுடிகிறது.

**தாயின் மனநிலை**

பொதுவாக, தலைவியினும் மனம் மெல்லியள் தாய் ஆவாள். தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்ற காலத்தில், தன் மகன் முன்பு செய்த செய்கைகளையும், அவள் உடன் வைத்திருந்த விளையாட்டுப் பொருட்களையும் காணும் பொழுதெல்லாம் மனம் கலங்கி வருந்துவதுண்டு. அந்த வருத்தம்,

இது என்பாவைக் கினியநன் பாவை

இது என்பைங்கிளி எடுத்த பைங்கிளி

இது என்பூவைக்கு இனியசொற் பூவையென்று

அலம் வருநோக்கின் நலம்வரு சுடர்நுதல்

காண் தொறும் காண்தொறும் கலங்க

நீங்கினளோ என் பூங்க ணோளே?

என்ற பாடலாக ஐங்குறுநூறு (பா.375) வழி வெளிப்பட்டுள்ளது. இதனை நற்றாய்க் கூற்றுக்குச் சான்று காட்டுவர் உரையாசிரியர்.[117]

*தலைவி விளையாடிய பாவை, கிளி என்பன இப்பொழுது தனித்து விடப்பட்டுள்ளன. இது கண்டு வருந்தும் நற்றாயின் துயரம் நன்கு காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.*

*அவலச் சுவையை வெளிப்படுத்தும் இப்பாடலோடு ஒன்றி வருமாறு பாசுரம் யாக்க எண்ணிய நம்மாழ்வார்,*

பூவை பைங்கிளிகள் பத்து தூதை பூம்புட்டில்கள்
யாவையும் திருமால் திருநாமங்களே கூவி எழும்என்
பாவை - போய் இனித் தண் பழனத் திருக்கோளூர்க்கே
கோவை வாய் துடிப்ப மழைக் கண்ணோடு என்
செய்யுங்கொலோ?[118]

*என்றவாறு பாடியுள்ளார். இப்பாசுரத்தில் வரும் தலைவியோ சங்கப்பாடற் தலைவியினும் மாறுபட்டவள். இவள் கிளி, பந்து, சிறிய மரப்பானை, பூங்கூடை என்பனவற்றைப் பயன்படுத்தியவள். உடன்போக்குச் சென்ற அவள் போலன்றி, இவள் திருமாலை வணங்குவதற்காகத் திருக்கோளூர்க்கே செல்கிறாள். இத்தலைவியின் பக்தி மாண்பிற்கேற்பவே அவள் மங்களமாகக் கருதப்படும் பொருட்களுடன் பழகியதாக, இவ்வாழ்வார் பாடியுள்ளார் எனக் கூறமுடிகிறது.*

*திருமால் உறைந்திருக்கும் திருக்கோளூரிலேயே தன் மகளும் உறைந்திருப்பாளோ? அன்றி என்ன செய்கிறாளோ? எனத் துன்புறும் தாயின் மனநிலை, ஆழ்வார்களால் சங்க இலக்கிய நற்றாயின் மனநிலையின் மறுவடிவம் போன்றதே எனக் கூறமுடிகிறது.*

**மடநெஞ்சு**

*காப்பு மிகுதியினால் தலைவி தலைவனைக் காணாது ஆற்றாத நிலையில், தன் நெஞ்சத்தை அவனிருக்கும் இடத்திற்கு அனுப்புகிறாள். அவ்வாறு சென்ற நெஞ்சத்தினை அவள் 'மடநெஞ்சு' (அறியாமையுடைய நெஞ்சு) என்கிறாள். அக்கூற்றானது கலித்தொகையில் பதிவாகியுள்ளது. அதாவது,*

. . . இருள் பரப்பக் கையற்ற கங்குவான்
மாணாநோய் செய்தான் கன் சென்றாய்; மற்று அவனைநீ

காணவும் பெற்றாயோ? காணாயோ? மடநெஞ்சே

. . . . . . . . . . . . . . . . . .

எல்லையும் இரவும் துயில் துறந்து . . . .

இருங்கழி ஒதம்போல் தடுமாறி . . . . .[119]

என்பதாகும் அப்பதிவு.

'மடநெஞ்சே', தலைவனிடத்து நீ கொண்ட விருப்பத்தால் இரவும் பகலும் உறங்காத அவனை எண்ணியே வருந்திக் கடல் நீரைப் போல் வந்து வந்து திரும்புகிறாய்' என்கிறாள் தலைவி.

சங்கத் தலைவியின் நெஞ்சம் வந்து வந்து தலைவன்பாற் சென்றது. ஆனால், பாசுர நாயகியின் நெஞ்சமோ அவளது தலைவனிடம் சென்றது மீண்டும் திரும்பவே இல்லை. தலைவனிடத்திலேயே தன்னையிழந்து தங்கிவிட்டது.

இறைவனிடம் தொண்டன் தன்னை இழக்கும் பொழுதுதான், அவனுக்கு இறையருள் கிடைக்கும் என்பது நம்பிக்கை. அதனை வெளிப்படுத்த எண்ணிய பாசுரம், வந்து வந்து மீளும் சங்கத் தலைவியின் நெஞ்சம்போல அல்லாமல், தலைவனிடத்திலேயே தலைவியின் நெஞ்சு தங்கிவிடுவதாகப் பாடியுள்ளது. 'மடநெஞ்சம்' என்ற அடைபெற்ற சொல் ஒன்றனை அவ்வாறே பாசுரமும் எடுத்தாண்டுள்ளது. சங்கப் பாடலில் வந்துள்ள அந்தச் சொல் ஆளுமையை,

மடநெஞ்சம் என்றும் தமது என்றும் ஓர் கருமம் கருதி

விடநெஞ்சை உற்றார் விடவோ அமையும் அப்பெண் பெயரோன் ...[120]

என்ற திருவிருத்த அடிகளிலும் காணமுடிகின்றது. இதனாலும் ஆழ்வார்களின் இச்செய்கையினை உறுதிப்படுத்த முடிகிறது.

**துன்பம் தரும் மாலைப்பொழுது**

தலைவனைப் பிரிந்திருக்கிறாள் தலைவி. அவளைத் துன்புறுத்துவதற்காகவே காத்திருந்தவாறு போல மாலைப்பொழுது வருகிறது. அது விலக்குபவர் யாருமில்லையென்பதால், முன்பு நடுப்பொழுதிலும் வந்ததாகக் கூறுகிறாள். அது, நெய்தல் மலர் குவியும் காலைப் பொழுதிலும்

வந்தது என்கிறாள். தலைவனில்லாததால் எப்பொழுது வேண்டுமானாலும் வரும் மாலைப்பொழுது என்று பேசுவதாக வரும்,

தண்கடல் சேர்ப்பன் பிரிந்தென பண்டையின்
கடும்பகல் வருதி கையறு மாலை!
கொடுங்கழி நெய்தலும் கூம்பக்
காலைவரினும் களைஞரோ இலரே[121]

என்ற பாடல் ஐங்குறுநூற்றில் உள்ளது.

ஆழ்வார்ப் பாசுரத்திலும் தலைவியை வருத்தும் மாலைப்பொழுது வெறுக்கப்படுவதாகப் புனையப்பட்டுள்ளது. தலைவியைத் துன்பம் செய்வதற்கென்றே வரும் மாலைப் பொழுதினைப் பற்றிக் கூறும் நம்மாழ்வார்,

கார் ஏற்று இருள் செகில் ஏற்றின் சுடருக்கு உளைந்து, வெல்வான்
போர் ஏற்று எதிர்ந்தது புன் தலை மாலை[122]

என்று பாடுகிறார்.

காலைப்பொழுதிலேயே வரவேண்டுமென்று நினைத்த மாலையானது, சூரியனுடன் போரிட்டு இளைத்து விட்டது; மீண்டும் வெற்றி கொள்ளும் பொருட்டு இப்பொழுதும் வருகிறது. இந்நயம், சங்ககாலப் பாடல்கள் மாலையைப் புனைந்த நயத்தினும் நயமானது எனக் கூறமுடிகிறது.

**விட்டுக் கொடுக்கும் குலமகள்**

தலைவன், தலைவியை மறந்து அவன் செய்த செயல்களால் மனம் வெதும்புகிறாள் தலைவி. அவனது வஞ்சனையை அறிந்தவளாகவும் தலைவி இருக்கிறாள். ஆனால், தான் தவறிழைக்கவில்லை என்றே தலைவன் கூறுகிறான்.

தலைவன் இப்படி இருந்தாலும் சற்று விட்டுக் கொடுத்துப் பார்ப்போம் என்றும், அதனால் பயன் விளையுமென்றும் நினைக்கிறாள் தலைவி. இத்தகைய தலைவியைக் கலித்தொகையானது,

ஏஎ! தெளிந்தோம் யாம்; காயாதி - எல்லாம் வல் எல்லா

பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித் தாங்கு

வருந்தல் நின் வஞ்சம் உரைத்து . . .

. . . . . . . . . . . . . . . .

மாண மறந்து உள்ளா நாணிலிக்கு இப்போர்

புறம் சாய்ந்து காண்டைப் பார்! - நெஞ்சே! உறழ்ந்து[123]

*எனப் புனைந்துரைத்துள்ளது.*

*தலைவியின் இத்தகைய நிலையைக் குலசேகராழ்வாரும் தனது பாசுரத்தில் குறித்துள்ளார். குலமகளாக இருப்பவள், தன் தலைவன் என்னதான் தீங்கு செய்தாலும் அவனை வெறுத்து ஒதுக்காது ஏற்றுக் கொள்வதே மரபு என்பதை,*

கண்டார் இகழ்வனவே காதலன் தான் செய்திடினும்

கொண்டானை யல்லா லறியாக் குலமகள்[124]

*என்ற அடிகளின்வழிச் சுட்டிச் சங்கத் தலைவியின் நல்ல மாண்பினைப் போற்ற இவ்ஆழ்வார் முனைந்துள்ளார் எனக் கூற முடிகிறது.*

**பிறவிதோறும் தொடரும் அன்பு**

*தலைவனிடம் தலைவி கொண்ட அன்பானது, இப்பிறவியிலின்றி, வரும் பிறவிகளிலும் தொடரும் என்பது சங்ககால நம்பிக்கையாகும். இந்த நம்பிக்கையானது,*

இம்மை மாறி மறுமையாயினும்

நீயாகிய ரென் கணவனை

யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே[125]

*எனக் குறுந்தொகையில் பதிவாகியுள்ளது. ஒத்த அன்புடையோர்க்கே இது வாய்க்கும் எனலாம். அந்த நம்பிக்கையானது, பிற்கால ஆழ்வார்ப் பாசுரங்களிலும் நிலைநிறுத்தப்பட்டுள்ளது. இதற்குச் சான்றாக,*

அகலகில்லேன் இறையுமென்று

அலர்மேல் மங்கையுறை மார்பா[126]

*என்ற அடிகளில் ஒத்த அன்புடையோர் பற்றி வருவதையும் சுட்டமுடிகின்றது. ஆண்டாளின்,*

எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்[127]

*என்ற திருப்பாவைக் குறிப்பும்,*

ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான்[128]

*என வரும் நாச்சியார் திருமொழிக் குறிப்பும் இத்தகைய தாக்கத்திற்குச் சான்றாக அமைகின்றது.*

**மழையை வேண்டும் தலைவி**

*உலகம் வாழவேண்டுமெனில் நீர் வேண்டும். இதனையே திருவள்ளுவர், 'நீரின்றி அமையாது உலகு' என்றார். நீர் வளம் வேண்டிக் கற்புடைப் பெண்கள் இறைவனிடம் வேண்டினர் என்பதைக் கலித்தொகை,*

தெய்வத்துத் திறம் நோக்கித் தெருமரல் - தேமொழி
வறன் ஓடின் வையகத்து வான்தரும் கற்பினாள்[129]

*எனப் பதிவு செய்துள்ளது. பெண்டிரின் இத்தகைய வேண்டுதல்கள் இன்றியமையாதன எனப் பக்தி இலக்கியக் காலத்திலும் கருதப்பட்டது. ஆதலால், உலகில் மனிதர்கள் இன்புற்று வாழப் பெய்திட வேண்டுமென்று மழையைக் கருதி ஆண்டாள் வேண்டுவதை,*

ஆழிமழைக் கண்ணா! ஒன்று நீகை கரவேல்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
வாழ உலகினில் பெய்திடாய்[130]

*என்று திருப்பாவை குறிப்பிடுகின்றது. ஆண்டாளின் இக்கூற்று கலித்தொகைத் தலைவி மழைவேண்டிப் பாடியதை நினைவூட்டுவதாக உள்ளது.*

**அந்தி விளக்கு**

*உலகில் நேரிடும் கேடுகள் அகலவும், தம் குடிகள் விளங்க வேண்டியும் சங்ககால மகளிர் அந்தி மாலையில் விளக்கினை ஏற்றி வழிபட்டனர். இதனை நற்றிணை,*

முரசு முதற் கொளீ இய மாலை விளக்கின்
வெண் கோடு இயம்ப . . . . . . [131]

*எனத் தெரிவிக்கிறது. இவ்வாறே, மங்கல தீபம் ஒளிரும் திருவல்லிக்கேணி இறைவனை மாலையில் வழிபட்டு உலக நன்மையினை வேண்டியதாக வரும்,*

வந்து உதைத்த வெண்திரைகள் செம்பவள வெண் முத்தம்
அந்தி விளக்கும் அணி விளக்காம் - எந்தை
ஒரு அல்லித் தாமரையாள் ஒன்றிய சீர் மார்வன்
திருவல்லிக் கேணியான் சென்று[132]

*என்ற பேயாழ்வாரின் பாசுரமும், சங்ககாலச் சாயல் உடையதே எனக் கூறமுடிகிறது.*

**மடலேறுதல்**

*தமிழ் அகப்பொருள் துறையில் 'மடலேறுதல்' என்பது ஒரு துறையாகக் காணப்படுகிறது. தன்னை விரும்பிய தலைவியை அடைய முடியாத நிலையில், மடலூர்ந்தாவது அவளைப் பெற வேண்டுமென்பதற்காகத் தலைவன் பனங்கருக்கினால் செய்த குதிரை மேலேறி, ஊர் நடுவே தோன்றித் தனது காதலை அனைவர்க்கும் வெளிப்படுத்துவான். அது கண்டு அனைவரும் இரங்கி அவனுக்குரிய அத்தலைவியைத் திருமணம் செய்ய உதவுவர் என்கிறது சங்க இலக்கியம். இதற்கு அடிப்படை,*

எத்திணை. . . . . . மகடூஉ மடன் மேல்
பொற்புடை நெறிமை இன்மையான. . . [133]

*என்ற தொல்காப்பியக் குறிப்பாகும்.*

*'ஏறிய மடற்றிறம்' என்பது பெண்களுக்கானது அல்ல; ஆண் மடலேறுதல் அனுமதிக்கப்பட்டது.*

கடலன்ன காமம் முழந்தும் மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்க தில்[134]

*பெருந்தகைமை உடையவள் தலைவி என்கிறார் திருவள்ளுவர். தலைவி மடல் ஏறும் மரபு இல்லையெனினும் அவள் மடலேற எண்ணியதுண்டு என்பதை,*

நவினன் ஞாயிறே காட்டாய் நீயாயின்
பனையீன்ற மாவூர்ந்தலன் வரக்காமன்
கனையிரப்பேன் கால் புல்லிக் கொண்டு[135]

*என்ற கலித்தொகைப் பகுதி கூறுகின்றது.*

பிரிவு நீட்டித்தபொழுது ஆற்றாத தலைவி கலங்கிய நிலையில் கூற, தலைவன் அப்பொழுது வந்து விடுகிறான். அதனால் அப்படி எண்ணம் தோன்றிய தலைவி தெளிந்ததாக காண்டோர்கள் கூற்றாக வரும் அப்பாடல் தெரிவிக்கிறது. இது தலைவி கூற்றாக அமையவில்லை எனினும், பெண்ணிற்கும் அந்த எண்ணம் ஏற்படும் என்பதைச் சங்கப் புலவர்கள் தமது பாடல்களின் மூலம் வெளிப்படுத்தினர். இவ்வாறான எண்ணம் ஆழ்வார்களுக்கும் தோன்றவே, அதன் விளைவாகவே, வைணவத்தில் இருமடல் இலக்கியங்கள் தோன்றின எனலாம்.

பிற்காலத்தே தோன்றிய பன்னிரு பாட்டியல் என்ற இலக்கண நூல் மட்டும் இக்கருத்தினை,

மடன்மாப் பெண்டிர் ஏறார் ஏறுவர்
கடவுளர் தலைவராய் வருங்காலே[136]

என்று குறிப்பிடுகிறது. பரகால நாயகியின் திருமடல்கள் இரண்டும் ‘மடலேறுவேன்’ என்று அச்சுறுத்தும் வகையில் அமைந்துள்ளதே தவிர, தமிழரின் பண்பாடு மாற்றப்படாமல், இறுதிவரை மடலேறாத் தன்மையே உள்ளது எனக் கூறமுடிகிறது.

இரு திருமடல்கள் பாடியிருப்பதற்கான நிலையானது ‘மடலேறுவேன்’ என்று சொன்ன அளவிலேயே, தலைவன் ஓடிவந்து தன்னை அடைவான் என்று எதிர்பார்த்த நாயகிக்கு, அவன் வராதுபோகவே, எண்ணிய செயல் கைகூடாததால் பெரிய அம்பாகத் தொடுக்க நினைத்தே மற்றொன்றை, பெரிய திருமடலாகப் பாடுகிறாள் என்று ‘அண்ணங்காச்சாரியார்’ கருத்துக் கூறுகிறார்.

மடலேறும் நிலையும், இடமும் குறுந்தொகையில்,

பெறுகதில் அம்ம யானே பெற்றாங்கு
அறிகதில் அம் இவ்ஊரே! மறுகில்[137]

எனக் குறிக்கப்பட்டுள்ளது. காமநோய் முற்றிய நிலையில் மடல் ஊர்வதையும்,

மா என மடலும் ஊர்ப; பூ எனக்
குவிமுகிழ் எருக்கம் கண்ணியும் சூடுப. . . .[138]

என்று, எருக்கமாலையணிந்து நாற்சந்தியில் பலரால் ஆரவாரிக்க நிற்பதையும் அதே இலக்கியம் சுட்டுகிறது.

மடலேறினால் அது ஊராரின் பழிச்சொல்லுக்கு இடனாகும். அதனைத் தவிர்த்துத் தலைவனைப் பிரிந்து உயிருடன் வாழ்தலும் பழியே என்பதை,

மாஎன மடலொடு மறுகில் தோன்றித்
தெற்றெனத் தூற்றலும் பழியே
வாழ்தலும் பழியே[139]

என்று குறுந்தொகை தெரிவிக்கிறது. மேலும், இத்தகைய மடலேற்றம் குறித்துக் கலித்தொகை,

ஒண்தொடீ! நாண் இவன் மன்ற இவன்
ஆயின் ஏஎ
பல்லார் நக்கு எள்ளப் படுமடல் மாஏறி
மல்லல் ஊர் ஆங்கண் படுமே. . . .[140]

என்று பாடுகிறது. இதில், அருள்செய்யாவிட்டால் தெருவில் பலரும் எள்ளி நகையாடும் நிலையில் தான் மடலேறப் போவதாகத் தலைவன் கூறுவதாகத் தோழி கூறுகிறாள். மேலும் நற்றிணையில் வரும்,

வில்லாப் பூவின் கண்ணி சூடி
நல்ஏ முறுவல் எனப் பல் ஊர்திரிதரு
நெடுமாப் பெண்ணை மடல்மானோயே?[141]

என்ற அடிகளில், விற்கப்படாத பூக்கள் சூடி நன்கு பிதற்றுகிறான். பலரும் நகைக்கும் வண்ணம் பல ஊர்களுக்கும் சென்று திரிபவனாகவும், நீண்ட கரிய பனைமடலாலான குதிரையைக் கொண்டவனாகவும் தலைவன் சித்திரிக்கப்படுகிறான்.

இத்தகைய செய்திகளைத் தாங்கிய நிலையில் சங்க இலக்கியம் மடல் குறித்துக் கூறுகிறது. இவ்விலக்கியத் தாக்கத்தின் காரணமாகவே தொல்காப்பிய மரபிற்குப் புதுமையைச் சேர்க்கும் விதமாக ஆழ்வார்கள் பாடியுள்ளனர் எனலாம்.

வைகுண்டத்திலுள்ள திருமாலை இறந்த பின்பு சென்று சேர்வதை விட, இந்தப் பூவுலகில் இருக்கும்பொழுதே தன்னைத் திருமாலிடம் சேர்த்து அவனுடன் மகிழத் துடிக்கிறார் திருமங்கையாழ்வார். ஆதலால், பரகால நாயகியாகிய சிறிய திருமடல், பெரிய திருமடல் என்று திருவாய் மலர்ந்தளுகிறார்.

ஊரார் இகழ்ந்தாலும் பரவாயில்லை என்ற நிலையில்,

எண் அருசீர் பேர் ஆயிரம் பிதற்றி பெருந்தெருவே
ஊரார் இகழிலும் ஊராது ஒழியேன் நான்
வார் ஆர் பூம் பெண்ணை மடல்[142]

அவனின் திருப்பெயரையும், அவனிருக்கும் திருத்தலங்களையும் ஒன்றும் விடாமல் சொல்கிறாள். பெரிய தெருக்களில், பெரிய அழகிய பனைமடல்களால் ஆன குதிரையில் மடலேறுவேன். ஊராரின் பழிக்கு அஞ்சி மடல் ஊராதிருக்காது, அனைவரும் வசை பாடினாலும் அஞ்சாதிருக்கும் தலைவியை இங்கு அறியமுடிகின்றது.

இறைவன் அருள் செய்கிறானா என்று பார்க்கிறாள். இது சரிவராது என்று நினைத்துப் பெரிய திருமடலில், நரையூரில் உள்ள பெருமான் தனது காதலை ஏற்றுக் கொண்டு அருள வேண்டுமென்றும், இல்லையெனில், தலைவனிருக்கும் திருப்பதிகள் தோறும் சென்று தினமும் மடலூர்ந்து கொண்டேயிருப்பேன் என்றும் கூறும்பாங்கில்,

கன்னி மதில் சூழ் கண்ணமங்கை கற்பகத்தை
முன்னி முளைத் தெழுந்து ஓங்கியொளி பரந்த
மன்னிய பூம் பெண்ணை மடல்[143]

எனத் தலைவி பாடுகின்றாள். மேலும், பெண்கள் மடலூராத நிலை என்ற தமிழ் மரபு அறிந்திருந்த நாயகியேதான் என்பதையும், வடநெறியை வேண்டியே அவ்வாறு நடந்து கொண்டாள் என்பதையும், அவளது கூற்றாகவே வரும்,

அன்ன நடையார் அலர்ஏச ஆடவர்மேல்
மன்னும் மடல் ஊரார் என்பது ஓர்வாசகமும்

தென்னுரையில் கேட்டு அறிவதுண்டு - அதனையாம் தெளியோம்
மன்னும் வடநெறியே வேண்டினோம்[144]

என்ற பாசுரப்பகுதியில் காணமுடிகின்றது.

**சங்ககாலக் கரணமும், பாசுரம் கூறும் திருமணமும்**

தமிழரின் வாழ்வியலோடு இணைந்திருந்த பழமையான சடங்குகளைச் சங்க இலக்கியங்கள் பிரதிபலிக்கின்றன. தமிழர்தம் திருமண முறைகள் குறித்துத் தொல்காப்பியரின் களவியல், கற்பியல் நூற்பாக்களைக் கொண்டு அறியமுடிகிறது. கற்பு வாழ்வானது, தலைவனும் தலைவியும் திருமணம் செய்து இல்லறம் நடத்துவதாகும். அதற்கு அடிப்படையாகக் 'கரணம்' என்பது குறிப்பிடப்படுகிறது. 'கரணம்' என்பது வதுவைச் சடங்காகும். கற்பு என்பது தொல்காப்பியத்தால்,

கற்பெனப்படுவது கரணமொடு புணர. . .[145]

என்று கரணத்தோடு தொடர்புபடுத்தப்படுகிறது.

தலைவன் வீரச்செயல் புரிந்து பெண்ணினை மணக்கும் திருமண முறை பேசப்படுகிறது. ஏறுதழுவுதலாகிய வீரச்செயல் புரிந்து தலைவன் தலைவியை மணமுடித்ததைக் கலித்தொகை,

கடா அக் களிற்றினும் கண்ணஞ்சா ஏற்றை
விடாஅது நீ கொள்குவை ஆயின்படா அகை
ஈன்றன. ஆய மகள் தோள் . . . .[146]

என்று பாடியுள்ளது. யானையினும் வலிய இக்காளையை அடக்கினால், அதனால் வரும் வெற்றியானது இத்தலைவியின் தோளினை அவனுக்குத் தரும் என்கிறது கலித்தொகை.

இதே மரபினைத் தனது பாசுரத்தில் தக்க வைத்துக் கொள்ளும் மரபினைப் போற்ற விழைந்த திருமங்கையாழ்வார், ஆய்ப்பாடியில் கண்ணன் நப்பினையை மணக்க ஏழு எருதுகளை அடக்கி, பின் அவளை மணமுடித்தான் என்ற கருத்தில்,

சென்று சினவிடை ஏழும் அடர்த்துப் பின்னை
செவ்வித் தோள் புணர்ந்து உகந்த திருமால்[147]

என்று பெரிய திருமொழியில் பாடிச் சங்ககால மரபினைப் போற்றியுள்ளார். முல்லைக்கலியின் சாயலையும் இதன்வழி உணர்ந்து மகிழ முடிகின்றது.

**திருமணச் சடங்குகள்**

காதலித்த தலைவனும் தலைவியும், களவு நிலையினின்று கற்பு நிலைக்கு வந்து நடக்கும் இல்லற வாழ்வு சிறக்கும் என்பது சங்ககால மரபாகும். ஆனால் சில வேளை, களவுக் காதலையே மறுத்துப் பேசித் தான் களவில் தலைவியைக் கூடவில்லை எனத் தலைவன் பொய்யுரைக்கத் துணிவதுண்டு. இந்நிலையில்தான், வரைவு நிகழ்வதில் 'கரணம்' என்னும் சடங்கு இன்றியமையாதது ஆயிற்று. இதனைத் தொல்காப்பியம்,

பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப[148]

என்கிறது. பெற்றோர் கொடுப்பக் கொண்டு, திருமணம் நிகழ்வதும் உண்டு.

**நாள், கோள் பார்த்தல்**

திருமணச் சடங்கு நடத்துவதற்கு நாள், கோள் பார்த்து, பிறை நிமித்தம், சகுணம், சோதிடம் என்னும் ஒத்திசைவுகளின் அடிப்படையில் முனைந்தனர் என்பதை அகநானூற்றில் வரும்,

வேங்கையும் ஓர் இனர் விரிந்தன
நெடு வெண் திங்களும் ஊர் கொண்டன்றே[149]

என்ற பகுதியிலிருந்து அறியமுடிகின்றது. அதாவது, பூக்கள் பூக்கும் காலத்திலும் பிறை நிலா, முழு நிலாக் காலத்திலும் திருமணம் நிகழுமாறு மணநாள் உறுதி செய்யப்பட்டது எனக் கபிலர் பாடுகிறார்.

சங்ககால மண நிகழ்வினின்று பிற்கால மணநிகழ்வுகள் காலப்போக்கில் மாறுபட்டன. பெண்ணின் திருமணத்தைப் பலரறிய உறுதிசெய்யும் 'நிச்சயதார்த்தம்' என்னும் நிகழ்வு வழக்கத்திற்கு வந்தது. அந்நிகழ்விற்குப் பலரை அழைத்து, மணப்பெண்ணிற்குப் புத்தாடை அணிவித்து மணஉறுதி செய்யப்பட்டது. இதுவே, 'பரிசம் போடுதல்' என்ற

மண உறுதி நிகழ்வாகும். இத்தகைய நிகழ்வினை ஆண்டாள் நாச்சியார் தனது பாசுரத்தில் வைத்து,

இந்திரனுள்ளிட்ட தேவர் குழாமெல்லாம்
வந்திருந்தென்னை மகட்பேசி மந்திரித்து. . .[150]

எனப் பாடுகிறார்.

பாசுரத் தலைவன் இறைவனாக இருப்பதால், மணப்பெண் பேசி திருமண உறுதி செய்யத் தேவர்களும், தேவர் தலைவனான இந்திரனும் வர, தலைவியைத் திருமாலுக்கு மணமுடிக்க உறுதி செய்யப்பட்டதாகப் புனையப்பட்டுள்ளமை சிறப்பாகவுள்ளது.

**பந்தல் அமைத்தல்**

மணவிழா நடைபெறும் இல்லம் மற்றும் சூழ்ந்த இடம் எங்கும் தூய்மை செய்யப்பெற்று, வாசலில் புதுமணல் பரப்பி, நிழல் கொடுக்கும் வண்ணம் பந்தல் அமைத்து, அதனைச் சுற்றித் தோரணங்களைத் தொங்கவிட்டும், விளக்குகளை வைத்தும் அலங்கரித்தனர். இச்செய்தியை அகநானூறு,

தண் பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
மனை விளக்குறுத்து மாலை தொடரி . . .[151]

என்றவாறு குறிப்பிடுகிறது.

ஆண்டாள் நாச்சியாரின் திருமணப் பந்தலின் வாயிலில் வாழை, கமுகு மரங்கள் கட்டப்பட்டன. தெருவெங்கும் பந்தலமைத்துத் தோரணங்களால் கட்டி அலங்கரித்தனர். மேலும், பொற்கலசங்களில் பூரணகும்பம் வைத்திருந்தனர். இவற்றை,

வாரணமாயிரம் சூழ வலஞ்செய்து
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக் கண்டேன்[152]

எனவும்,

நாளை வதுவை - மணமென்று நாளிட்டு

பாளை கமுகு பரிசுடைப் பந்தற்கீழ்[153]

*எனவும் வரும் நாச்சியார் திருமொழி சுட்டுகின்றது.*

**முகூர்த்தம்**

*கோள்களின் தீமைகள் எல்லாம் நீங்கப் பெற்றதான பிறைநிலாக் காலத்தில் உரோகிணி என்ற நட்சத்திரம் கூடிய நல்ல நாளில், பொழுது புலருகின்ற அதிகாலை நேரத்தில் மங்கலச் சடங்கினைத் தொடங்கி நடத்துவர் என்பதனை,*

கனை இருள் அகன்ற கவின் பெறு காலைக்

கோள் கால் நீங்கிய கொடு வெண் திங்கள்[154]

*என்கிறது அகநானூறு. மேலும் மக்களுக்குக் கொடுக்கக்கூடிய பொருட்களை மகப்பேறுவாய்ந்த மங்கலப் பேரிளம் பெண்டிர் ஆரவாரத்துடன் கூடி எடுத்து வைத்தனர் என்பதையும் அதே இலக்கியம்,*

முன்னவும் பின்னவும் முறை முறை தரத்தர

புதல்வற் பயந்த திதலை அவ்வயிற்று

வால் இழை மகளிர் நால்வர் கூடி[155]

*என்கிறது. இவற்றுள், நீர்க்குடங்களுடன் சில பெண்டிர் மண்டை என்னும் பெரிய அகல் விளக்கு ஏற்றி வந்தனர் என்பதற்கு இன்றியமையாமை அளித்த ஆண்டாளின் நாச்சியார் திருமொழிப் பாசுரமானது,*

கதிரொலி தீபங் கலசமுடனேந்தி. . .[156]

*என்று கூறிச் சிறப்பிக்கிறது.*

**மங்கல நீராட்டுதல்**

*மங்கல மகளிர் சூழ, முழவு முழங்கியும் முரசு ஒலிக்குமாறும் மங்கல இசையுடன் மணமக்களை நல்ல நேரத்தில் மணையில் அமர்த்தி மணநீராட்டிய செய்தியை,*

கடிநகர் புனைந்து கடவுட்பேணி

படுமனை முழவொடு. . . . .

வதுவை மண்ணிய மகளிர் விருப்புற்று. . .[157]

*என்று அகநானூறு குறிப்பிடுகிறது.*

ஆண்டாளின் திருமணத்தில் மத்தளம் கொட்டப்பட்டு, வரிச்சங்கம் தொடர்ந்து ஊதப்படுவதுடன் பெரியோர் சூழ, மணமகனை வரவேற்று, நான்கு திசைகளிலிருந்தும் கொண்டு வரப்பட்ட புனித நீரைத் தலைவன் தலைவி மீது தெளித்து, வேதம் முழங்க மங்கல நீராட்டு நடைபெற்றதாகக் கூறும் நாச்சியார் திருமொழி,

நாற்றிசைத் தீர்த்தம் கொணர்ந்து நனி நல்லி[158]

எனப் பாடி, குறிப்பிட்ட அந்த அகநானூற்றுப் பாடலுக்கும் இப்பாசுரத்துக்கும் உள்ள ஒரு தொடர்பினை வெளிப்படுத்தியுள்ளது எனக் கூறமுடிகிறது.

**மாலையணிவித்தல்**

வெள்ளை நூலினால், புல்லின் கிழங்கில் தனித்திருந்த நீலமணி போன்ற இதழ்களையுடைய அரும்புகளை மாலையாகத் தொடுத்தனர். அவ்வாறு தொடுத்ததை மணமக்களுக்குச் சூட்டுகின்றனர் என்பதை,

மென் பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயம்பு அமல் அருகை
. . . . .மா இதழ் பாலை. . . . . . . . . . . . . . .
. . . . . வெண்ணூல் சூட்டி. . . . . . . . . . . .[159]

என்று அகநானூறு தெரிவிக்கின்றது.

புனித நீராடி அன்றலர்ந்த மலர்மாலையை அணிந்து கண்ணன் வந்த அழகுக் காட்சியை,

பூப்புனை கண்ணிப் புனிதனோ டென்றன்னை. . .[160]

என்று கூறிப் பாடுகிறாள் ஆண்டாள்.

**தூய ஆடை அளித்தல்**

மணமக்களுக்குத் திருமண உடைகளை அணிவித்து அணிகலன் பூட்டி அழகு செய்ததை,

தூ உடைப் பொலிந்து மேவரத் துவன்றி. . .[161]

என்று அகநானூறு வருணிக்கின்றது. இதே போன்ற வருணனைகளைப் பாசுரங்களிலும் காணமுடிகின்றது. திருமாலைத் திருமணம் செய்யும் ஆண்டாள் நாச்சியாருக்கு, திருமாலின் சகோதரியான ‘அந்தரி’ என்று

கூறக்கூடிய துர்க்கையானவள் கூறைச் சேலையை உடுத்திவிட்டு மாலையையும் சூட்டிவிடுவதை,

மந்திரக் கோடி உடுத்தி மணமாலை
அந்தரிச் சூட்ட கனாக் கண்டேன். . .[162]

என்று புனைந்துள்ளது நாச்சியார் திருமொழி.

**வேதியர் சடங்கு**

வேதியரின் சடங்கிற்கு இன்றியமையாமை அளித்தது சங்ககாலம் எனக் கூறலாம். சான்றாகக் கலித்தொகையானது,

மாதா கொள் மான் நோக்கின் மடந்தை தன் துணையாக
ஒத்துடை அந்தணன் வரிவலங் கொள்வான் போல்[163]

என்று பாடி வேதச் சடங்கினை உவமைப்படுத்தியுள்ளதைக் கூறலாம்.

மணமக்களை ஏற்கும் தலைவன் அவளது கையைப் பற்றி, அந்தணர் வளர்த்த தீயை வலம் வந்ததாகவும் அவ்விலக்கியம் குறிப்பிடுகின்றது.

நாச்சியாரின் திருமொழியில், வேதங்களை முறைப்படி ஓதிய அந்தணர்கள், நாணற்புல்லை இடமாக அமைத்துத் தலைவியானவள் தலைவனாகிய கண்ணபிரானின் கையைப் பற்றித் தீயை வலம் வருவதான நிகழ்வு,

காய்ச்சின மாகளிறன்னானென் கைப்பற்றி
தீவலஞ் செய்யக் கனா கண்டேன் தோழி[164]

என்றவாறு புனையப்பட்டுள்ளது.

**மங்கலநாண்**

திருமணத்தின்பொழுது மங்கலநாண் அணிவிக்கப்படுவது தற்காலத்தில் ‘தாலி கட்டுதல்’ என்று கூறப்படுகிறது. இத்தகைய தாலி என்னும் மண அணியானது,

இழையணி சிறப்பின். . . .[165]

என அகநானூற்றிலும்,

பூண் அணி ஆகம் புலம்ப. . . .[166]

என நற்றிணையிலும் குறிக்கப்பட்டுள்ளது. சிறார் அணியும் தாலி என்னும் அணிகலன்,

பொன்னொடு. . . . . . . . . .

புலிப்பல் கோர்த்த புலம்பு மணித் தாலி[167]

என அகநானூற்றிலும்,

ஈகையரிய இழையணி மகளிர். . . . .[168]

எனப் புறநானூற்றிலும் பாடப்பட்டுள்ளது. இந்தத் தாலி குறித்துத் திவ்ய பிரபந்தத்தில் பெரியாழ்வாரின் பாசுரம்,

தாலிக்கொழுந்தைத் தடங்கழுத்தில் பூண்டு[169]

என்று பாடி, கண்ணன் தன் கழுத்தில் அதனை அணிந்து கொண்டிருந்ததாகவும் பாடுவது எண்ணத்தக்கதாகும். தாலி என்னும் இம்மங்கல அணி குறித்து இன்னும் ஆராய வேண்டியுள்ளது.

**கைத்தலம் பற்றுதல்**

நாச்சியார் திருமொழியில் மங்கலநாண் பூட்டும் நிகழ்வு குறிப்பிடப்படவில்லை. மாலை மாற்றி, தலைவனின் கையைப் பற்றிய நிகழ்வே திருமண முடிவாகப் பாடப்பட்டுள்ளது. தற்காலத்தில் ‘பாணிக்கிரஹணம்’ செய்து கொள்ளுதல் என்பது சில சமூகத்தினரால் பின்பற்றப்படுவதே இந்தக் கைத்தலம் பற்றுதல் என்பதாகும்.

**வாழ்த்துதல்**

வந்திருக்கும் அனைவரும் மணமக்களை வாழ்த்துவது சங்ககாலம் தொடங்கி இன்றுவரை இருந்துவரும் மரபாகும். மணமக்கள் கற்பொழுக்கம் காத்து, இருவரும் இணைந்து இல்லறக் கடமையாற்ற வேண்டுமென்றும், அவர்களைச் சார்ந்தோருக்கும் புகழைச் சேர்க்க வேண்டும் என்றும் கூறி, மலர்களைத் தூவி வாழ்த்திய செய்தியை அகநானூறு,

கற்பினின் வழா அ நற்பல உதவிப்
பெற்றோர் பெட்கும் பிணையை ஆக ; என
நீரொடு சொரிந்த ஈர் இதழ் அலரி
பேர் இல் கிழத்தி ஆக என . . . . .[170]

என்று பாடியுள்ளது.

ஆண்டாளின் திருமணத்தில், மற்றவர் வாழ்த்தியது போன்று கூறப்படவில்லையாயினும், திருமணம் முடிந்தவுடன் ஒரு பெண் கணவனையே புகலாகக் கொண்டு, அவனுடன் இணைந்து இல்லறம் நடத்த வேண்டுமென்ற நெறியின்கண் இப்பிறவிக்கும், மேலுள்ள பிறவிகள் எல்லாவற்றிலும் புகலாய் இருக்கக் கூடியவன் தலைவனே என்பதாக ஆண்டாள் நாச்சியார் தன் தலைவனைச் சிறப்பித்துப் பரிபூரணன் எனக் கருதும் கண்ணபிரானைச் சுட்டுகின்றாள்.

இம்மைக்கும் ஏழ்ஏழ் பிறவிக்கும் பற்றாவான்
நம்மை உடையவன் நாராயணன் நம்பி. . .[171]

எனக் கூறும் பாசுர அடிகளில், அகநானூற்றில் வரும் மணவாழ்த்துச் செய்தியின் கருத்துப் புலப்படுத்தப்படுவதாகக் கூறமுடிகின்றது.

**தலைவி கூடலிழைத்தல்**

தலைவன் தலைவியை விட்டு ஏதேனும் காரணம் கருதிப் பிரிந்திருக்கிறான். தலைவன் தலைவியைக் காண விரைவில் வந்து சேரவேண்டு மென்ற நினைவில், தலைவியானவள் வாடி வருந்தி இருக்கிறாள். தலைவன் எப்பொழுது வருவான்? விரைவில் வந்து விடுவானா? என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆவலில், மணலில் பல வட்டங்களை வரைவாள். அவ்வாறு வரையும் வட்டங்கள் அமையும் எண்ணிக்கையைக் கொண்டு, தலைவன் விரைவில் வந்து தலைவியைக் கூடுவான் அல்லது இன்னும் காத்திருக்க வேண்டும் என்று முடிவுக்கு வரும் இது, ஒரு நிமித்தமாகக் கொள்ளப்படும். இதுவே 'கூடலிழைத்தல்' என்பதாகும்.

கூடலிழைத்தல் என்ற செயலைச்செய்து அக்கோடுகளை எண்ணிப்பார்த்து வருந்தியிருக்கும் தலைவியை அகநானூறு,

செய்குறி ஆழி வைகல் தோறு, எண்ணி
எழுது சுவர் நினைந்த அழுதுவார் மழைக்கண்
விலங்கு வீழ் அரிப்பளி பொலங்குழைத் தெறிப்ப[172]

என்று கூறுகிறது.

தலைவி வட்டம் போட்டுப் பார்ப்பது, சுவற்றில் இட்டு எண்ணிக் குறிபார்க்கும் வட்டங்களைத் தினம்தோறும் எண்ணி, வட்டமிட்ட அச்சுவர் நனையும்படி அழுது நீண்ட கண்களில் இருந்து கண்ணீர் வெளிப்பட வருந்தியிருப்பது, என்பனவற்றைத் தெரிவிக்கின்றது.

பலரும் கூடி, கண்ணனை மீண்டும் காணவேண்டுமெனக் கூடலிழைக்கின்றனர். பூமியில் ஒரு வட்டத்தை எழுதி, அதற்குள் சுழிச்சுழியாக எண்ணாமல் சுழிகளைக் கீறி இரண்டிரண்டு சுழிகளாக எண்ணிக் கணக்கிட்டு இரட்டைப் படையாக வந்தால் நினைத்த காரியம் விரைவில் கைகூடும் என்றும், ஒற்றைப்படையாக வந்தால் கைகூடாது என்றும் கொண்டனர் என்பதை நாச்சியார் திருமொழி,

பூமகன் புகழ்வானவர் போற்றுதற்கு
ஆமகன் அணி வாணுதல் தேவகி
மாமகன் மிகுசீர் வாசுதேவர் தம்
கோமகன் வரில் கூடிடு வடலே[173]

என்ற அடிகளின் மூலம் சுட்டுகிறது. இதனைக் கொண்டு நீண்ட நெடுங்காலமாக – அதாவது சங்ககாலம் முதல் இருந்த இவ்வழக்கம், பக்திகாலம் வரையிலும் தொடர்ந்துள்ளதாகக் கூறமுடிகிறது.

**தூது அனுப்புதல்**

முரண்பட்ட இரு வேந்தரிடையேயிருந்த முரணைப் போக்கி, அவர்களைச் சந்து செய்விக்க, அறிவிலும் பிறவற்றிலும் சிறந்தாரைத் தூதுரைக்க அனுப்புதல் பண்டு இருந்து வந்த அரச மாண்பாடும்.

காதலர் இருவர் தனது அன்பினை வெளிப்படுத்தும் வகையில் உயர்திணை மாந்தரையோ, அன்றி அஃறிணை இனங்கள் மற்றும் பொருள்களையோ தூதாக அனுப்புதல் சங்ககால அகத்திணை மரபாகும். இம்மரபுடைய சங்கப்பாடல்கள் பல உண்டு. புறநானூறு மூலம் 'சிறு வெள்ளாங்குருகை'த் தூது அனுப்புவதையும், பிசிராந்தையார் 'அன்னச்சேவலை'த் தூதாக விடுவதையும் அறியமுடிகிறது. உயிர் நண்பனாகவுள்ள கோப்பெருஞ் சோழனுக்கும் தனக்குமுள்ள உறவைப்

*புலப்படுத்துமளவில், ஆண் அன்னத்தின் துணையாக இருக்கக்கூடிய பெண் அன்னம் விரும்பும் அணிகலன்களை, அந்த அன்னச் சேவலுக்குத் தருவதாகக் கூறி அதனைத் தூதாக விடுக்கும் பிசிராந்தையாரின் புனைவு புறநானூற்றில்,*

அன்னச் சேவல்! அன்னச் சேவல்!

ஆடுகொள் வென்றி அடுபோர் அண்ணல்[174]

*என்ற பாடலடிகளின் மூலம் சிறப்பாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.*

*ஆர்வார்களின் பாடல்களில் வண்டு, நாரை, கிளி, குயில், காக்கை போன்றனவும் பிறவும், பிரிவாற்றாத நிலையில், தூது உரைப்பனவாகப் புனைவு உண்டு. இப்புனைவு, சங்கப்பாடல்களை நினைவூட்டுவதாக உள்ளது.*

*திருவாலி இறைவன் மீது ஆழ்வாரின் உள்ளம் புகுந்து அனுபவிக்கும் எண்ணம்வர, ஆனால் இவர் பேசியதற்கு மறுமொழி கூறாததால், மனம் துன்பப்படுகிறது. எனவே, அவனைத் தன்னிடம் கூவியழைக்க வேண்டுமென்று கூறுவது சிறப்பாகவுள்ளது. இம்மரபில் புதிய இலக்கிய வடிவம் அமைவதையும் காணமுடிகிறது. மேலும், தூது அனுப்பிய துயரில், நாயகன் தன்னிடம் வந்து சேர வேண்டிக் கூவவேண்டும் என்று விளித்து,*

திருத்தாய் செம்போத்தே திருமாமகள் தன் கணவன்

மருத்தார் தொல்புகழ் மாவனை வரத் திருத்தாய் செம்போத்தே[175]

*என்று பாடப்பட்டுள்ளது. செம்போத்து என்ற பறவை வலம் வருமானால் மகிழ்ச்சிக்குரிய நிகழ்வு நடக்கும் என்ற அடிப்படையில் அதனை வலம் வரச் சொல்வதாக இப்பகுதி அமைந்திருப்பதைக் காணமுடிகிறது.*

*வண்டினைத் தூது விடுக்கும் பாங்கினைத் திருநெடுந்தாண்டகம்,*

பூ மருவி இனிது அமர்ந்து பொறியில் ஆர்ந்த

அறுகால சிறு வண்டே! தொழுதேன் உன்னை[176]

*என்றும்,*

செங்கால் மடநாராய்! இன்றே சென்று

திருக்கண்ணபுரம் புக்கு என் செங்கண் மாலுக்கு

என் காதல் என் துணைவர்க்கு உரைத்தியாகில்[177]

என்றும் பாடி, நாரையினைத் தூது விடும் அக இலக்கிய மரபினைச் சிறப்பாகப் பின்பற்றியுள்ளது எனக் கூற முடிகிறது.

**முடிவுரை**

தலைவன் தலைவியரின் அகம் சார்ந்த ஒழுகலாறுகள் தொல்காப்பியரால் இலக்கணப்படுத்தப்பட்டன. அவ்வாறு இலக்கணப் படுத்தப்பட்ட அகத்திணைக் கூறுகளைச் சங்கப் புலவர்கள் உரியவாறு பாடி, அவ்விலக்கணம் காத்தனர் எனலாம். அகத்திணைக் கூறுகள் சங்கப் புலவர்களால் எடுத்துரைக்கப்பட்ட விதம், பிற்கால வைணவ ஆழ்வார்களைக் கவர்ந்தது. ஆதலால், அவற்றைத் தத்தம் பாசுரங்களில் பாடிச் சிறப்பித்தனர் எனக் கூறமுடிகிறது.

ஆழ்வார்ப் பாசுரங்களில் கிளவித் தலைவன் தலைவியரின் பெயர் சுட்டா மரபு மாற்றப்பட்டதற்குக் காரணம், பாடப்படும் தலைவன் இறைவனான திருமால் என்ற வெளிப்படைத் தன்மையே என்பது வெளிப்படுகிறது. சங்ககால அகத்திணைக் காதல், வைணவ பக்திக் காலத்தில் பக்திக் காதலாக மாற்றப்பட்டுப் பாசுரங்கள் படைக்கப்பட்டன. சிற்றின்பம் எனப் பேசப்படும் அகத்திணை நிகழ்வுகள் பக்தியுடன் பாடப்படும்பொழுது அவை பேரின்பத்திற்கு வழிவகுக்கும் என ஆழ்வார்கள் நம்பியமை தெரியவருகின்றது.

ஐவகைத் திணைகளின் முதல், கரு, உரிப்பொருட்கள் என்பன அகத்திணைப் பாடல்களுக்கு அடிப்படையாகவும் சுவையுடையதாகவும் இருந்ததைச் சங்ககாலப் பாடல்களின்வழிப் படித்தறிந்த ஆழ்வார்கள், அதே நெறியில் தமது பாசுரங்களையும் யாத்தனர் எனக் கூறமுடிகிறது. சிறுபொழுதான அந்திமாலை, கருப்பொருள்களுள் அடங்கும் முல்லைப் பண், முல்லை மலர், ஆநிரை, ஆயர் என்பன போன்றவை திருமால் வழிபாட்டுடன் சிறப்பாகத் தொடர்புபடுத்தப்பட்டுப் பாசுரங்கள் இயற்றப்பட்டமை புலனாகிறது.

ஐவகைத் திணையொழுக்கங்களைப் பாடும் முறையைச் சங்கப் பாடல்களை அடியொற்றி ஆழ்வார்கள் பாசுரம் பாடியமையைப் பல பாசுரங்களால் உறுதிபடுத்த முடிகின்றது. இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு உள்ளிட்ட அகத்திணைக் கூறுகளைச் சிறப்பாகப் பாடுவதற்குச் சங்கப்பாடல்களே ஆழ்வார்களுக்கு உதவின எனவும் கூறமுடிகின்றது.

திருமால் மீதான பக்தியை வளர்க்கும் உத்தியை எண்ணிய ஆழ்வார்கள், பக்தர்களையும் திருமாலையும் பாசுரக் கருத்துகளால் ஒருங்கிணைக்கும் வகையில், நாயகன் - நாயகி பாவனையில் பாடினர். அதற்குச் சங்க இலக்கியத் தலைவனும், தலைவியும் அடிப்படையாயினர் எனவும் கூறமுடிகின்றது. இதற்குச் சான்றாக ‘மடலேறுதல்’ என்பதைக் கூறலாம்.

எல்லா உயிரினங்களுக்கும் பொதுவான ‘அன்பு’ என்பதை, இறையடியார்களுக்குப் பொதுவாக இருக்க வேண்டிய ‘பக்தி’ என்பதாக மாற்றிப் பாசுரம் படைப்பதற்குச் சங்கப்பாடல்களே உரிய தாக்கத்தை ஏற்படுத்தின எனவும் கூறமுடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1. **தொல்., பொருள்.**, *நூ.27.*
2. **திருவாய்.**, *பாசு.3104.*
3. **சிலம்பு.***11:62-66.*
4. **திருவாய்.,** *பாசு.2503.*
5. **அகம்.**, *பா.4.*
6. **பெரியாழ்.தி.மொ.**, *பாசு.255.*
7. **பெரிய திருமொழி**, *பாசு.1153.*
8. மேலது., *பாசு.1161.*
9. **அகம்.**, *பா.218.*
10. **குறுந்.**, *பா.3.*
11. **பெரிய திருமொழி**, *பாசு.1049.*
12. **திருப்பள்ளியெழுச்சி**, *பாசு.917.*
13. **பெரிய திருமொழி**, *பாசு.1008.*
14. **மலைபடு.**, *அ.359.*
15. **திருவாய்.**, *பாசு.3645.*
16. **அகம்.**, *பா.286:5-7.*
17. **பெரிய திருமொழி**, *பாசு.1534.*
18. மேலது., *பாசு.1180.*
19. **திருப்பள்ளியெழுச்சி**, *பாசு.918.*
20. **மதுரைக்.**, *அ.656.*
21. **திருவாய்.**, *பாசு.3502.*
22. **அகம்.**, *பா.40.*
23. **பெரிய திருமொழி**, *பாசு.1768.*
24. மேலது., *பாசு.1778.*
25. **தொல்.**, *நூ.27.*
26. மேலது., *28.*
27. **புறம்.**, *நூ.305.*

28. **பெரிய திருமொழி**, *பாசு.1706.*

29. மேலது., *பாசு.1145.*

30. **நற்றி.**, *பா.308.*

31. **திருவிருத்தம்**, *பாசு.2485.*

32. **தொல்., பொருள்., கற்.,** *நூ.6.*

33. **தொல்., பொருள்.,** *நூ.7.*

34. **தொல்., பொருள்., பொருளியல்,** *நூ.8.*

35. **பெரிய திருமொழி**, *பாசு.1594.*

36. மேலது., *பாசு.1596.*

37. **ஐங்.**, *பா.136.*

38. **பெரிய திருமொழி,** *பாசு.1439.*

39. **ஐங்.**, *பா.391.*

40. **பெரிய திருமொழி**, *பாசு.1943.*

41. **அகம்.**, *பா.9.*

42. மேலது., *பா.289.*

43. **பெரிய திருமொழி**, *பாசு.1945.*

44. **கலித்.**, *பா.9.*

45. **பெரியாழ்., தி.மொ.**, *பாசு.294.*

46. **நற்றி.**, *பா.235.*

47. **அகம்.**, *பா.235.*

48. **திருவிருத்தம்**, *பாசு.2481.*

49. மேலது., *பாசு.2483.*

50. **கலித்.**, *பா.127:16.*

51. **திருவாய்.,** *பாசு., 3689.*

52. **கலித்.**, *பா.27:9.*

53. **திருவாய்.**, *பாசு.3689,*

54. **குறுந்.**, *பா.225.*

55. **புறம்.**, *பா.113.*

56. **கலித்.**, *பா.87:1.*

57. மேலது., *பா.89:1.*

58. **திருவாய்.,** *பாசு.3693.*

59. கலித்., பா.123:1-8.

60. சிறிய திருமடல், வரி.78.

61. மேலது., 56-58.

62. கலித்., பா.138:21-23.

63. சிறிய திருமடல்., 2673.

64. ஐங்., பா.422.

65. பரி., பா.10:10.

66. கலித்., பா.96:15.

67. திருவிருத்தம், பாசு.2524.

68. கலித்., பா.142.

69. ஐங்., பா.423.

70. கலித்., பா.7.

71. பெரிய திருமொழி, பாசு.1934.

72. மேலது., பாசு.1935.

73. கலித்., பா.51.

74. திருவாய்., பாசு.3733.

75. குறுந்., பா.4.

76. பெரிய திருமொழி, பாசு., 1126.

77. நற்றி., பா.14.

78. பெரிய திருமொழி, பாசு.1992.

79. தொல்., நூ.112.

80. அகம்., பா.220.

81. பெரியாழ்.தி.மொ., பாசு.290.

82. தொல்., கற்., நூ.5.

83. மேலது., 158.

84. கலித்., பா.66.

85. பெரிய திருமொழி, பாசு.1922.

86. மேலது., பா.1932.

87. பெரியாழ்.தி.மொ., பாசு.286.

88. அகம்., பா.360.

89. பெருமாள் தி.மொ., பாசு.698.

90. **கலித்.**, *பா.117.*

91. **பெரிய திருமொழி**, *பாசு.1284.*

92. **நாச்சி.தி.மொ.**, *பாசு.583.*

93. **அகம்.**, *பா.190.*

94. **பெரியாழ்.தி.மொ.**, *பாசு.258.*

95. **நாச்சி.தி.மொ.**, *பாசு.508.*

96. **அகம்.**, *பா.49.*

97. **பெரியாழ்.தி.மொ.**, *பாசு.297.*

98. மேலது., *பாசு.300.*

99. **குறுந்.**, *பா.2.*

100. **அகம்.**, *பா.78.*

101. **திருவிருத்தம்**, *பாசு.2532.*

102. **ஐங்.**, *பா.461.*

103. **பெரிய திருமொழி**, *பாசு.1286.*

104. **அகம்.**, *பா.98.*

105. **திருவிருத்தம்**, *பாசு.2558.*

106. மேலது., *பாசு.2497.*

107. **அகம்.**, *பா.260.*

108. **திருவிருத்தம்**, *பாசு.2560.*

109. **குறுந்.**, *பா.31.*

110. **திருவிருத்தம்**, *பாசு.2561.*

111. **நற்றி.**, *பா.247.*

112. **கலித்.**, *பா.130.*

113. **திருவாய்.**, *பாசு.3062.*

114. மேலது., *பாசு.3063.*

115. **நற்றி.**, *பா.87.*

116. **நாச்சி.தி.மொ.**, *பாசு.561.*

117. முனைவர் ச.சுப்புரெத்தினம், **தொல். பொருள். உரை, அகத்.**, *நூ.39.*

118. **திருவாய்.**, *பாசு.3295.*

119. **கலித்.**, *பா.123.*

120. **திருவிருத்தம்**, *பாசு.2523.*

121. **ஐங்.**, *பா.183.*
122. **திருவிருத்தம்**, *பாசு.2546.*
123. **கலித்.**, *பா.89.*
124. **பெருமாள் தி.மொ.**, *பாசு.689.*
125. **குறுந்.**, *பா.49.*
126. **திருவாய்.**, *பாசு.3335.*
127. **திருப்பாவை**, *பாசு.502.*
128. **நாச்சி.தி.மொ.**, *பாசு.563.*
129. **கலித்.**, *பா.16:19-20.*
130. **திருப்பாவை**, *பாசு.477.*
131. **நற்றி.**, *பா.58.*
132. **மூன்.திருவந்.**, *பாசு.2297.*
133. **தொல்., பொருள்., அகத்.,** *நூ.38.*
134. **குறள்.***1137.*
135. **கலித்.**, *பா.61.*
136. **பன்னிருபாட்டியல் இனவியல்**, *நூ.63.*
137. **குறுந்.**, *பா.14.*
138. மேலது., *பா.17.*
139. மேலது., *பா.32.*
140. **கலித்.**, *பா.61:20-24.*
141. **நற்றி.**, *பா.146.*
142. **சிறிய திருமடல்,** *அ.77.*
143. **பெரிய திருமடல்**, *அ.148.*
144. மேலது., *அடி.38-39.*
145. **தொல்., கற்.**, *நூ.140.*
146. **கலித்.**, *பா.101:36-38.*
147. **பெரிய திருமொழி**, *பாசு.1247.*
148. **தொல்., பொரு.**, *நூ.143.*
149. **அகம்.**, *பா.2.*
150. **நாச்சி.தி.மொ.**, *பாசு.558.*

151. **அகம்.**, பா.86:3-4.
152. **நாச்சி.தி.மொ.**, பாசு.556.
153. மேலது., பாசு.557.
154. **அகம்.**, பா.86:5-6.
155. மேலது., பா.86:11-12.
156. **நாச்சி.தி.மொ.**, பாசு.560.
157. **அகம்.**, பா.136:6-8.
158. **நாச்சி.தி.மொ.**, பாசு.559.
159. **அகம்.**, பா.136:10-14.
160. **நாச்சி.தி.மொ.**, பாசு.559:3-4.
161. **அகம்.**, பா.136:15.
162. **நாச்சி.தி.மொ.**, பாசு.558:3-4.
163. **கலித்.**, பா.69:5.
164. **நாச்சி.தி.மொ.**, பாசு.562.
165. **அகம்.**, பா.136:17.
166. **நற்றி.**, பா.46:5.
167. **அகம்.**, பா.7.
168. **புறம்.**, பா.127:5.
169. **பெரியாழ்.தி.மொ.**, பாசு.172.
170. **அகம்.**, பா.86:13-18.
171. **நாச்சி.தி.மொ.**, பாசு.563.
172. அகம்., பா.351:10-12.
173. **நாச்சி.தி.மொ.**, பாசு.536.
174. **புறம்.**, **பா.67.**
175. **பெரிய திருமொழி,** பாசு.1942.
176. **திரு.நெடுந்.,** பாசு.2077.
177. மேலது., பாசு.2078.

# இயல் 3

# புறத்திணைக் கூறுகள்

**முன்னுரை**

காலந்தோறும் தோன்றிய இலக்கியங்கள் அந்தந்தக் காலகட்டத்திலுள்ள மனித சமுதாயத்தின் வாழ்வினை விளக்குவனவாக அமைகின்றன. பழந்தமிழரின் வாழ்வானது, அகவாழ்வு, புறவாழ்வு என்பதாக இலக்கியங்களால் பாகுபடுத்திப் பார்க்கப்பட்டது.

அகமல்லாத, புறம் சார்ந்த வாழ்வின் திறத்தினைக் கூறுவது புறத்திணையாயிற்று. தொல்காப்பியப் புறத்திணையியலில் போர், போர் செய்வதற்கான காரணங்கள், போர் செய்யும் முறைகள், அரசரைப் போற்றுதல், போரில் வெற்றிபெறுதல், எனப்போர் சார்ந்த துறைகள் குறிக்கப்பெற்றுள்ளன. நிலையாமைக் கருத்தும், வீரத்தையுணர்த்தும் பாடாண்திணையும் இவற்றுள் அடங்கும்.

போர் என்பதும் வாழ்வின் ஓர் அங்கமாகும். போர்த் தொடர்பான செயல்கள் யாவும் ஓர் வரையறையுடன் நடைபெற்றதைத் தெளிவாகக் காட்டுவது தொல்காப்பியமாகும்.

புறத்தொழுக்கம் பற்றிய செய்திகளைத் தொல்காப்பியம் ஏழு திணைகளாகக் கூறுகிறது; புறப்பொருள் வெண்பாமாலை பன்னிரண்டாகக் காட்டுகிறது.

போர்க்களமானது பாதுகாப்பு, பகை, தண்டனை, மறம், அருள் என்ற ஆறுவகையின் அடிப்படையில் பிறக்குமென்பர். போரில் ஈடுபட்ட மறவர் எக்காரணம் கொண்டும் புறமுதுகிடாதவாறு போரிட்டமையினை,

உளப்பட ஓடா உடல் வேந்த டுக்கிய உன்ன நிலை[1]

என்று கூறுகின்றனர். போரிடும் வீரன் அல்லது அரசன் போன்றோர் வெற்றி பெற்றவுடன் அந்த மகிழ்வினைக் கொண்டாடுவர். மகிழ்ச்சியுடன்

உண்டுகளித்தலும், மற்றவர்களுக்குப் பொருட்களைத் தானமாகக் கொடுத்தலும், வெற்றிக்களிப்பினால் ஆடிப்பாடி மகிழ்தலும் என்பனவற்றை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

இதனையடியொற்றிய நிலையில், ஆழ்வாரின் பாடல்களைப் புறத்திணை நோக்கில் ஒப்பிட்டுப் பார்க்க முடிகிறது. மன்னன் தன் குடிமக்களைப் பாதுகாப்பது போலத் திருமாலாகிய இறைவன், தனது பக்தர்களைத் துன்பங்களிலிருந்து பாதுகாக்கிறான் எனப் பாசுரங்கள் பாடுகின்றன.

புற இலக்கியங்களில் புறத்திணை, புறத்துறைகள் என்பன குறித்த விளக்கங்கள் உள்ளன. பக்தியிலக்கியமாகிய ஆழ்வார்ப் பாசுரங்களில் திணையும், துறையும் தனித்தனியே வகுக்கப்படவில்லை. எனவே, அவற்றில் காணலாகும் புறத்திணைக் கூறுகளைச் சங்க இலக்கிய நோக்கில் இவ்வியல் ஆராய முனைகிறது.

### ஆநிரைகளைக் காத்தல்

ஆயர்களின் வாழ்க்கையைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் ஒன்றான நெடுநல்வாடை விரிவாகக் கூறுகின்றது. மழை வெள்ளத்தின் காரணமாக இடையர்கள் துன்புறுகின்றனர். ஆநிரைகளை மழையின் துயரிலிருந்து விடுவிப்பதற்காக அவர்கள் இடம்பெயர்ந்து செல்கின்றனர். அவ்வாறு செல்லும் பொழுது, தாமிருந்த இடத்தைப் பிரிந்து செல்வதால் துன்புறுவரென்பதையும் அவ்விலக்கியம் கூறுகிறது. இவ்வாறு மேய்ச்சலுக்கு உரியதாயிருந்த இப்புல்வெளிப்பகுதியில் இந்நிகழ்வு தொடர்ந்து நடைபெறுமாற்றையும் நெடுநல்வாடை,

ஆர்கலி முனைஇய கொடுங்கோல் கோவலர்
ஏறுடை யினநிரை வேறுபுலம் பரப்பில்
புலம் பெயர் புலம் பொடு கலங்கி[2]

என்ற இப்பாடலடிகளின்வழிச் சுட்டுகிறது.

*மழை வெள்ளப் பெருக்கில் துன்புற்றுத் தங்கியிருக்கும் ஆயர்கள், அவர்களது இருப்பிடத்திலேயே இருக்குமாறு செய்து கண்ணபிரான் காத்தான் என்று ஆழ்வார்களின் பாசுரங்கள் குறிப்பிடுகின்றன. பெரியாழ்வார்,*

அம்மைத் தடங்கண் மட ஆய்ச்சியரும்
ஆனாயரும், ஆநிரையும் அலறி
எம்மைச் சரண் என்று கொள் இரப்ப
இலங்கு ஆழிக் கை எந்தை எடுத்த மலை[3]

*என்றும்,*

மழை வந்து ஏழு நாள் பெய்து மாத்தடுப்ப
மது சூதன் எடுத்து மறித்தமலை
இழவு தரியாதது ஓர் ஈற்றுப்பிடி[4]

*என்றும் பாடும் அடிகளானவை, ஏழு நாட்கள் இடைவிடாது மழையிலிருந்து தம்மைக் காக்குமாறு ஆய்ச்சியரும், பசுக்கூட்டங்களும் கண்ணனை வேண்டினர் எனக் கூறுகின்றன.*

*கண்ணன் உடனே அனைவரும் அவ்விடம் விட்டு வெளியேறாதபடித் தடுத்து, அங்கேயே உடனே காப்பதற்காக, அடி மண்ணோடு கிளப்பி மலையைத் தலைகீழாகப் பிடித்துக் காத்தான். அந்த மலை, 'கோவர்த்தனம்' என்னும் 'கொற்றக் குடையே' என ஆழ்வார்களால் பாடப்பெற்றது.*

**பாதீடு**

*'பாதீடு' என்ற துறையானது, தமது வெற்றிக்குப் பின் மறவர்கள் தங்களுக்குக் கிடைத்தவற்றை அனைவருக்கும் பங்கிட்டுக் கொடுக்கும் நிகழ்வினைக் குறிப்பதாகும். இக்கொடைப் பண்பினை,*

ஒள் வாள் மலைந்தார்க்கும் ஒற்றாய்ந் துரைத்தார்க்கும்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் - விள்வாரை
மாறட்ட வென்றி மறவர் தஞ் சிறூரில்
கூறிட்டார் கொண்ட நிறை[5]

*என்ற புறப்பொருள் வெண்பாமாலை அடிகளின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. இத்தகைய கொடைப் பண்புடைய திருமால் எடுத்த இராமாவதாரக் காட்சியைப் பாடிய ஆழ்வார்கள், அணையைக்கட்டி*

இராமபிரான் இலங்கையையடைந்தான். இராவணனின் பத்துத் தலைகளையும் அம்பினால் அறுத்து வீழச்செய்தான் அந்த இலங்கையரசினை இராவணனின் தம்பியான வீடணனுக்கு அளித்தான் என்பன போன்ற செய்திகளைத் திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழி,

கம்பமா கடல் அடைந்து இலங்கைக்கு மன்
கதிர்முடி - அவைபத்தும்
அம்பினால் அறுத்து அரசு அவன் தம்பிக்கு
அளித்தவன் உறை கோயில்[6]

என்றும், பெரியாழ்வரின் பாசுரமானது,

தென் இலங்கை மன்னன் சிரம் தோள் துணி செய்து
மின் இலங்கு பூண் விபீடணன் நம்பிக்கு
என் இலங்கு நாமத்து அளவும் அரசு[7]

என்றும் பாடுவதை இத்துறையைச் சார்ந்ததாகக் கொள்ள முடிகிறது. இவ்வாறு கொள்வது, பக்திப் பாசுரங்கள் என்ற நிலையில் பொருத்தமுடையது எனலாம்.

**உண்டாட்டு**

வெட்சி மறவர் வெற்றியால் கள்ளுண்டு களித்தாடுவதை, ‘உண்டாட்டு’ என்ற துறையாகக் கூறுகிறது தொல்காப்பியம்.

புறநானூறு, வெட்சி மறவர் தாம் கொண்டு வந்த பசுக்களை கள் விலைக்குத் தந்து, கள்ளைப்பருகி, வளமான ஊனைத் தின்று மகிழ்ந்து கொண்டாடினர் என்கிறது. இது,

முட்கால் காரை முதுபழன் ஏய்ப்பத்
தெறிப்ப விளைந்த தீம்கந்தாரம்
நிறுத்த ஆயம் தலைச் சென்று உண்டு
பச்சூன் தின்று பைந் நிணம் பெருத்த[8]

என்ற பாடலடிகளில் வெளிப்படுகின்றது.

ஆழ்வார்ப் பாசுரமொன்றில், போரில் தோற்ற வீரர்கள் தங்களுக்குப் பாதுகாப்பு வேண்டித் தலைவனின் புகழைப் பாடிக்களித்தவாறு ஆடியதாகக் குறிப்புள்ளது.

இராம - இராவணப் போரினை மையமாகக் கொண்டு பாடப்பட்ட இரண்டு பாசுரங்கள் திவ்ய பிரபந்தத்தில் உள்ளன. 'பொங்கத்தம் பொங்கோ' என்றும், 'குழாமணித் தூரமே' என்றும் முடியுமாறு இவற்றைத் திருமங்கையழ்வார் பாடியுள்ளார்.

போரில் வென்றவர் ஆடிப்பாடுதலானது உலக நியதியாகும். 'அறையோ அறை', 'நாவலோ நாவல்' என்பன வீரவாதம் செய்வோரின் கூற்றுக்கள் என்பர்.[9] அத்தகைய நிலையிலானவை பாசுரங்களில்,

வலியீர் உள்ளீரேல்
அறையோ வந்து வாங்குமின்[10]

என்றும்,

ஐயோ! கண்ணபிரான்
அறையோ இனில் போனாலே[11]

என்றும் வந்துள்ளன. 'அறையோ அறை' என்பது வென்றவர் சொல்லும் சொல் ஆகும். திருமங்கையாழ்வாரின் பாடல்கள் இவ்வாறு அறைகூவும் முறையில் அமையாது, போர்க்களப்பாடலாக அன்றியும், போருடன் தொடர்புடைய பாடலாகவும் கருதலாம் என்பர்.[12]

போரில் தோற்ற அரக்கர்கள், குரங்கினத் தலைவர்களையும், இராம இலக்குவர்களையும் தங்களுக்கு உயிர்பிச்சையளிக்குமாறு வேண்டுகின்றனர். அரக்கரினத்தில் வெற்றி பற்றிப் பேசுவார் ஒருவருமில்லை. எனவே, 'எங்கள் உயிருக்கு அஞ்சினோம்', 'தடம் பொங்கத்தம் பொங்கோ' என்று வாயினால் ஒலியெழுப்பிப் பறை ஒலிப்பது போன்று பாடுவதான,

இரக்கமின்ற எங்கோன் செய்த தீமை
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
அரக்கர் ஆடு அழைப்பார் இல்லை நாங்கள்
அஞ்சினோம் - தடம் பொங்கத்தம் பொங்கோ[13]

என்ற பாசுரம் திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டுள்ளது.

சங்ககாலப் புற இலக்கியங்களில் வெற்றி பெற்ற வீரர்கள் கள்ளுண்டு களித்தாடுவது குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால், தோற்ற வீரர்கள், "எங்களின் செருக்கையும் விட்டோம்" எனவே, "எங்களுக்கு வாழ்நாளினைக் கொடுங்கள்" என்று இரங்கிப் பாடிக் கூத்தாடுவதாக ஆழ்வார்ப் பாசுரங்களில் புனையப்பட்டுள்ளது.

**நெடுமொழி**

நெடுமொழி என்பதைத் 'தன் மேம்பாட்டுரை' என்றும், 'வஞ்சினம்' என்றும் குறிப்பிடுவர். வீரனொருவன் தான் 'பகைவரை வென்று, வெற்றிக்கு வித்தாகிப் பெருமையடைவேன்' என உறுதிபெறக் கூறும் சொல் நெடுமொழியாகும்.

தனி ஒருவனாக இருந்து பகைவரை வென்று 'தனிவீரன்' அவன் ஒருவனே என்று அவனது ஆற்றலைப் புகழுமாறு பாண்டிய மன்னனைப் பெரும்பாணாற்றுப்படை போற்றுகிறது.

பாண்டிய மன்னன் போர்ப் பாசறையில் இரவில் உறக்கம் கொள்ளாது, வீரர்கள் சூழ விழுப்புண் பட்டோரைக் கண்டு ஆறுதல் கூறுவான். இவன் ஒருவனாக நின்று, பலரொடும் மாறுபட்டுப் போரிடும் திறமைமிக்கவன் என்று சிறப்பிக்கப்பட்டுள்ளான். அத்தகைய சிறப்பினைப் பெரும்பாணாற்றுப்படை,

பலரொடு முரணிய பாசறைத் தொழில்[14]

எனப் புகழ்ந்து பாடுகின்றது.

பகைவரின் அணுகுதற்கரிய மதிலினை முற்றுகையிட்டுப் போரிட முந்திச் செல்லுமாறு அரசனொருவன் தனது வீரனை ஏவி, வஞ்சினம் கூறுவதாக வரும்,

எமக்கே கலங்கல் தருமே; தானே
தேறல் உண்ணும் மன்னே; நன்றும்
இன்னான் மன்ற வேந்தே இனியே

நேரார் ஆர் எயில் முற்றி

வாய் மடிந்து உரறி ‘நீ முந்து’ என்னானே[15]

*என்ற பாடலொன்று புறநானூற்றிலுள்ளது.*

*இக்கருத்தினை யொட்டிய நிலையில், திருக்குடந்தையில் எழுந்தருளிய கண்ணபிரானைத் திருமழிசையாழ்வார் ‘தனிவீரன்’ என்பதாகச் சுட்டுகிறார். அவன் கால நேமி, தந்த விக்கிரன், முரன் என்ற இம்மூவரின் தலைகளையெல்லாம் எமலோகம் போய்ச் சேரும்படி வில்லை வளைத்த அழகிய திருக்கையையுடைய தனிவீரனாவான் என்ற கருத்தில்,*

. . . . . குடந்தை மேய கோவலா

காலநேமி வக்கிரன் கரன் முரன் சிரம்மவை

காலனோடு கூட வில் குனித்த வில்கை வீரனே[16]

*எனப் பாடுகிறார் திருமழிசையாழ்வார். இப்பாடலடிகளின் வழியே, ‘நெடுமொழி கூறல்’ என்ற சங்ககாலப் போர்த்துறையினை அறிந்து அதனை இவ்வாழ்வார் தனது பாசுரத்தில் வெளிப்படுத்தியுள்ளார் எனக் கூறமுடிகிறது.*

**வேத்தியல்**

*‘வேத்தியல்’ என்ற துறையானது, மன்னரைப் புகழ்வதுடன் வீரனின் மேம்பாடுகளையும் கூறுவது எனலாம். இது புறநானூற்றில்,*

தூவெள் அறுவை மாயோற் குறுகி

இரும்புள் பூசல் ஓம்புமின்; யானும்

விளரிக் கொட்பின் வெள்நரி கடிகு வென்

என்போல் பெருவிதுப் புறுக, வேந்தே

கொன்னும் சாதல் வெய்யோற்கு

மணிமருள் மாலை சூட்டி அவன் தலை

ஒரு காழ் மாலை தான் மலைந் தனனே![17]

*என்று காட்டப்படுகிறது. அரச வீரன், தான் செய்யும் செயல்பாடுகளை வேந்தனின் புகழுக்குக் காரணமாக அமையும் பொருட்டுச் செயல்படுகிறான் என்பதையும், வேந்தனுக்காக உயிரைத் தர விரும்பிய தலைவனுக்கு, அரசன் தன் மார்பிலிருந்த மணிமாலையைத் தலைவனுக்குச் சூட்டி, தலைவன் அணிந்திருந்த ஒற்றை மாலையைத் தான் அணிந்து கொண்டான் என்றும்*

அப்பாடல் கூறுகிறது. வேந்தன் மறத்தலைவனைத் தனக்குச் சமமாக மட்டுமின்றி, மேலும் உயர்வானவன் என்றும் சிறப்பிக்குமுகமாகக் காட்டப்படுகிறது.

ஆழ்வார்ப் பாசுரங்கள் முழுவதும் இறைவனின் புகழ்பாடுதலாக, தேவாதிராஜனான குணங்களைப் போற்றிப் பாடுகிறது. இதனைத் திருமங்கையாழ்வார்,

தீ மனத்து அரக்கர் திறல் அழித்தவனே!
என்று சென்று அடைந்தவர் - தமக்கு
தாய் மனத்து இரங்கி அருளினைக் கொடுக்கும்
தயரதன் மதலை[18]

என்று தீய மனமுடைய அரக்கர்களின் வலிமையை அழித்து, தன்னை வந்து சரணடைந்தாரைத் தாய்போல மனமிரங்கி அருள் செய்பவனான இராமன் என்று அவனது மறக்கருணையுடன் தாய்க் கருணையும் போற்றப்படுவதை அறிய முடிகிறது.

**குடிநிலை**

ஒருவன் தனது குடியின் வரலாற்றைப் புகழ்ந்து கூறுதல் 'குடிநிலை' என்ற துறையாகும். பழமையும் வீரமும் மிக்கதான ஒரு குடியின் வரலாற்றினைக் கூறுவதாக,

. . . . . . இயல் தேர்க் குருசில்
நுந்தை தந்தைக்கு இவன் தந்தை தந்தை[19]

என்ற புறநானூற்றுப் பாடற்பகுதியொன்றுள்ளது. பலதலைமுறையாக மன்னருக்குத் துணைநின்ற வீரனின் வழிவந்தவனான அவனும், போர் செய்யும் திறம் அமைந்த வீரனாவான். 'மழைபொழியும் காலத்து அதனை ஏற்றுக் காக்கும் பனையோலைக் குடையைப் போன்ற பெருமகன்' என்று குடி வரலாறு பேசப்படுகிறது.

இக்கருத்திற்கிணங்கியே திருமங்கையாழ்வாரின் பாசுரம் ஒன்றுள்ளது. அப்பாசுரத்தின் செறிவானது,

எம் தாதை தாதை அப்பால் எழுவர் பழ அடிமை[20]

என்ற அடியில் உள்ளதை உணர முடிகிறது. எனக்கு உயிர் போன்றவனே; என்னை ஆள்பவனே என்று கூறி, தானும், தன் தகப்பனும் அத்தகப்பனுக்குத் தகப்பனும், அவனுக்குமுன்புண்டான ஏழு பேரும் (ஆகப் பத்துத் தலைமுறையாக) அடிமை செய்து வந்தவர்கள் என்றும், தனது மனத்தினுள்ளே வந்து சேர்ந்ததால், இறைவனாகிய அவனை இனி வேறிடம் செல்ல விடமாட்டேன் என்றும் கூறி, தனது பத்துத் தலைமுறையும் இறைவனுக்குச் சேவகனாக இருந்தமையைக் கூறுவதாக இப்பாடலடிகளின் மூலம் உணர்த்துகின்றார். மேலும், தன் குலத்திற்கே திருமால் தலைவன் என்பதையும் பாடுகிறார்.

இவ்வாறு வீரனொருவன் வழிவழியாக மறவனாக இருந்து மன்னனுக்கு மறத்தொண்டு செய்து, மன்னன் மீது அன்பு கொண்டு தன் நாடு, தனது அந்த அரசனால் காக்கப்பட வேண்டுமென்பதில் அக்கறை கொண்டிருந்ததுவும், மன்னன் அவ்வாறு காத்ததுவும் புறநானூற்றுப் பாடலொன்றால் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

புறநானூற்றில் வரும் இக்கருத்தானது, பிற்கால ஆழ்வார்களின் மனத்தில் ஒருவித தாக்கத்தினை ஏற்படுத்தியது எனலாம். அதனால்தான் திருமங்கையாழ்வார் தனது பாசுரத்தின் வழி, திருமால் பக்தர்கள் மரபு வழிவந்து பக்தி செலுத்துபவர்கள் என்பதும், அந்தப் பக்தியின் பொருட்டே திருமால் தனக்குச் சேவகனாகப் பக்தி செலுத்தும் பக்தர்களைக் காத்தருள்கிறான் என்பதும் தோன்றப் பாடியுள்ளமை வெளிப்படுகிறது.

ஆழ்வார்ப் பாசுரங்களில், சங்க இலக்கியத்தின் தாக்கம் உள்ளதென்பதனை உறுதி செய்ய,

கொடிது கடிந்து கோல் திருத்திப்
படுவது உண்டு பகல் ஆற்றி
இனிது உருண்ட சுடர்நேமி
முழுது ஆண்டோர் வழி காவல்[21]

*என்ற புறநானூறு இலக்கியப்பாடலையும் சுட்ட முடிகிறது. உரிய வரிபெற்றுச் செங்கோல் செலுத்தும் அரசன் வழியில் வந்தவனாக இதில் போற்றப்படுகிறான்.*

*ஆய்ப்பாடியின் தலைவனான புகழ்மிக்க நந்தனின் மகனாக விளங்கிய நிறைவாளன் என்பவன்,*

வெந்திறல் ஏறு ஏழும் வென்றவேந்தன் விரிபுகழ் சேர்
நந்தன் மைந்தன் ஆக ஆகும்நம்பி நம் பெருமாள்
எந்தை தந்தை எம்பெருமான்[22]

*என்று பாடப்படும் பெரிய திருமொழியின் பாசுரத்தின் வழிப் பாடப்பட்டுள்ளான். இதில், மேற்சுட்டிய புறநானூறு பாடலின் தாக்கம் உள்ளதை அறிய முடிகின்றது.*

**மழபுல வஞ்சி**

*பகை நாட்டினைத் தீயிட்டுக் கொளுத்திய நிகழ்வினைக் கூறுவது 'மழபுலவஞ்சி' என்ற துறையாகும். கரிகாலனின் சிறப்பினைப் பாடிய புறநானூறு,*

எல்லையும் இரவும் எண்ணாய் பகைவர்
ஊர் சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலை[23]

*என்ற பாடற்பகுதியில் இத்துறையினைத் தருகிறது. மதுரைக் காஞ்சி, பாண்டியன் காற்றுப் போல் விரைந்து சென்று, பகைநாடு கெடும்படியாக நெருப்பிட்டுக் கொளுத்திப் பகைவரை அழித்தான் என்பதை,*

கால் என்னது கடிதுஉரா அய்
நாடு கெட எரிபரப்பி[24]

*எனச் சுட்டுகிறது.*

*திருமங்கையாழ்வாரின் இதே புறத்துறையில் அமைந்துள்ள பாசுரமென்று,*

காண்டவனம் என்பது ஒரு காடு அமரர்க்கு
அரை அன்னது கண்டு அவன் நிற்க முனே
மூண்டு ஆர் அழல் உண்ண முனிந்ததுவும்[25]

என்கிறது. அதாவது, தேவேந்திரனுக்கு உரிமையுடைய ‘காண்டவ வனம்’ என்ற காட்டை இந்திரன் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே, அக்காடு நெருப்புப் பற்றி எரியச் சீறி அருளியவன் என்கிறது. மறத்தலைவனுக்குக் கண்ணால் எதனையும் எரிக்கும் வலிமையில்லை. ஆனால், இறைவனாகிய தலைவன் தன் பார்வையினாலேயே தீயவர்களை அழிக்கவல்லவன். இதனை உணர்ந்த ஆழ்வார், தனது பாடல்பாடும் வாய்ப்புக்கேற்பத் தனது கற்பனையை மாற்றி இப்படிப்பாடினார் எனக் கொள்ள முடிகிறது.

இராமாவதாரத்தில் திருமால் நீர், நெருப்பு, பூமி ஆகியவற்றை உடலாகக் கொண்ட திருமால், இராவணனுடைய இலங்கையை முன்பு கண்டவர் பின்பு காண முடியாதபடி நெருப்புக்கு இரையாக்கியவன் என்பதாக,

நீர் அழல் ஆய், நெடு நிலன் ஆய் நின்றானை அன்று அரக்கன்
ஊர் அழலால் உண்டானைக் கண்டார்பின் காணோமே
பேர் அழலாய் பெருவிசும்பாய். . .[26]

என்று பெரியதிருமொழி பாடுவதையும் கருத்திற் கொண்டு மழபுலவஞ்சி என்னும் துறையைப் பாசுரம் இவ்வாறு நினைவுபடுத்துவது பாராட்டத் தக்கதாகவுள்ளது.

**மன்னனை இறைவனுக்கு ஒப்பாகக் கூறுதல்**

போரில் பகைவர்களைக் கொல்லும் பெரும் வீரனான அதியமான், பொன்னால் செய்த மாலையையுடையவன். அவன் தனக்குக் கிடைத்த அரிதான நெல்லிக்கனியின் பெருமையைத் தானுணர்ந்தும், அதனைத் தான் உண்ணாது, ஔவைக்கு உண்ணக் கொடுத்தவன். அவனது பெருமையை அறிந்த ஔவையார் அதியனை,

நீல மணி மிடற்று ஒருவன் போல[27]

என்று பாடி, அவனை இறைவனுக்கொப்பாகப் புகழ்கிறாள். இங்கு, கருங்கழுத்தினையுடைய சிவபெருமானுக்கு ஒப்பாக இவன் புகழப்படுகிறான்.

இப்புகழ்ச்சியில் இறைவனின் கருமையான கழுத்து, வண்ணம் சார்ந்து சிறப்பிக்கப்படுகிறது.

இந்த உவமைச் சிறப்பானது நம்மாழ்வாரின் படைப்புத்திறனில் தாக்கத்தினை ஏற்படுத்தியுள்ளது. எனவே தான் அவர்,

திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்
உருவுடை வண்ணங்கள் காணில் உலகளந்தான் என்று துள்ளும்[28]

என்று பாடி, திருமாலின் பெருமையைச் சிறப்பித்துப் போற்றுகின்றார் எனக் கூற முடிகிறது.

**வள்ளன்மை**

'கொடை வஞ்சி' என்பது தனது வெற்றியைப் பாடிய புலவர்க்குப் பரிசு வழங்கியதைக் குறிப்பதான புறத்துறையாகும். புலவர்களுக்கும் மற்றவர்க்கும் அள்ளிக் கொடுக்கும் குணமுடைய பாண்டிய மன்னனை மதுரைக்காஞ்சியானது.

இங்கிளை புரக்கும் இரவலர்க்கு எல்லாம்
கொடுஞ்சி நெடுந்தேர் களிற்றோடும் வீசி[29]

என்று கூறிப் பாராட்டுகின்றது.

மன்னர்கள் வீரத்துடன் ஈரத்தினையும் கொண்டு விளங்கினர் என்றும், பாண்டிய மன்னன் பெரிய சுற்றத்தாரைப் பாதுகாப்பவர்களுக்குப் பெரும் கொடையளிக்க விரும்பினானென்றும், பரிசிலர்க்கெல்லாம் 'கொடுஞ்சி' என்னும் உறுப்பினைக் கொண்ட தேர்களையும், யானைகளையும் கொடையாக வழங்கினான் என்றும் சிறப்பித்துக் கூறுகிறது.

கரிகாலன் தன்னை நாடி வந்தடைந்தாரின் வறுமையைப் போக்குபவனாக இருந்தான். வறியவர்க்கெல்லாம் கொடுக்கும் வள்ளலாக இருந்து, அவர்களின் கந்தலாடையை நீக்கச் செய்து, புத்தாடையை அளித்துச் சிறப்பித்தான் என்பது வரலாறு. இச்செய்தியைப் பொருநராற்றுப்படை,

ஈற்று ஆவகுப்பின் போற்றுவு நோக்கி நும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
பாசிவேரின் மாசொடு குறைந்த
துன்னற் சிதா அர் நீக்கி தூய
. . . . . பட்டு உடை நல்கி[30]

என்று பாடி வெளிப்படுத்துகிறது.

சோழ, பாண்டிய மன்னர்களின் வள்ளன்மை சங்க இலக்கியங்களில் பேசப்பட்டுள்ளமையினை அறிந்த ஆண்டாள், தனது பாசுரங்களிலும் இத்தகைய வள்ளன்மையைப் பாடவேண்டும் என விரும்புகின்றார். அவரது அவ்விருப்பம் திருப்பாவைப் பாசுரத்தைப் பாடியபொழுது நிறைவேறியது என்று கூறலாம்.

திருமாலைப் பாடிப் பரவிய வழி, நோன்புக்கு வேண்டியதைப் பெற்று விரதத்தை முடிப்பதற்காக அவர்கள் விரும்பிய சன்மானங்களைக் குறிப்பிடும் ஆண்டாள்,

கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா! உன் தன்னைப்
பாடி பறைகொண்டு யாம் பெறும் சம்மானம்
நாடு புகழும் பாசினால் நன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம்
ஆடையுடுப்போம் . . .[31]

என்றவாறு சிலவற்றைப் பாடு பொருளாக்கிச் சிறப்பித்துள்ளார். சூடகம், தோள்வளை, தோடு என்ற பல ஆபரணங்களைச் சுட்டிக் காட்டுகிறாள். இவற்றையெல்லாம் கண்ணன் அணிவிக்க நாம் அணிந்து கொள்வோம் என்றும், அணிகலனுடன் பட்டாடையையும் பெற்று உடுத்தி மகிழ்வதாகவும் பாடுகின்றாள்.

நம்மாழ்வார், அனைத்தையும் தந்தருள்பவனான திருமாலை,

வள்ளலே! மதுசூதனா என் மரகத மலையே[32]

என்றவாறு பாடி அவனை விளிக்கின்றார். ஆதலால், வள்ளண்மை குறித்த சங்ககால மாண்பு பிற்காலத்தில் ஆழ்வார்களாலும் பாடிச் சிறப்பிக்கப்பட்டுள்ளது எனத் துணிந்து கூறமுடிகிறது.

அனைவரும் இன்புற்று மகிழ்வுடன் வாழவேண்டுமெனில், செல்வ வளம் படைத்தோர் வறியோர்க்கும் எளியோர்க்கும் ஈதல் வேண்டும். அக்கால மன்னர்கள் வள்ளல் தன்மையுடன் வாழ்ந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.

ஓவாது ஈயும் மாரி வண்கை[33]

என்ற குறுந்தொகையும்,

கடும் பகட்டு யானை நெடுமான் அஞ்சி
ஈர நெஞ்சமோடு இசைசேண் விளங்கத்
தேர்வீக இருக்கைப்போல
மாரி இரீஇ மான்றன்றால் மழையே[34]

என்ற நற்றிணையடிகளும் வள்ளல் தன்மையைப் புகழ்ந்து கூறுகின்றன. மேலும்,

வாலுளைப் புரவியொடு வையகம் மருள
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
கழல் தொடித் தடக்கைக் காரி . . .[35]

என்ற சிறுபாணாற்றுப்படை வள்ளண்மை குறித்துக் கூறுவதையும் அறிய முடிகிறது.

இறைவனுக்கே ஈந்த வள்ளலாக ஆய் மன்னைப் புகழ்ந்து பாடுவதான,

நீல நாகம் நல்கிய கலிங்கம்
ஆலஅமர் செல்வற்கு . . .[36]

என்ற பதிற்றுப்பத்துப் பகுதி, தனக்கு நாகம் நல்கிய ஆடையினையும், ஆலமரத்தின் கீழ் இருந்த இறைவனுக்கு விருப்பமுடன் கொடுத்தவன் ஆய் என்பதைக் கூறுகின்றன.

மக்களுக்கு இன்பத்தையும் தன்னம்பிக்கையையும் அவநம்பிக்கை குறையாத தன்மையையும் ஏற்படுத்துவது இந்த வள்ளன்மையாகும். இத்தன்மை மிக்கத் தலைவனோ அன்றி அரசனோதான் புலவர்களால் பெருமதிப்புடன் பண்டு இலக்கியப் படுத்தப்பட்டான். இந்நிலையில், ஆழ்வார்களும் தத்தம் பாசுரங்களில் வைணவ அடியார்களின் இறைவனான திருமாலின் பெருமைகளுள் ஒன்றாகக் கருதப்படும் வள்ளன்மையினைப் பாடு பொருளுள் வைத்தனர் எனலாம்.

தேவர்களும் பிறரும் வாழவும், துன்பம் கலவாத இன்பம் வளரவும் வேண்டித் திருமாலின் வள்ளன்மையை ஆழ்வார்கள் ஏத்திப் பாடியமையினை,

வன் பெரு வானகம் உய்ய அமரர்உய்ய
மண் உய்ய மண் உலகில் மனிசர்உய்ய
துன்பம்மிகு துயர்அகல அயர் ஒன்று இல்லாச்
சுகம் வளர அகம் மகிழும் தொண்டர் வாழ
அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளும்
அணி - அரங்கன் . . .[37]

என்ற பாசுரத்தின் மூலம் அறிய முடிகிறது. வள்ளன்மையைப் பாடுவது இயல்புதான். எனினும், இது குறித்து அவர்கள் பாடியுள்ள முறை சங்க இலக்கியத்தின் பாற்பட்டதே எனக் கூறமுடிகிறது.

### பொதுவியல், பொருண்மொழிக் காஞ்சி

எல்லாத்திணைகளுக்கும் பொதுவான செய்திகளைத் கூறுவதாகவும், உயிருக்கு நலம் செய்யும் இம்மை மறுமைக் கடன்களை எடுத்துக் கூறுவதாகவும் அமைவது 'பொருண்மொழிக் காஞ்சி' என்னும் துறையாகும்.

வாழ்க்கைக்கு நெல்லும் நீரும் உயிர் ஆகாது, ஆள்பவனை உயிராகக் கொண்டது நல்ல நாடு. அதனால், நாட்டின் உயிர்களை ஆள்பவனாகிய அரசனே இறைவன் என்பதை குறிக்கும் வகையில் புறநானூறு,

நெல்லும் உயிர் அன்றே நீரும் உயிர் அன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால் யான் உயிர் என்பது அறிகை[38]

என்கிறது. குடிமக்களைச் சார்ந்தே அரசன் வாழ்ந்துள்ளான். நெல்லும் நீரும் உலக உயிர்களைக் காக்கும் தன்மையுடையனவெனினும், அவற்றைவிட மேலாக மன்னனே நாட்டின் உயிராக விளங்கினான் என்பதையும் இப்பாடலின் வழியே அறிய முடிகிறது.

ஆழ்வார்கள் இக்கருத்தினைப் பெரும்பாலும் ஏற்றனர் எனக் கொள்வதில் தவறில்லை. அக்கருத்தினைத் தமது பாசுரத்தின் வழி நிலைநாட்டவும் செய்தனர் எனக் கூறுவதும் பொருந்தும். நம்மாழ்வார்,

உண்ணுஞ்சோறு, பருகுநீர், தின்னும் வெற்றிலையும்; எல்லாம்
கண்ணன், எம்பெருமான் என்று என்றே கண்கள் நீர் மல்கி[39]

என்று பாடுகிறார்.

சங்ககால மக்களால் இறைவனாகக் கருதப்பட்டான் மன்னன். ஆனால், பக்திக் கால ஆழ்வார்களுக்கு உலகினைக் காக்கும் இறைவன், பக்தர்களைக் காக்கும் மன்னனைப் போல் தோன்றினான் எனக் கருத வேண்டியுள்ளது. எனவேதான், உண்மையான குடிமக்கள் தன் மன்னன் மீது எவ்வாறு பக்தி செலுத்துவார்களோ, அவ்வாறே திருமாலடியார்கள் இறைவனாகிய தலைவனிடம் பக்தி செலுத்தினார்கள்.

அந்த அமைவில் தான் மேற்குறித்த அடிகளை உள்ளடக்கிய பாசுரத்தில், நம்மாழ்வார் திருமாலாகிய இறைவன் உண்ணும் உணவாகவும், பருகும் நீராகவும் விளங்குகின்றான் எனக்கூறி, ஆய்வாளரின் 'தாக்கம்' என்ற கருத்திற்குத் துணை நின்றவராகிறார் எனக் கூறமுடிகிறது.

**நல்லிசை வஞ்சி**

பொதுவியல் திணையில் அமைந்த துறைகளுள் 'நல்லிசை வஞ்சி' என்பதுவும் ஒன்றாகும். இது, வேந்தனின் வெற்றியைப் போற்றிப் புகழ்தலைக் குறிப்பதாக அமைந்த துறையாகும்.

இத்துறையினை வைத்துக் கல்லாடனார் புறநானூற்றில்,

வெளிறுஇல் நோன்காழ்ப் பணைநிலை முனைஇக்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
சூர் நலை முருகன் சுற்றத்து அன்ன
கூர்நல் அம்பின் கொடுவில் கூளியர்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
கடிமரம் துளங்கிய காவும் நெடுநகர்
வினை எரி உரறிய மருங்கும் நோக்கி
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
ஞாலம் நெறிய ஈண்டிய வியன்படை

ஆலங்கானத்து அமர்கடந்து அட்ட

கால முன்ப!. . . . . . .[40]

என்று பாடியுள்ளார்.

தலையானங்கானத்தே நிகழ்ந்த போரில், பாண்டியன் எதிர் நின்று அழித்த எமன்போலும் வலிமையுடையவனாக இருந்தான் என்றும், பகைவருடைய இடங்கள் பாழாகும் நிலையில் அழித்து வெற்றி கொண்டான் என்றும் போற்றிப் புகழ்கின்றார்.

ஆண்டாள் நாச்சியார், திருமால் ஒவ்வொரு அவதாரத்தின் போதும், அவர் பெற்ற வெற்றியை நினைவுபடுத்தும் வகையில், ஒரு பாட்டிலேயே அழகாகப் போற்றிப் புகழ்கிறாள்.

அன்று இவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி!

சென்று அங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி!

பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ் போற்றி!

கன்று குணிலா எறிந்தாய் கழல் போற்றி!

குன்று குடையாய் எடுத்தாய் குணம் போற்றி!

வென்று பகை கெடுக்கும் நின் கையின்வேல் போற்றி![41]

என்று, வீரத்தினால் விளைந்த வெற்றியைக் காட்டுவதான இப்பாடலை இத்துறைக்கு சான்றாகச் சுட்டமுடிகிறது.

**மறக்களவழி**

‘மறக்கள வழி’ என்ற துறையானது அரசனின் போர்ச்செயலை உழவன் செயலோடு ஒப்பிட்டுக் கூறுதலாகும். இதனைப் புறநானூறு,

இரப்போர் இரங்கும் இன்னா வியன்களத்து

ஆள் அழிப்படுத்த வாள் ஏர் உழவ

கடா அயானைக். . .[42]

என்று பாடியுள்ளது. இரங்கத்தக்கதான போர்க்களத்தில், ஆட்களாகிய வைக்கோலை அறுத்துப் போராகக் குவித்து வைத்திருந்தான். அப்படி வைத்த மன்னன் ‘வாளையே ஏராகக் கொண்ட உழவன்’ என்ற கருத்தினை

இப்பாடற்பகுதி கொண்டுள்ளது. கழாத்தலையார் பாடிய இப்பாடல், இத்துறைக்கு மிகவும் பொருந்திய பாடலாகும்.

மேலும், கழனியில் நடைபெறும் செயலினை அப்படியே போர்க்களத்துடன் ஒப்பிட்டுப் பாடப்பட்ட,

. . . . . . ஏந்து எழில் மருப்பின்
கருங்கை யானை கொண்மூஆக
நீள்மொழி மறவர் எறிவளர் உயர்த்த
வாள்மின் ஆக வயங்கு கடிப்பு அமைந்த
. . . . . . . . . . . . . . . . . . . . . .
ஈரச் செறு வயின் தேர் ஏர்ஆக
விடியல்புக்கு நெடிய நீட்டி நின்
செருப்படை மிளிர்ந்து திருந்துறு பைஞ்சால்[43]

என்ற புறப்பாடற்பகுதியும் இதனுடன் ஒப்பவைத்து எண்ணத்தக்கது.

புற இலக்கியத்தின் இத்தகைய செயலை ஆழ்வாரின் பாசுரமானது அவ்வாறே அடியொற்றிப்பாட முனைகிறது. இறைவனைப் 'பக்தி உழவன்' என்று அழைத்து, உழவனாக உருவகப்படுத்துகின்றார் திருமழிசையாழ்வார். நான்முகன் திருவந்தாதியில் வரும் அவரது,

வித்தும் இடவேண்டும் கொல்லோ விடை அடர்த்த
பக்தி உழவன் பழம் புனத்து - மொய்த்து எழுந்த
கார்மேகம் அன்ன கருமால் திருமேனி
நீர் வானம் காட்டும் நிகழ்ந்து[44]

என்ற பகுதியடங்கிய பாசுரம் பக்திச் சுவை நிரம்பியதாகவுள்ளது. இப்பாசுரத்தில் திருமழிசையார் இறைவன் தன்னிடம் பக்தி உண்டாவதற்குத் இறைவன் தானே முயற்சி செய்கிறான். எம்பெருமானின் திருத்தலமே நிலம் (அதாவது சம்சாரம் என்ற பழமையான நிலம்). அதில் தன்முயற்சி என்ற விதையை எவரும் முன் வந்து விதைக்க வேண்டியதில்லை. எவரது முயற்சியுமின்றியே இறைவன் தானே அதனை விதைத்திடுவான். நீர்கொண்ட மேகமான திருமால் பக்தர்களிடம் பயிர் செய்வித்து, பகவத் சுவையாகிய பக்தியைப் பெருக்கித் திருநாட்டினை அவனே அறுவடை செய்து முடிப்பான்

எனப் புனைந்து, உழவனின் செயலோடு இறைவனின் செயலினை ஒருங்கிணைத்து உருவகப்படுத்திப் பாடுகிறார்.

இத்தகைய பாடலானது 'மறக்களவழி' என்ற துறையுடன் புனையப்பட்ட, மேற்குறித்த புறநானூறு இலக்கியப் பாடலின் தாக்கம் பெற்றுள்ளது எனக் கூற முடிகிறது. மேலும்,

வித்தும் இடல் வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்[45]

என்ற திருக்குறளின் முதலடியைத் தனது பாசுரத்தில் எடுத்தாண்டுள்ள திருமழிசையார், திருக்குறட் கருத்துக்களையும் முன்மொழியக் கூடியவர் என்பதும் விளங்குகின்றது.

**வெட்சி**

வெட்சித் திணையானது, 'ஆநிரை' கவர்தலைக் கூறுவதாகும். பகையரசனுடன் போர் செய்யக் கருதிய மன்னன், தனது முதல் செய்கையாக அங்குள்ள ஆநிரைகளைக் கவர்ந்து வரச் செய்வான். தொல்காப்பியரால் குறிப்பிடப்படும் இத்துறையானது, புறப்பாடல்களில் மிகுதியும் எடுத்தாளப்பட்டுள்ளது எனலாம்.

ஆநிரை குறித்துப் பாடும் புறநானூறு,

....... காலை
புல்லார் இனநிரை செல் புறம் நோக்கிக்
கையின் சுட்டிப் பையென எண்ணிச்
சிலையின் மாற்றி யோனே; அவைதான்
மிகப் பலவாயினும் என் ஆம் - எனைத்தும்[46]

என்கிறது.

பகைவர் பசுக்கள் போகும் இடத்தைப் பார்த்துக் கையால் சுட்டிக்காட்டித் தன் வில்லால் பசுக்களைத் திருப்பிக் கொணர்ந்தவன் என்பதும், அப்பசுக்கள் மிகப்பல என்றாலும், மறவர்கள் அவற்றை

விடியற்காலத்தில் ஊருக்குக் கொணர்ந்தனர் என்றும் குறிப்பிடுகிறது. இந்த ஆநிரை கவர்தல் குறித்த கருத்து ஆழ்வார்ப் பாசுரங்களிலும் உள்ளன.

நம்மாழ்வாரின் திருவிருத்தத்தில் தலைவி கொடிய பாலைநிலத்தின் வழியே சென்று விடுகிறாள். அப்பாலை வழியின் கொடுமையை நினைத்து வருந்தும் தாயின் கூற்றாக,

கொடுங்கால் சிலையர், நிரை கோல் உழவர் கொலையில் வெய்ய
கடுங்கால் இளைஞர் துடி படும் கவ்வைத்து[47]

என்ற பாடலடிகள் வருகின்றன. அவற்றில் தலைவி நடந்து சென்ற பாலைநிலம் வருணிக்கப்படுகிறது. அங்குக் கொலைத் தொழிலில் வல்லவர்களாகவும், பசுக்கூட்டங்களைக் கவர்வதைத் தொழிலாக உடையவர்களுமாகிய கொடிய கள்வர்கள் சித்திரிக்கப்படுகின்றனர்.

விரைந்த நடையையுடைய அவ்விளம் வீரர்களின் பறையொலியும் ஆரவாரமும் அப்பாலையில் முழங்குவதாகக் குறிப்பிடப்படுகிறது. போருக்கு முந்திய செயலாகச் சங்க இலக்கியங்களில் பேசப்படும் 'ஆநிரை கவர்தல்' என்பதும் ஆழ்வார்ப் பாசுரங்களிலும் அவ்வாறே பதிவு செய்யப்பட்டுள்ளமை வெளிப்படுகிறது.

**வஞ்சி**

வஞ்சி என்ற திணையானது பகையரசன் நாட்டைக் கைப்பற்றக் கருதியது ஆகும். பிறரை வெல்லவோ, கொல்லவோ துணிந்து நிற்கும் வீரனைக் குறித்துப் பாடும் புறநானூறு,

நீயே பிறர் நாடு கொள்ளும் காலை அவர் நாட்டு
இறங்கு கதிர்க் கழனிநின் இளையரும் கவர்க
நனந்தலைப் போர் ஊர் எரியும் நைக்க
மின்னு நிமிர்ந் தன்ன நின் ஒளிறு இலங்கு நெடுவேல்[48]

என்கிறது. பகை நாட்டைக் கைக் கொள்ளும்போது, நாட்டிலுள்ள முதிர்ந்த கதிர்களைக் கொள்ளையிடுதலும் ஊரை எரித்தலும் உண்டு. அவ்வாறு எரித்துப் பகைவரை அழித்தாலும், காவல் மரத்தை மட்டும் வெட்டுவதைக் கைவிடுதல் வழக்கமென்பதை இப்பாடலடிகளின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

இராவணனைக் கொன்று சீதையை மீட்க வேண்டி இலங்கையைக் கைப்பற்ற இராமன் நினைக்கிறான். இராமாயணத்தில் வரும் எரியூட்டும் செய்தியைப் பெருமாள் திருமொழி புறநானூற்றில் உள்ளவாறே சுட்டுகிறது. சீதையைக் கைப்பற்ற எண்ணுகிறான் இராமன். வெற்றி நிறைந்த அம்பைக் கொண்டு, ஒலிக்கும் கடல் கலங்கும்படி எய்யத் தொடங்கி, அதில் அணையைக் கட்டியவன் அவன், பின் அந்த அணை வழியாகக் கடல் கடந்து இலங்கை சென்று, அங்குள்ள எரிக்கின்ற நீண்ட வேற்படையையுடைய அரக்கர்களையும், பிற வீரர்களையும் துன்புறுத்தி அழித்து, அங்கிருக்கும் இலங்கை மன்னன். இராவணின் உயிரைக் கவர எண்ணி அதனை முடித்த செய்தியை,

குடை கடலை அடல் அம்பால் மறுக எய்து
குலைகட்டி மறுகரையை அதனால் ஏறி[49]

என்று குலசேகராழ்வார் குறிப்பிட்டுப் பாடுகின்றார்.

இராமனின் இலங்கைக்கான படையெடுப்பினைத் தனது பாசுரத்தில் குறிக்க வேண்டும் எனக் கருதிய இவ்வாழ்வார் தனது இப்பாடலில், புறநானூற்றில் வரும் வஞ்சித்திணை பற்றிக் குறித்தால் சிறப்பாக இருக்கும் எனக் கருதியே அவ்வாறு செய்தார் எனக் கூற முடிகிறது.

**வாகை**

வாகைத் திணையிலுள்ள அரச வாகைத் துறையானது அரசனின் வெற்றியை இயம்புவதாக அமைகிறது. இவற்றில் அதியமான் நெடுமானஞ்சியைப் பாடும் ஔவையார், பகைவரை அழித்து வென்று, பிற அரண்களையும் அழிக்கக்கூடிய சக்கரத்தை ஆயுதமாகத் தாங்கிய தோள்களையுடையவனாக அவனைப் புகழ்ந்து,

சென்று அமர்கடந்து நின் ஆற்றல் தோற்றிய
அன்றும் பாடுநர்க்கு அரியை; இன்றும்
பரணன் பாடினன் மற்கொல் - மற்றுநீ
முரண் மிகு கோவலூர் நூறி நின்
அரண் அடு திகிரி ஏந்திய தோளே![50]

எனப் பாடி முடிக்கின்றார். இதிலிருந்து, அதியமான் சக்கரம் என்ற ஆயுதம் ஏந்திப் போரிட்டு அழித்தான் என்ற செய்தியானது பெறப்படுகிறது. இச்செய்தியானது, வாகையைப் பொருத்தவரைச் சுவையானது எனலாம்.

இச்சுவையினை உணர்ந்த திருமங்கையாழ்வார், தனது பாசுரத்தில் இதனை மேற்கொள்ளத் துணிந்தார் எனக் கூறமுடிகிறது. அவரது அத்துணிவு,

அன்றிய வாணன் ஆயிரம் தோளும்
துணிய அன்று ஆழி தொட்டானை[51]

என்ற பாசுர அடிகளில் வெளிப்பட்டுச் சிறந்துள்ளது. இதில், மிகுந்த கோபத்துடன் வாணாசுரனின் ஆயிரம் தோள்களும் அறுந்து விழும்படிச் சக்கரத்தைச் செலுத்தியவன் என்று திருமாலினைப் பாடிப்புகழ்ந்துள்ளார். இது, இப்பாசுரத்திற்குச் சிறப்பளித்துள்ளது எனக் கூறவும் முடிகின்றது.

**வாள் மங்கலம்**

'வாள் மங்கலம்' என்ற துறையானது, தலைவனது வாளைப் புகழ்ந்து பேசுதல் ஆகும். இதனைப் புறநானூறு,

கண்திரள் நோன்காழ் திருத்தி நெய் அணிந்து
கடியுடை வியல் நக ரவ்வே; அவ்வே
பகைவர்க் குத்தி, கோடு நுதி, சிதைந்து
கொல் துறைக் குற்றில மாதோ[52]

என அழகுறப் பாடப்படுகிறது. அதியமானின் கூர்மையான வேலானது, பகைவரைக் குத்தி நுனி முறிந்து கொல்லர் உலைக் களத்தில் உள்ளது என்று சிறப்பித்துப் பாடுவதே இப்பாடலின் இன்றியமையாக் குறிப்பு. இது போன்றதொரு கருத்தினைப் பதிற்றுப் பத்திலும் காணமுடிகிறது.

மழைக்கால மேகக்கூட்டம் பொருந்திய மலை உச்சியின் தோற்றத்தைப் போல, கேடயத்தையும் வேற்படைகளையும் வைத்து அதன்மேல் மாலைகளைச் சுற்றி, அசைந்து வரும் வண்ணமாக அமைத்து, மறவர்களும் சூழ்ந்தவாறு வருவர். இவ்வாறு வாள் விழவினை உடையவர்கள் என்பதை,

. . . . தோல் மிசைத்து எழுதரும் விரிந்து
எ.:.கின் தார்புரிந்தன்ன வாளுடை விழவின்[53]

*என்று கூறி, வாளிற்குச் சிறப்புச் செய்யப்படுவதை இப்பகுதியானது தெரிவிக்கிறது. இவ்வாறு படைக்கருவிகளை, முன்னே ஏற்றிப் போற்றும் பாங்கு, பதிற்றுப்பத்து மற்றும் புறநானூற்றுப் பாடல்களால் சுட்டப்படுவதைப் படித்தறிய முடிகிறது.*

*இத்தகைய பாங்கு ஆழ்வார்ப் பாசுரங்களிலும் பின்பற்றப்படுவதைக் காணமுடிகிறது. வில்லினைப் புகழ்ந்து கொண்டாடப்படும் 'வில்பெருவிழா' என்பது இவற்றுள் குறிக்கப்பட்டுள்ளமையினை அறிய முடிகின்றது. திருமங்கையாழ்வாரின்,*

வில் பெரு விழவும் கஞ்சனும் மல்லும்
வேழமும் பாகனும் வீழ
செற்றவன் - தன்னை . . . . .[54]

*என்ற பாசுரப்பகுதியை இதற்குச் சான்றாக்க முடிகிறது.*

**குடை மங்கலம்**

*மன்னனின் குடையைப் புகழ்ந்து கூறுவது 'குடை மங்கலம்' என்ற துறையாகும். சோழ அரசனின் வெண்கொற்றக் குடையினைப் புறநானூறு,*

முந்நீர் நாப்பண் திமில்சுடர்போலச்
செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்
உச்சிநின்ற உவவுமதி கண்டு . . . .
. . . . . . . . . . . . . . . . . .
வலன் இரங்கு முரசின் வாய்வாள் வளவன்
வெயில் மறைகொண்ட உருகெழு சிறப்பின்
மாலை வெண்குடை ஒக்குமால் எனவோ?[55]

*என்ற பாடலடிகளால் புகழ்கின்றது. அதாவது, கடலின் நடுவில் செல்லும் படகானது காண்பதற்கு வெண்கொற்றக் குடையைப் போன்று தோன்றியதாகப் பாடுகிறார். படகின் விளக்கினைப் போல் செவ்வாய் என்ற விண்மீன் விளங்குகிறது. மேலும் வானத்தின் முழு மதியைக் கண்டு விரலியும், கூத்தனும் பலமுறை தொழுததாகவும் கூறுகிறார்.*

*அவர்களின் கண்களுக்கு, அவை தமது அரசனின் வெண்கொற்றக் குடையைப் போல் காட்சியளித்ததால் அவர்கள் பக்தியுடன் தொழுதனர் எனப்*

புனைந்துரைக்கப்படுகிறது. இவ்வாறு சிறப்பித்து உரைப்பதை அறிந்திருந்த பொய்கையாழ்வார், திருமாலின் குடையாக விளங்கும் ஆதிசேடனைப் புகழ்ந்து பாடும் வகையில் தனது பாசுரத்தை அமைத்துக் கொண்டார் எனலாம்.

இறைவன் எங்குச் சென்றாலும், அவனுக்குக் குடையாகவும், நடந்து சென்றால் மரவடியாகவும், அமர்ந்திருந்தால் சிங்காதனமாகவும் விளங்குவதைப் புகழ்ந்து போற்றுகின்றார். அப்புகழ்ச்சி,

சென்றால் குடையாம் இருந்தால் சிங்காதனம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள் - என்றும்
புணையாம் மணி விளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாலிற்கு அரவு[56]

என்ற அவரது பாசுர அடிகளில் வெளிப்படுகிறது.

**வல்லாண் முல்லை**

ஒரு தலைவனின் வீடு, ஊர், இயல்பு ஆகியவற்றைச் சொல்லி அவனது ஆளும் தன்மையைப் பெருவாரியாகக் கூறுவது ‘வல்லாண் முல்லை’ என்ற துறையாகும்.

புறநானூறு மலைநாட்டிற்குரியவனான ‘பிட்டன்’ என்பானைப் பற்றிக் கூறுகிறது. பாணருக்கும், விரலியருக்கும் யானைத் தந்தத்தில் விளைந்த முத்துக்களைக் கொடுப்பவனாகவும், அனைவரும் விரும்பும் வண்ணம் மென்மையானவனாகவும் இதில் சித்திரிக்கப்படுகின்றான். ஆனால், பகைவர் என்று வந்துவிட்டால், அவன் இரும்பைப் பயன் கொள்ளும், கொல்லன் உலையிலுள்ள ‘பட்டடைக் கல்’ என்பதாக உவமிக்கப்படுகிறான். அவனுடைய வலிமையும், ஆண்மையும் புகழ்ந்து பாடப்படுகிறது. அப்பாடற்பகுதி,

. . . . . . . . . . . . . . . . . . . . . .
நசைவர்க்கு மென்மை அல்லது பகைவர்க்கு
இரும்பு, பயன் படுக்கும் கருங்கைக் கொல்லன்
விசைத்து ஏறி கூடமொடு பொரூஉம்
உலைக்கல் அன்ன வல்லாளன்னே[57]

என்பதாகும்.

இத்தகைய பொருள்படுமாறு திருமங்கையாழ்வார் பாடிய பாசுரமொன்று இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

திருமால், தங்களுடைய சினத்தை விடுத்துத் தன்னை வந்து பற்றினவர்களுக்குக் காவலாக இருந்து அருள்பவன் என்ற கருத்துப் பாசுரப்படுத்தப்பட்டுள்ளது.

தம் சினத்தைத் தவிர்த்து அடைந்தார் தவநெறியைத் தரியாது[58]

என்றும்,

மது - கைடபரும் வயிறு உருகி மாண்டார்

அது கேடு அவர்க்கு இறுதி ஆங்கு[59]

என்றும் வருபவை இதற்குச் சான்றாகும்.

பேயாழ்வாரின் மேற்குறித்த பாசுர அடிகளில் மது - கைடபர்களப் போல, பகைவராய் வருவோர்க்கு அவ்வண்ணமாகவே அப்படிப்பட்ட உயிர்க்கு இறுதியான கேடே உண்டாகுமென்பதைக் கூறுவதாக அமைந்துள்ளது. இலக்கியத்தில் ‘உலைக்கல்’ என்ற பகைவருக்குப்பட்டடைக் கல்லாக இருப்பவனாகத் தலைவன் காட்டப்படுகிறான். பாசுரத்தில் கொடும் பகையுடன் வந்த மது-கைடபர்க்கு அத்திறத்திலேயே அவர்களை அழித்தான் என்பதையும் ஒப்புநோக்கி மகிழ முடிகிறது.

எனவே, இப்புறத்திணையைத் தம் பாசுர அமைப்பிற்கேற்ப, தேவைகருதிப் பயன்படுத்திக் கொண்டனர் எனக் கூறமுடிகிறது.

**ஏராண் முல்லை**

வாகைத் திணையில் வரும் ஏராண் முல்லையானது, மேலும் மேலும் சிறக்கும் வீரக்குடியின் நிலையை உயர்த்திக் கூறிப் போர்க்களத்தில் பெற்ற வெற்றிச் சிறப்பைக் கூறுவதாக அமைந்த துறையாகும். இதனைப் புறநானூறு,

யாண்டு உள னோ’ வினவுதி என்மகன்;

யாண்டு உளன் ஆயினும் அறியேன்; ஒரும்

புலிசேர்ந்து போகிய கல் அளை போல,

ஈன்ற வயிறோ இதுவே;

தோன்றுவன் மாதோ, போர்க்களத் தானே![60]

என்று பாடியுள்ளது. இதில், தாய் ஒருத்தி 'தன் மகன் எங்கே' என்று கேட்பவனிடம், தன் மகனின் வீரத்தையும், வீரக்குடியின் நிலையையும் எடுத்துக் கூறுகிறாள்.

தன்னுடைய பெற்றவயிற்றினை 'புலிதங்கிச் சென்ற குகை' என்றும், அவன் போர்க்களத்தில் புயல் போலத் தோன்றுவான் என்றும், அங்குத் தன்னுடைய மகனைப் பார்க்கலாம் என்றும் தன் மகனின் வீரத்தையும், அவனின் பெருமையினையும் கூறிப் புலப்படுத்துகின்றாள்.

இத்தகைய வீர மகனைப் பற்றிக் கூறும் யசோதையினைப் பெரியாழ்வாரின் பாசுரங்கள் மூலம் அறிய முடிகிறது. அக்கூற்று,

பாலகன் என்று பரிபவம் செய்யேல் பண்டு ஓர்நாள்

ஆலின் இலை வளர்ந்த சிறுக்கன் அவன் இவன்

மேல் எழப் பாய்ந்து பிடித்துக் கொள்ளும்[61]

என்றும்,

சிறியேன் என்று என் இளஞ்சிங்கத்தை இகழேல் கண்டாய்

சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்று கேள்[62]

என்றும் வரும் அடிகளின் வழி வெளிப்படுகின்றது. தாயான யசோதை தன் மகனின் பெருமைகளையும், வீரச் செயல்களையும் பேசி, அம்புலிப் பருவத்திலுள்ள கண்ணனுடன் விளையாட வருமாறு நிலவினை அழைக்கிறாள். அவன் விரைந்து வராதது கண்டு, இளம் சிங்கமான கண்ணனின் பெருமைகளையும் வீரத்தையும் கூறி அழைத்ததற்கிணங்க வரவில்லையானால் தன் மகனுக்கு அவன் அடிமையாக வேண்டி வரும் என்ற நோக்கில்,

ஆழி கொண்டு உன்னை எறியும் ஐயுறவு இல்லை காண்

வாழ உறுதியேல் மாமதீ மகிழ்ந்தோடிவா![63]

என்று பாடி எச்சரிக்கை செய்கிறாள்.

*சங்க இலக்கியத்தில் தன் மகனின் வீரதீரப் பெருமையைப் பேசும் தாயினையே பாசுரத்திலும் காணமுடிகிறது. இதனைக் கொண்டு 'ஏராண் முல்லை'த் துறையானது புறநானூற்றுப் பாடலில் எடுத்தாளப்பட்ட முறையிலேயே ஆழ்வார்களாலும் எடுத்தாளப்பட்டுள்ளது எனக் கூறமுடிகிறது.*

**அரச வாகை**

*அரசனின் இயல்பினைக் கூறுவதாக அமைவது 'அரச வாகை' என்னும் துறையாகும். அரசனின் வெல்லும் இயல்பினையும் காக்கும் இயல்பினையும் கூறுவதாக அமையும்,*

திறன் அறி வயவரொடு தெவ்வர் தேயஅப்
பிறர்மண் உண்ணும் செம்மல்! நின் நாட்டு
வயவுறு மகளிர் வேட்டு உணின் அல்லது
பகைவர் உண்ணா அருமண் ணினையே;
அன்புதுஞ்சும் கடி அரணால்
அறம் துஞ்சும் செங்கோலையே[64]

*என்ற புறநானூற்றுப் பாடல் இது குறித்துச் சிந்திக்கத் தக்கதாகும். போர்த் திறமைமிக்க, பகைவர் அழியும்வரை உண்ண எண்ணாது, போரிட்டு வென்ற பின்னரே உண்ணத் துணியும் சங்ககாலத் தலைவனின் இயல்பினை இப்பாடல் கூறுகிறது.*

*மேலும், கொல்லனின் உலைக்களத்தில் இரும்பால் குடிக்கப்பெற்ற நீரானது மீட்பதற்கு அரிதானது. அதுபோன்று அரிதானவன் மன்னன். நாள்தோறும் வெற்றி கொள்வதற்கென்றே உள்ளவனாக அவனிருப்பதால், புலவர்கள் அவனைப் பாடும் போர்த்துறைகள் அனைத்தையும் கொண்டவன் என்று அவன் சிறப்பிக்கப் படுவதை,*

இரும்புண் நீரினும் மீட்டற்கு அரிது என
வேங்கை மார்பன் இரங்க வைகலும்
ஆடுகொளக் குறைந்த தும்பை, புலவர்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே![65]

*என்ற இப்பாடலடிகள் சுட்டுகின்றன.*

மேலும், கிள்ளி வளவனின் பாதுகாக்கும் தன்மையினைப் புறநானூறு கூறுகிறது. படையானது கடல் போல் முழங்குகிறது. கூரிய வேலானது மின்னலைப் போல் ஒளிவிடும். பகைவேந்தரெல்லாம் நடுங்குமாறு வலிமையுடையவனாக இவ்வரசன் இருந்தான். அதனால், குடிமக்கள் எங்கும் குறையின்றி இருந்தனர். மக்கள் அனைவரும் புலியால் காக்கப்படும் குட்டிகளைப் போல இவன் செங்கோலாட்சி நடத்தினான் என்பதைப் பாடும் புறப்பாடலானது,

புலிபுறங் காக்கும் குருளை போல
மெலிவு இல் செங்கோல் நீ புறங்காப்பப்[66]

என்ற அடிகளின்மூலம் அவ்வேந்தனியல்பினைப் பறைசாற்றுகிறது.

ஆழ்வாரின் பாசுரங்களில் திருமால் அரசனாகப் பாவிக்கப்படுகிறான். திருமாலின் இயல்புகளைப் பலவாறாகப் புகழ்ந்து பாடிய ஆழ்வார்கள் சிறந்த மன்னனாகவும் அவனைப் போற்றிப் பாடினர். சான்றாக நம்மாழ்வாரின்,

. . . . . . . . . . . . . . . . . . . . . . .
கண்ட ஆற்றால் தனதே உலகு என நின்றான் - தன்னை
வண் தமிழ் நூற்க நோற்றேன் - அடியார்க்கு இன்ப மாரியே[67]

என்ற பாசுர அடிகளைச் சுட்ட முடிகிறது.

இலங்கைப் போர் முடிந்து மீண்டுவந்து, திருமுடி புனைந்த திருக்கோலத்தோடு வீற்றிருந்து அரசாட்சிச் செய்யும் இராமனைத் தன் மனக்கண் கொண்ட ஆழ்வார், இந்த உலகமெல்லாம் தனக்கே உரிமைப்பட்டவை என்று சொல்லும்படி அப்பெருமான் நின்றான் என்றும், அப்படி நின்றானைப் பற்றி வளப்பமான தமிழ்ப் பிரபந்தத்தைச் செய்வதற்கான புண்ணியத்தைத் தான் செய்தேன் என்றும் இறைவனைத் தமிழால் போற்றிப்பாடியதைக் கூறுகிறார்.

மேலும் ஏழுகலகங்களிலும் செங்கோல் செலுத்துபவனாக இருந்து காத்தருள்வதை,

வீற்றிருந்து ஏழ் உலகும் தனிக்கோல் செல்ல வீவு இல்சீர்
ஆற்றல் மிக்கு ஆளும் அம்மானை . . . [68]

*என்று பாடுவதைக் கொண்டு இது, புறப்பாடலையொட்டி அமைந்த நிலை எனக் கூறமுடிகிறது. தீயவர்களை ஒடுக்கி மக்களைக்காக்கும் அரசப் பண்பினன் திருமால் என்பதை,*

வயிற்றில் கொண்டு நின்றொழிந்தாரும் எவரும்
வயிற்றில் கொண்டு நின்று ஒரு மூவுலகும் தம்
வயிற்றில் கொண்டு நின்ற வண்ணம் நின்ற மாலை
வயிற்றில் கொண்டு மன்ன வைத்தேன் - மதியாலே[69]

*எனத் திருவாய்மொழியில் நம்மாழ்வார் பாடுகின்றார்.*

*தாய் குழவியை வயிற்றில் வைத்துக் காப்பது போல, உலகத்தைப் பாதுகாப்பவர்கள் அரசர்கள். அவ்வரசர்களை நோக்கி வாழ்பவர் அந்தணர். அவ்வரசர்களையும் அந்தணர்களையும் வைத்துக் காப்பது மூவுலகமாகும். திருமால் அம்மூவுலகங்களையும் தன் வயிற்றில் வைத்துக் காத்து அருள்பவன் என்று பாடுகிறார் நம்மாழ்வார்.*

*சங்க இலக்கியத்தில் பாடப்பட்ட, 'புலி காக்கும் குருளைபோல்' மக்களைக் காத்த அரசர்களையும் சேர்த்துக் காக்கக் கூடியவன் என்ற நிலையில், ஆழ்வார்ப் பாசுரங்களில் திருமால் போற்றப்படுகின்றான் என்று கூறமுடிகிறது.*

**பார்ப்பன வாகை**

*வேந்தன் மாறுபாட்டினை விலக்கிச் சந்து செய்விக்கும் தன்மையைக் கூறுவது, 'பார்ப்பன வாகை' என்ற துறையாகும்.*

*கேட்க வேண்டுவன கேட்டுத் தலைமை பெற்ற பார்ப்பானின் வெற்றியைப் பாடுதலாக வரும்,*

வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவில் ஊர்தி பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்கும்
சொல்லிய சொல்லோ சிலவோ; அதற்கே
ஏணியும் சீப்பும் மாற்றி
மாண்வினை யானையும் மணிகளைந் தனவே[70]

என்ற பாடலால் இதனை அறிந்து கொள்ள முடிகிறது. இப்பாடலானது, பசலைக் கொடி போன்ற சுருங்கிய இடுப்பையும், தளர்ந்த நடையையுமுடைய பார்ப்பான். தூதாகச் சென்று சொல்லிய சொற்களின் காரணமாகப் போர் நின்றது என்ற செய்தியை இது குறிப்பிடுகிறது.

இத்துறையானது ஆழ்வார்ப் பாசுரங்களிலும் எடுத்தாளப்பட்டுள்ளது. பஞ்சபாண்டவருக்காகத் துரியோதனனிடம் சந்து செய்வித்து, தக்கதைப் பெற்றுத் தந்து போரினைத் தவிர்க்கலாம் என்றெண்ணித் தூதாகக் கண்ணபிரான் நடந்தவன் என்ற மகாபாரத நிகழ்வு பெரியாழ்வார் திருமொழியில்,

பஞ்சவர் தூதனாய்ப் பாரதம் கைசெய்து[71]

எனக் குறிப்பிடப்படுகிறது. மேலும்,

பொய்ச் சூதில் தோற்ற பொறை உடை மன்னர்க்காய்
பத்து ஊர் பெறாது அன்று பாரதம் கைசெய்து[72]

என்ற அதே பாசுரக்குறிப்பும் எண்ணத்தக்கது.

புறத்திணைக் கூறுகளுள் இன்றியமையாத ஒன்று ‘சந்து செய்வித்தல்’ என்பதைக் கருத்திற் கொண்ட சங்ககாலப் புலவர்கள், அதனைத் தம் பாடல்களில் வைத்துப் புனைந்து சிறந்தனர். இச்சிறப்பினையுணர்ந்த ஆழ்வார்களும், அத்துறையைத் தமது பாசுரங்களில் வைத்துப் புனைந்து சிறந்தனர் எனக் கூறமுடிகிறது.

சந்து செய்வித்தலைத் துரியோதனர் பொருட்படுத்தாததால் போரிட்டு அழிந்தனர் என்ற செய்தி இதற்குப் பொருந்தும் என்று கருதிய ஆழ்வார்கள், மகாபாரதத்தின் மேலேற்றி இப்புறத்துறையைப் பாடி, ஆழ்வார்களிடையே வைணவ பக்தியை வளர்த்தனர் என்றும் கூற முடிகின்றது.

**மூதின் முல்லை**

மறக்குடி மகளிரின் மறப் பண்பினைக் கூறுவதாக அமைவது ‘மூதின்முல்லை’ என்ற துறையாகும். மறவர்க்கு மட்டுமின்றி, மறக்குடிப் பெண்டிற்கும் அமைந்த வீரமேம்பாட்டினை உரைப்பது இதன் சிறப்பாகும்.

முதுகுடிப் பெண்ணின் துணிவினைக் கூறும் இத்துறை விரவியுள்ள பல பாடல்களுள்,

மேல் நாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை
யானை எறிந்து களத்து ஒழிந்தனனே[73]

என்ற பாடற்பகுதியடங்கிய புறநானூற்றுப் பாடலும் ஒன்றாகும்.

முதல் நாள் பெண்ணின் தந்தை யானையை வீழ்த்தித் தானும் இறந்தான். அடுத்த நாள் நிகழ்ந்த போரில், இவள் கணவன் பசுக்கூட்டத்தை மீட்டுத் தந்து அங்கு இறந்தான். மூன்றாம் நாள், போர்ப்பறை கேட்டு அன்றைய நாள் போரை விரும்பியவளாய் வேல் ஒன்றினைத் தன் ஒரே மகனின் கையில் கொடுத்து அவனைப் போர்க்களம் அனுப்பினாள் மறப்பெண்.

இச்செய்தியை வெளிப்படுத்துவதே மேற்குறித்த அடிகளடங்கிய புறநானூற்றுப் பாடலின் நோக்கமாகும். தந்தையையும் கணவனையும் ஒருங்கே இழந்துவிட்ட துயரமான வேளையிலும், போரினை விரும்பித் துணிந்த அம்மறக்குடி மகளின் வீரத்தின் பெருமை இங்குப் பேசப்படுவது எழுச்சி மிக்கதாகும்.

ஆழ்வார்ப் பாசுரங்களிலும் இத்திணை ஏற்கப்பட்டுப் பெருமைப் படுத்தப்பட்டுள்ளது. பாசுரத் தலைவி தலைவனையடையும் விருப்பத்தில் இருக்கிறாள். அவள் இராமாயணக் காட்சியில் ஈடுபாடு கொண்டுள்ளாள். இராம இராவணப்போர் நடைபெறுகிறது. அப்போர்க்களக் காட்சியை மனத்திற் கொண்டு பெரியதிருமொழியில் பின்வருமாறு பாடப்பட்டுள்ளது.

. . . . . . தடங்கடல் நுடங்கு எயில் இலங்கை
வன்குடி மடங்க வாள் அமர் தொலைத்த
வார்த்தைக் கேட்டு இன்புறும், மயங்கும்[74]

என்ற அடிகளானவை, இலங்கையிலிருந்து அரக்கர் குலம் அழியுமாறு போர்க்களத்திலே அவர்களைக் கொன்ற செய்தியினைக் கேட்டு மகிழும் நாயகியைக் காட்டுகின்றன.

இது பக்திப் பாசுரமாதலால், பக்திச் சுவை இதில் இன்றியமையாத இடம் வகிக்கிறது. மகளிர் மறம் நேரிடையாகப் பேசப்பட வாய்ப்பில்லையென்பதால், மகளிரும் மறப்பண்பினை உயர்வாகக் கருதினர் என்ற பாங்கில், இக்கருத்தினை இவ்வாழ்வார் படைத்துச் சிறப்பித்துள்ளார் எனக் கூறமுடிகிறது.

**காவல் முல்லை**

வேந்தனது உயிர்காக்கும் தொழிலைச் சிறப்பித்துக் கூறுவதாக அமைவது ‘காவல் முல்லை’ என்ற துறையாகும்.

அரசன் செம்மையாக ஆட்சி செலுத்துவதால் உரிய பருவத்தில் மழைபொழிகின்றது. இதனால், விலங்குகளும் பறவையினங்களும் மகிழ்ந்து ஆரவாரஞ்செய்கின்றன. உணவுப் பொருள் தட்டுப்பாடின்றி எப்போதும் கிடைக்கும் நிலை உள்ளது. பசுக்களானவை புல்மேய்ந்து மகிழ்வுடன் துள்ளித் திரிகின்றன.

தேவர்கள் அதனால், அரசியல் நெறி தவறாத அரசனைப் புகழ்ந்து வாழ்த்துகின்றனர். இக்காட்சியானது, பதிற்றுப்பத்தில் பின்வருமாறு வருணிக்கப்படுகிறது.

வானம் பொழுதொடு கரப்ப கானம்
தோடு உறு மடமான் ஏறு புணர்ந்து இயலப்
புள்ளும் . . . . . . . . . . . . . .
உயர்நிலை உலகத்து உயர்ந்தோர் பரவ
அரசியல் பிழையாது செருமேந் தோன்றி
நேய் இலை ஆகியர் . . . .[75]

புறநானூற்றில் இதே பொருளில் காரிக்கண்ணனார் நன்மாறனைப் புகழ்ந்து பாடியதாக வரும்,

வல்லார் ஆயினும் வல்லுநர் ஆயினும்
புகழ்தல் உற்றோர்க்கு மாயோன் அன்ன
உரைசால் சிறப்பின் புகழ்சால் மாற[76]

என்ற பாடலடிகளும் சுவைமிக்கன. இவற்றுள் பின்னதில், ‘அறிவில் தேர்ந்தவராயினும், தேர்ச்சி இல்லாதாராயினும் தன்னைப் புகழ்வோரை, மாயோனைப் போன்று பாதுகாக்கும் பண்புடையவன் நன்மாறன்’ என்று புகழ் பரப்பப்பட்டுள்ளது.

இத்தகைய புகழ்ச்சியானது, ஆழ்வார்ப் பாசுரங்களில் திருமாலினைப் போற்றும் புகழ்ச்சியாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

திருமால் தனது அடியார்களைக் காப்பதையே இயல்பாகக் கொண்டவன்; சக்கரப்படையைத் தாங்கியவன். சோதிவடிவான அந்த இறைவனை மனத்தில் வைத்து வணங்கி வழிபடும் அடியார்கள் போற்றத்தக்கவர்கள் என்பது ஆழ்வார்களின் கருத்தாகவுள்ளது.

திருமாலைப் போலவே, வைணவ அடியார்களும் ஆழ்வாரால் வணங்கத் தக்கவர்களே என்ற கருத்தில் பாசுரங்கள் பல உள்ளன. இக்கருத்தினையுடையவராகிய நம்மாழ்வாரும், இப்பிறவி மட்டுமின்றி, வருகின்ற எல்லா பிறவிகளிலும் காப்பாற்றுபவர் திருமால் என்று பிறவிதோறும் காப்பவராக அவரைப் புகழ்ந்து,

அளிக்கும் பரமனை கண்ணனை ஆழிபிரான் தன்னை
துளிக்கும் நறுங் கண்ணித் தூ மணிவண்ணன் எம்மான் தன்னை
ஒளிக்கொண்ட சோதியை உள்ளத்துக் கொள்ளும் அவர்கண்டீர்
சலிப்பு இன்றி ஆண்டு எம்மைச் சன்ம சன்மாந்தரம் காப்பவரே[77]

எனப் பாடியுள்ளார்.

இப்பிறவியில் காப்பவன் அரசன். இத்தகைய அரசனின் காக்கும் தன்மை தொடர்பான புறத்துறையே ‘காவல் முல்லை’ ஆகிறது. இக்காவல் முல்லையைப் பாசுரங்களில் இயைத்துப் பாட எண்ணிய ஆழ்வார்கள், பிறவிதோறும் தனது அடியார்களைக் காக்கக் கூடியவன் திருமால் என்ற பாங்கில் பாடி, சங்க இலக்கியத் தாக்கத்தினை அறிந்து கொள்ளும் வகையில் தமது பாசுரங்கள் பலவற்றை யாத்துள்ளதாகக் கொள்ள முடிகிறது.

**கண்படை நிலை, துயிலெடை நிலை**

தொல்காப்பியர் காலத்தில் பழந்தமிழகத்தில் நாடாளும் அரசர்களையோ அல்லது தலைவர்களையோ ஏத்திப்பாடும் தொழிலையுடையவர்களாகச் சிலர் இருந்தனர். அவர்கள் ‘சூதர்’ எனப்பட்டனர். இவர்கள், அரசன் உறங்கப் புகுமுன் பாடுதலும், விழித்து எழும்பொழுது பாடுதலும் பண்டைய மரபாகும்.

உறங்கப் புகும்முன் பாடுதலைக் ‘கண்படை நிலை’ என்கிறார் தொல்காப்பியர். குழந்தைகளை உறங்க வைப்பதற்கும் இதுபோன்று பாடும் முறை இருந்ததையும் எண்ணிப்பார்க்க முடிகிறது. இதனைத் ‘தாலாட்டு’ என்றழைத்தனர். உறங்கிய தலைவன் விழித்து எழும்பொழுது, ‘சூதர்’ ஏத்திப்பாடும் பாட்டுத் ‘துயிலெடை நிலை’ எனப்பட்டது. இதனைத் தொல்காப்பியர்,

தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயிலெடை நிலையும். . .[78]

என இலக்கணப் படுத்தியுள்ளார். பிற்காலத்தெழுந்த புறப்பொருள் வெண்பாமாலை இம்மரபினை,

அடுதிறல் மன்னரை அருளிய எழுகெனத்
தொடுகழல் மன்னனைத் துயிலெடுப் பின்று[79]

என வரையறுத்துள்ளது.

‘புகழ்விரும்பும் எண்ணத்துடன் உறங்கிய தலைவனின் பெருமையைப் பாடி எழுப்புதல்’ என்று தொல்காப்பியம் கூற, அது பிற்காலத்தில் திறை தந்து பணிந்து செல்வதற்காக வந்துள்ள சிற்றரசர்களுக்கு அருள் செய்யும் பொருட்டு எழ வேண்டுமெனப் போற்றிப் பாடுவது என்று, மரபு மாற்றம் ஏற்பட்டது எனலாம்.

ஒரு காலத்தில் அரண்மனைகளில் மட்டுமே பாடும் இம்மரபு, பிறகு தெய்வம் உறைவதாகச் சொல்லப்படும் கோயில்களிலும் பாடப்படுவதாயிற்று. இத்துறையினைப் புறநானூறு,

சேயிழை பெறுகுவை - வாள் நுதல் விரலி

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

மால்புடை நெடுவரைக் கோடு தோறு இழிதரும்

நீரினும் இனிய சாயல்

பாரி வேள் பால் பாடினை செலினே[80]

*என்று பாடுகின்றது. அதாவது, 'நீரினும் இனிய பண்புடைய பாரி வள்ளலைப் பாடிச் சென்றால் நீ சிறந்த அணிகலன்களைப் பெறுவாய்' என ஒருவன் கூறியதாகச் சுட்டுகின்றது.*

*இவ்வாறான 'துயிலெடை நிலை' என்பது ஆழ்வார்ப் பாசுரங்களில் 'திருப்பள்ளியெழுச்சி' என்ற மாற்றுப்பெயரில் குறிக்கப்பட்டுள்ளது எனக் கூறமுடிகிறது.*

*யசோதையானவள் தாய் என்னும் பாவனையில் கண்ணனைத் தொட்டிலில் வளர்த்து உறங்கச் செய்வதற்காகச் சீராட்டி, தாலாட்டினைப் பாடுவதாகச் சித்திரிக்கும் பெரியாழ்வார்,*

மாணிக்கம் கட்டி வயிரமும் இடைகட்டி

ஆனிப் பொன்னால் செய்த வண்ணச் சிறுத்தொட்டில்

பேணி உனக்கு பிரமன் விடுதந்தான்

மாணிக் குறளனே! தாலேலோ! வையம் அளந்தானே தாலேலோ![81]

*என்று, தனது பாசுரத்தில் 'கண்படை நிலை'யைப் புனைந்து தந்துள்ளார். தொண்டரடிப்பொடியாழ்வார் அரங்க நாதனைத் துயிலுணர்த்தலாக,*

கதிரவன் குணதிசை . . . . . . . .

. . . . . . . . . . . . . . . . . . . . . . .

அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே[82]

*என்று பாடியுள்ள பாசுரப்பகுதியும் இங்கு ஒப்புநோக்கத் தக்கது. மலர்கள் மலர்கின்ற காலை நேரம் அது. மலர்களிலிருந்து தேன் ஒழுகுகின்றது. வானவர், அரசர்கள் எல்லாரும் வந்து தலைவனாகிய இறைவனை வணங்கி நின்றனர். முரசம் முழங்க, அனைவரையும் காப்பதற்காகப் பள்ளியெழ வேண்டும் என இறைவனிடம் அடியார்கள் விண்ணப்பம் செய்கின்றனர்.*

சங்கப் பாடல்களில் 'கண்படை நிலை' என்ற துறையும், 'துயிலெடை நிலை' என்ற துறையும் மன்னன் பால் மக்கள் கொண்டிருந்த அச்சம் சேர்ந்த மதிப்பினை வெளிப்படுத்துவதெற்கெனவே இயைத்துப் பாடப்பட்டன. அதே உயர்நிலையில் திருமாலினையும் வைத்துப்பார்க்க எண்ணிய ஆழ்வார்கள், இவ்விரு துறைகளையும் தமது பாசுரத்தில் பொதித்து இவ்வாறு பாடினர் எனக் கூறமுடிகிறது.

**கடை நிலை**

'கடை' என்பது 'வாயில்' என்று பொருள்படும். அரண்மனை வாயிலில் நின்று பாடுதல் என்பதே 'கடைநிலை' என்ற புறத்துறையாகும். இதனைப் புறநானூறு,

ஒண் பொறிச் சேவல் எடுப்ப ஏற்றெழுந்து
தன் பனி உறைக்கும் புலரா ஞாங்கர்
நுண்கோல் சிறுகிணை சிலம்ப ஒற்றி
நெடுங்கடை நின்று பகடு பல வாழ்த்தித்
தன் புகழ் ஏத்தினெனாக ஊன் புலர்ந்து[83]

என்று இலக்கியப்படுத்தியுள்ளது.

பனி பெய்கின்ற விடியற்காலைப் பொழுதில் தடாரிகள் ஒலிக்கப்படுகின்றன. பெரிய வாயிலில் நின்ற சூதன், 'அரசன் சிறந்த எருதுகளைப் பெற்று வாழ்க!' என வாழ்த்தி, அவனது புகழ்பலவற்றைப் பாராட்டிப் பாடுகின்றான்.

அந்நிலையில், பாடியவனின் துயரமெல்லாம் நீங்குமளவிற்கு உண்ணக் கொடுத்துப் புத்தாடை, அணிகலன்கள் என பலபொருள்கள் அளிக்கப்பட்டதும், அதனால் அச்சூதர், 'புதுப்பிறவி எடுத்ததைப் போன்று சிறப்பாக வளம் பெற்றதால் பிறரைப் பாடிச் செல்வதையே விட்டுவிட்டேன்' என்று தெரிவிப்பதாகவும் புனையப்பட்டுள்ளது.

இவ்வாறான புனைவு, திருமாலாகிய தலைவனை, வாயிற்கடையில் நின்று புகழ்ந்தேத்துவதில் மேற்கொள்ளப்பட்டால் அது சிறக்கும் என்று கருதிய

ஆண்டாள் நாச்சியார், தனது பாசுரத்தில் இதனைச் செயற்படுத்திக் காட்டிச் சிறப்புப் பெற்றுள்ளார் என்று கூறமுடிகிறது.

பெண்ணொருத்தி இறை நோன்பு நோற்பதற்காகப் பாவையர் பலரை எழுப்புகிறாள். இதன் பின்னணியில் வரும்,

நின் வாசற் கடை பற்றி
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக்கு இனியானைப் பாடவும் நீ வாய்திறவாய்[84]

என்ற திருப்பாவைப் பாசுரம் குறிக்கத்தக்கது.

வாசல் கடையில் நின்று அவள் இராமாவதாரச் செய்தியைப் பாடுகிறாள். மேலும், அதனைக் கேட்டு 'நீ வாய்திறவாமல் இருக்கிறாயே!' என்றும் கேட்கிறாள். இது பக்திச் சுவையூட்டுவதாக உள்ளது. மேலும்,

நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில் காப்பானே! கொடித்தோன்றும் தோரண
வாயில் காப்பானே! மணிக்கதவம் தாள் திறவாய்[85]

என்று அரண்மனை வாயிலிலுள்ள காப்பாளர்களை அழைத்துப் பாடுவதாக உள்ளதை அறியும் பொழுது, இதுவும் சுவையுடையதே எனலாம். எனவே, பக்திச்சுவை மிக்கு விளங்குதற்காக, ஆழ்வார்கள் பாசுரங்கள் பலவற்றுள்ளும் 'கடைநிலை' என்ற புறத்துறையையும் அமைத்துப் பாடிச்சிறந்தனர் என்றும் கருத முடிகின்றது.

**பொலிவு மங்கலம்**

அரசன் நெஞ்சம் உகக்க, அவனுக்குக் குழந்தை பிறந்ததைப் பலரும் புகழ்ந்து பேசுதல் 'பொலிவு மங்கலம்' என்ற துறையாகும்.

புறநானூற்றில் அரசவாகைத் துறையில் அதியமானுக்குத் தவமகன் பிறக்க, அவனைக்கண்டபொழுது ஔவையார் பாடுவதாகப் பின்வரும்,

கையது வேலே; காலன புனைகழல் . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

செறுவர் நோக்கிய கண்தான்
சிறுவனை நோக்கியும் சிவப்பு ஆனவே[86]

என்ற பகுதியடங்கிய பாடல் அமைந்துள்ளது. இதன் கருத்தும் குறிக்கத்தக்கது.

அதியமானின் மகனாகப் பிறந்த பொகுட்டெழினியைப் பார்க்க, ஔவையார் வருகின்றார். அப்பிள்ளையைப் பார்த்த ஔவையார், அதியனின் பெருமையையும் புகழையும் பாடுகிறாள். 'புலியோடு போரிட்ட வலிய யானை போன்றவன். இவனோடு போரிட்டவர் உயிர் பிழைக்கமாட்டார். இவனுக்குச் சினத்தை உண்டாக்கிய பகைவரை வெகுண்டு பார்த்த கண்களையுடையவனான இவனின் இளம் புதல்வனைப் பார்த்தபோதும் கண் சிவப்புக் குறையவில்லை' என்று அவனது வீரத்திணைப் பாடுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

இக்கருத்திற்கேற்ப, நந்தகோபனின் மகனாகக் கண்ணன் ஆய்ப்பாடியில் பிறந்த செய்தியினைப் புகழ்ந்து பாடுவதான பாசுரமொன்று பெரியாழ்வார். திருமொழியில் உள்ளது. கண்ணன் பிறந்த செய்தியைக் கேட்டு வந்தவர்களும், பிறரும் மகிழ்ந்து ஆடிப்பாடி மகிழ்கின்றனர். மகிழ்வான அத்தருணத்தைப் பெரியாழ்வார்,

ஓடுவார், விழுவார் உகந்து ஆலிப்பார்
நாடுவார் நம்பிரான் எங்குதான் என்பார்
பாடுவார்களும் பல்பறை கொட்ட நின்று
ஆடுவார்களும் ஆயிற்று ஆய்பாடியே[87]

என்றும்,

பேணிச் சீருடைப் பிள்ளை பிறந்தீனில்
காணத் தாம்புகுவார், புக்குப் போதுவார்
ஆணொப்பார் இவன் நேர் இல்லைகாண் திரு
வோணத்தான் உலகாளும் என்பார்களே[88]

என்றும் பாசுரம் பாடிச் சிறப்பிக்கின்றார்.

ஆய்பாடியில் ஆயர்கள் அனைவரும் தமக்குத் தலைவனான நந்தகோபனுக்குப் பிள்ளை பிறந்ததைக் கேட்டு மிகுந்த

*மகிழ்ச்சியடைகின்றனர். என்ன தான் செய்வதென்று அறியாமல் சிலர் ஓடினர்; ஆடிப்பாடி மகிழ்ந்து ஆரவாரஞ்செய்து கண்ணன் எங்கே? என்று கேட்டனர். இவ்வாறு மகிழ்ந்து கூத்தாடியதாகப் புனைகின்றார் அவ்ஆழ்வார்.*

*கண்ணனைப் பார்த்தவர்கள், ‘இப்பிள்ளைக்குச் சமமானவர் ஆண்களில் ஒருவருமில்லை என்று சொல்லி மகிழ்ந்ததாக இப்பாசுரம் பாடியுள்ளது, மேற்சுட்டிய புறத்திணையைப் பாசுரக் கருத்துக்கு உட்படுத்தியமையை வெளிப்படுத்துகின்றது.*

**நாள் மங்கலம்**

*பிறந்த நாளினைச் சிறப்பித்துக் கொண்டாடுவது ‘நாள் மங்கலம்’ என்ற துறையாகும். சங்ககால மன்னர்கள் அவர்தம் பிறந்த நாள் விழாவினைக் கொண்டாடினர். இதனை,*

மன்று தோறும் நின்ற குரவைச் சேரி தோறும்
உரையும் பாட்டு ஆட்டும் விரைஇ
வேறு வேறு கம்பலை ...[89]

*என்று மதுரைக் காஞ்சி குறிப்பிடுகிறது. மேலும், திருமாலின் பிறந்த நாளான திருவோணம் நன்னாளாக அதே இலக்கியத்தால் பேசப்படுகின்றது.*

*பெரியாழ்வார் தனது பாசுரத்தில், திருமால் அவதரித்த திருவோண நன்னாளில் எவ்விதக் குறையுமின்றிப் பல்லாண்டு வாழ வேண்டுமென்பதை,*

விடுத்த திசைக் கருமந்திருத்தித் திரு
வோணத் திருவிழாவில் ...[90]

*எனப்பாடி வேண்டுகிறார். பெருமான் பிறந்த திருவோண நாளாகிய அன்று மங்கல நீராட வருமாறு யசோதை அழைப்பதாக அமைத்து,*

..... நீ பிறந்த திருவோணம்
இன்று நீ நீராட வேண்டும்
எம்பிரான் ஓடாதே வாராய்[91]

*என்றும் அவர் பாடுகின்றார்.*

அத்துடன் திருவோணத் திருவிழாவின் சிறப்பினைப் பாடும் வகையில், திருவோணத் திருவிழாவிற்காக இராகத்தை ஒத்த பேச்சையுடைய பெண்களை அழைத்து அங்குரார்ப்பணம் செய்து, கண்ணனுக்குப் பல்லாண்டு பாடவைத்ததைச் சுட்டுகின்றார். விழாவிற்கெனக் கறியையும், அரிசியையும் பாத்திரத்தில் தயார் செய்து வைத்ததாகவும், அவன் பிறந்த நாள் வருவதால் அன்றைய நாளில் அவன் கன்றுகளின் பின்னே போகாது, வீட்டிலேயே இருக்க வேண்டுமென வேண்டுவதாகவும் பாடப்பட்டுள்ளமை சிறப்பானதாகும். இச்சிறப்பு,

திருநாள் திருவோணம் இன்று ஏழுநாள் முன்
பண்ணேர் மொழியாரைக் கூலி முளைஅட்டிப் பல்லாண்டு
கூறுவித்தேன்
கண்ணலம் செய்ய கறியும் கலத்தது அரிசியும் ஆக்கி
வைத்தேன் ...[92]

என்ற பெரியாழ்வாரின் பாசுரத்தின் வழி வெளிப்படுகின்றது. இதுவும் முற்குறித்த சிறப்புடையதே என்றும் கூறமுடிகிறது. ஆதலால், சங்ககாலத்தில் தொடங்கிய திருவோண நாள் விழாவின் சிறப்பு, பக்திக் காலத்திலும் தொடர்ந்து பேசப்பட்டது என்று துணிய முடிகிறது.

**கொற்றவை நிலை**

'கொற்றவை' போர்க்களத் தெய்வமாக, காவல் தெய்வமாகப் போற்றப் படுபவள். அத்தெய்வம் பற்றிப் பதிற்றுப்பத்து,

அரசு உவா அழைப்பக் கேட்டு அறுத்து இயற்றிய
அணங்குடை மரபின் கட்டில்மேல் இருந்து
தும்பை சான்ற மெய்தயங்கு உயக்கத்து
நிறம்படு குருதி புறம்படின் அல்லது
மடை எதிர் கொள்ளா அஞ்சுவரு மரபின்
கடவுள் அயிரையின் நிலை இக்
கேடு இல வாக பெரும! நின்புகழே![93]

என்கிறது. இதன் கருத்துப் பின்வருமாறு.

பகைவரின் யானைகளைக் கொன்ற கொம்புகளைக் கொண்டு கட்டில் செய்யப்பட்டதில் கொற்றவை இருக்கிறாள். அதன்மேல் வீற்றிருந்ததல்லாமல், தனக்கு அளிக்கப்படும் பலியினை ஏற்காததும், அயிரை மலையில் உறைந்திருக்கும் அவள், படையில் இறந்த வீரர்களின் மார்பினில் இருந்து, குருதி தெளிக்கப்பட்டலன்றிப் பலியினை ஏற்கமாட்டாள் என்பதும் அவளது தனிச்சிறப்பாகப் பேசப்படுகிறது. இக்கொற்றவை நிலையைத் திருமங்கையாழ்வார் தனது திருநெடுந்தாண்டகத்தில் எடுத்தாண்டுள்ளார். திருக்கோவலூர் காவலை யுடையதாகவும், அத்தலத்தைக் காப்பவள் விந்திய மலையில் தவம் புரிந்தவளாய், மிகுந்த அறிவுடையவளாய், எடுத்த செயலை விடாதவளாய், எம்பெருமானுக்கே அடிமைப்பட்டவளாய் உள்ளவள் என்றும் கூறித் துர்க்கையாக அவள் போற்றப்படுகிறாள். இது,

விந்தகம் மேய
கற்பு உடைய மடக்கன்னி காவல் பூண்ட
கடிபொழில் சூழ் . . . [94]

எனத் திருமங்கையாழ்வாரின் பாசுரத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது. சங்கப்பாக்களில் பேசப்பெறும் கொற்றவையாகிய பெண்தெய்வம், வைணவ அடியார்களின் பக்தி மேம்பாட்டினைச் சிறப்பித்துப் பேசுவதற்காகவும் திருமாலின் கருணையைப் போற்றுவதற்காகவும் துர்க்கை என்ற பெயரில், ஆழ்வார்களால் பேசப்பட்டுள்ளமை எண்ணி மகிழத்தக்கது.

**நால்வகைப் படைகள்**

தாளை, யானை, குதிரை, தேர் என்றும் நான்கு வகைப்படைகள் தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும் குறிக்கப்பட்டுள்ளன. புறநானூறு இவற்றை,

கடுஞ்சிதைத்த கொல் களிறுங் கதழ்பரிய கலிமா
நெடுங்கொடியே . . .[95]

என்றவாறு பட்டியலிட்டுக் கூறுகிறது. அதாவது, சிவனைப் போன்று விளங்கும் மாறன், ‘கொல்களிறும் விரைந்து செல்லும் குதிரையும், கொடி பறக்கும் தேரும், அஞ்சாத போர்மறவரும் உடையவன்’ என்று புகழ்ந்து பாடப்படுகிறான்.

*புறநானூற்றுப் பாடலொன்று, 'குதிரைப்படையானது கடல்நீரைப் பிளந்து செல்லும் தோணியைப் போலப் பகைவர் படைக்கடலைப் பிளந்து போரிட்டு' என்று குறிப்பிடுகிறது.*[96] *மேலும் அதே இலக்கியம்,*

வேலின் அட்ட களிறு பெயர்த்து எண்ணின்
விண் இவர் விசும்பின் மீனும்
தண்பெயல் உறையும் உறை ஆற்றாவே[97]

*எனப்பாடி, யானைப் படையின் சிறப்பினை விளக்குகிறது.*

*சங்க அரசர்களுக்குரிய படை வகைகள் புலவர்களால் பாடப்பட்டமை போன்று, பிற்கால ஆழ்வார்கள் திருமாலாகிய இறைவன் கைகளில் தாங்கியுள்ள ஐம்படைகளையும் போற்றிப் பாடியுள்ளனர். திருமாலின் வீரச்சிறப்பினைப் பாடும் திருமங்கையாழ்வார்,*

செம்பொன் இலங்கு வலங்கை வாளி
    திண் சிலை தண்டொடு சங்கம், ஒள்வாள்
உம்பர் இருசுடர் ஆழியோடு கேடகம்
    ஒண்மலர் பற்றி எற்றே
வெம்பு சினத்து அடல் வேழம் வீர வெண்
    மருப்பு ஒன்று பறித்து . . .[98]

*எனப் பாடியுள்ளார். அதாவது, வலத்திருக்கையில் பொன்னால் செய்யப்பட்ட அம்புகளையும் சார்ங்கம் என்னும் வில்லையும், கௌமோதகி என்னும் கதையையும், பாஞ்சசன்னியம் என்னும் சங்கினையும், இடக்கையில் நந்தம் என்னும் வாளையும், சக்கரத்தையும் கேடயத்தையும், மலரையும் தாங்கிக் கொண்டிருக்கும் சிறப்பினைப் பாடியுள்ளார்.*

*தற்காலத்தில் திருவிழாக்காலங்களில் திருவீதியுலா வரும் திருமால் இதுபோன்று தேர், யானை, குதிரை என்ற வாகனங்களில் உலா வருவதைக் காணமுடிகிறது. திருமாலுக்குப் படைக்கருவிகளும், படைகளும் இருந்தவாறு விழா நடைபெறுவதையும் அறியமுடிகிறது.*

**ஆற்றுப்படுத்துதல்**

*பரிசு பெற்ற பாணன் ஒருவன், பரிசு பெறச் செல்லும் பாணனுக்கு வள்ளலின் புகழினையும் அவனது இருப்பிடத்தையும் கூறி, ஆற்றுப்படுத்துவதே 'ஆற்றுப்படை'யாகும். இது சங்க இலக்கியங்களைப் பொருத்தவரை ஓர் இன்றியமையாத் துறை ஆகும்.*

*சோழன் உறையூர் நலங்கிள்ளியை நோக்கிச் சென்று, பரிசில் பெற்றுத் துன்பம் களையப்பட்ட பாணன் ஒருவன், மற்றொருவனை ஆற்றுப்படுத்துவதாகப் பாடப்பட்ட,*

உடும்பு உரித்தன்ன என்புஎழு மருங்கின்
கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது
சில் செவித்து ஆகிய கேள்வி நொந்து நொந்து
ஈங்கு எவன் செய்தியோ? - பாண! பூண்சுமந்து[99]

*என்ற பாடல் குறிக்கத் தக்கது.*

*மெய்யெலும்பு தெரியுமளவிற்கு வறுமையுற்றோர் பசியுடன் அவனிடம் சென்றால், அவ்வள்ளல் பசி நீக்கி மகிழ்விப்பான் என ஆற்றுப்படுத்துவதாகப் பாடப்பட்டதே இப்பாடலாகும். 'ஆற்றுப்படுத்துதல்' என்னும் இதே துறையைத் தனக்கு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொண்ட நம்மாழ்வார், தனது திருவாய்மொழியில்,*

நாம் உமக்கு அறியச் சொன்ன நாள்களும் நணிய ஆன;
சேமம் நன்கு உடைத்துக் கண்டமூர் செறி
பொழில் அனந்தபுரம் . . .[100]

*என்று பாடிப் புகழ்கின்றார். இப்பாசுரத்தில், திருவனந்தபுரம் சென்று அங்கு வீற்றிருக்கும் அனந்தபத்மநாபனைக் கண்டு வழிபட்டால், அவன் தன் அடியார்களுக்குத் தீவினைகள் நீக்கி, எல்லாவகைச் செல்வங்களும் வாய்க்கச் செய்து, நித்திய சூரிகளாகத் தேவருலகம் அனுப்புவான் என்ற கருத்துப் பொதிந்து சிறந்துள்ளது. இதனை ஆற்றுப்படுத்துதல் துறைக்குச் சுட்டிக் காட்டுகிறார் திரு.கோக்கலை ஜே.ராஜன்.*[101]

இதே பொருளினான தாக்கத்தினை,

சேரும் தண் அனந்த புரம் சிக்கெனப் புகுதிராகில்
தீரும் நோய் வினைகள் எல்லாம் திண்ணம்
நாம் அறியச் சொன்னோம்
பேரும் ஓர் ஆயிரத்துள் ஒன்றுநீர் பேசுமினே[102]

என்று வரும் திருவாய்மொழிப் பாசுரத்தின் வழியும் அறிய முடிகிறது.

**சுரத்துய்த்தல்**

'சுரத்துய்த்தல்' என்பது கவர்ந்து கொண்டு சென்ற ஆநிரைகளுக்குத் துன்பம் ஏதுமின்றிக் காத்துப் பரிவுடன் அழைத்துக் கொண்டு செல்லுதல் ஆகும். அதாவது, அவற்றைப் பராமரித்து, அவற்றிற்கு உணவு, நீர் பருகுமாறு செய்தல் என்பதாகும் இதனை,

. . . . . இனநிறை செல்புற நோக்கி
சுட்டிய பையென எண்ணிக் கையிற் புல்லார்
சிலையின் மாற்றி யோனே[103]

என்ற புறநானூற்றுப் பாடற்பகுதியொன்று சான்று காட்டுகிறது.

'சுரத்துய்த்தல்' என்பது ஆழ்வார்ப் பாசுரங்களிலும் புகுத்திப்பாடப்பட்டுள்ளது. நந்தனின் மகனாக அவதரித்த கண்ணனானவன், ஆய்ப்பாடியில் பசுக்களை மேய்த்துப் பராமரிப்பதாகப் புனையப்பட்டுள்ள திருமங்கையாழ்வாரின் பாசுரமானது,

. . . கன்று மேய்த்து
விளையிட வல்லானை; வரை மீகானில்
தடம் பருகு கருமுகிலைத் தஞ்சைக்கோயில்
தவநெறிக்கு ஓர் பெருநெறியை[104]

என்பதாகும். இதில் அவர், 'கண்ணன், கன்றுகளை நீர்க்குடிக்க வைப்பதற்காகக் குளக்கரைக்கு அழைத்துச் செல்லுவான். அவை குடிப்பதற்காக, தான் முன்னே இறங்கிக் கையை முதுகிலே கட்டிக்கொண்டு, தான் தண்ணீர் குடிக்கும் நிலையில் நிற்பான். அவ்வாறு நடித்து, அப்பசுக்களை நீர் அருந்தத் தூண்டும் காளமேகம் போன்றவன்' என்ற கருத்துத்தோன்றப்

பாடுகிறார். கண்ணன் பசுக்களிடம் வைத்திருக்கும் பாசத்தினைப் புனைந்து சிறப்பித்துள்ளார்.

தனக்கு விருப்பமான பசுக்களை, கண்ணன் பேர் சொல்லி அழைத்து வந்து, தண்ணீர் குடிப்பித்து, மேயவிட்டுக் கொண்டு விளையாடி நிற்பான் என்பதை ஆண்டாளின் பாடலொன்று தெரிவிக்கிறது.

இடையர்கள் பசுக்களைப் பேர் சொல்லி அழைப்பதும், அவை மேயும் வனத்தின் பெருமையைப் பேசுவதும் சங்க இலக்கியத்தின் வழியுணர்ந்திருந்த ஆழ்வார்கள், அதனைப் பாசுரப்படுத்தியிருப்பதற்குச் சான்றாக,

இட்டமான பசுக்களை இனிது மறித்து நீர் ஊட்டி
விட்டுக் கொண்டு விளையாட விருந்தா வனத்தே கண்டோமே[105]

என்ற பாசுரத்தினையும் சுட்டி மகிழ முடிகின்றது.

**உடனிலை**

ஒருங்கே இருக்கும் இருவரைக் கண்டு மகிழ்ந்து பாடுதல் ‘உடனிலை’ என்ற புறத்துறையாகும். இத்துறையானது புறநானூற்றில் பேசப்படுகிறது.

ஒருங்கே வீற்றிருந்த சோழ மன்னனையும் பாண்டிய மன்னனையும் பாடியதாக வரும்,

தமிழ் கெழு கூடல் தண்கோல் வேந்தே
பால்நிற உருவின் நேமியோனும் என்று
நீல்நிற உருவின் நேமியோனும் என்று
இருபெருந் தெய்வமும் உடன் நின்றா அட்டு
உருகெழு தோற்றமொடு உட்கு வர விளங்கி
இன்னீர் ஆகலின் இனியவும் உளவோ?[106]

என்ற பாடல் இதற்குச் சான்றாகிறது. பால் போன்ற நிறத்தினையுடைய பலதேவனும், நீல நிறத்தையும் சக்கரத்தையுமுடைய கண்ணனும் ஆகிய இருதெய்வங்களும் ஒருங்கு கூடியிருந்தாற் போன்று, பகைவர்க்கு அச்சம் தரும் தோற்றத்தோடு விளங்கி இருத்தலானது இனிய காட்சியாக உள்ளதென்பதைக் காரிக்கண்ணனார் பாடி மகிழ்கிறார்.

'உடனிலை' என்ற இத்துறையினை யடியொற்றிய நிலையில், பெரியாழ்வாரும் பாடியுள்ளார். பலராமனும், அவன் பின்னே கண்ணனும் சேர்ந்து செல்கின்ற அழகினைப் புனைந்து அவர் பின்வருமாறு பாடியுள்ளார்.

முன் நல் ஓர் வெள்ளிப் பெருமலைக்குட்டன்
மொடுமொடு விரைந்து ஓடப்
பின்னைத் தொடர்ந்து ஓர் கருமலைக்குட்டன்
பெயர்ந்து அடியிடுவது போல்
பன்னி உலகம் பரவி ஓவாப் புகழ்ப்
பலதேவன் என்னும்
தன்நம்பி ஓடப் பின் கூடச் செல்வான்[107]

பலராமன் கண்ணனுக்கு முன்னே ஓடுகிறான். அவனைப் பிடிக்க, கண்ணன் பின்னே ஓடுகிறான். இக்காட்சி, அழகிய வெள்ளிமலை பெற்ற குட்டி ஒன்று வேகமாக முன்னே ஓடிக் கொண்டிருக்க, அதனைப் பிடிக்க, கரிய மலை பெற்ற குட்டியானது தொடர்வது போன்றுள்ளது என்று பாடி மகிழ்கின்றார்.

**ஏம எருமை**

மறவர், பகைவரது களிற்றின் மேல் தனது வேலினை எறிந்து உடல் வலிமையால் போர் செய்வதைப் பற்றியும், அஞ்சாமல் எதிரிட்டு நிற்றலையும் பாடுவது 'ஏம எருமை' என்ற துறையாகும். இதனைப் புறநானூறு,

நீலக் கச்சை பூவார் ஆடை
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல் வருங் களிற்றொடு வேல் துரந்து இனியே[108]

எனப்பாடி, வீரனொருவன் கடிதாக வீசிய வேலானது, பகைவனின் யானையை நோக்கிச் செல்வதாகச் சித்திரிக்கிறது.

இத்தகைய செய்கையினைக் கூறும் இத்துறை, திருமங்கையாழ்வார் மற்றும் ஆழ்வார்ப் பாசுரங்களிலும் உண்டு. திருமாலானவன் யானையின் தந்தத்தை முறித்த செய்தியைத் திருமங்கையாழ்வார்,

போர் ஆனைக் கொம்பு ஒசித்த புள்பாகன்[109]

எனப்பாடுகின்றார். ஆண்டாளும் தனது பாசுரமொன்றில் இதே செய்தியை,

மருப்பொசித்த மாதவன் . . .[110]

என்று குறிப்பிட்டுள்ளமையினை அறிய முடிகிறது. இத்துறையின் உட்பொதிப்பினால், மேற்சுட்டிய பாசுரங்கள் சுவைமிக்கதாக உள்ளன எனவும் கூறமுடிகிறது.

**தானை மறம்**

'தானை மறம்' என்பது, ஒத்த ஆற்றல் காரணமாக இருபுறப்படைகளும் போரிட்டு மடியாதவாறு, ஒரு வீரன் தத்தம் படைகளைப் பாதுகாத்த திறத்தினைக் கூறுவதாக அமைவதாகும். போரினால் அழிவு ஏற்படக்கூடாது என்று நினைக்கும் திறத்தினைப் புறநானூறு காட்டுகிறது. இதனை,

எறியார் எறிதல் யாவணது? எறிந்தோர்
எதிர்சென்று எறிதலும் செல்லான்; அதனால்
அறிந்தோர் யார் அவன் கண்ணிய பொருளே
பலம் என்று இகழ்தல் ஓம்புமின்[111]

என்ற அடிகளின் மூலம் அறிய முடிகின்றது.

இதனை அடியொற்றிய நிலையில், பகைவனின் குற்றங்களைக் களைந்து, தனக்கு அடியாராக ஆக்கும் பண்புடையவன் திருமால், வைதாரையும் வாழவைக்கும் பண்பாளனாக இருப்பினும், தவறிழைத்தவனைத் தவிரவும் மற்றவர் அவனுக்குத் துணை நின்றாலும் அவர்களை விலக்கிய செய்தியை பிற்காலப் பாசுரங்களிலிருந்து அறிய முடிகிறது.

பகைவரான அரக்கர்கள் அழியும்படியாகக் கருடன்மேல் அமர்ந்து சென்று, மாவலியினுடைய தலையானது நிலத்தில் புரளும்படியாகவும், மற்ற அரக்கர்களை அங்கிருந்து மறையும் படியாகவும் செய்தவன் என்பதை,

பொருந்தா அரக்கர் வெம்சமத்துப் பொன்ற அன்று புள்ஊர்ந்து
பெருந்தோள் மாவலி தலை புரள பேர்ந்த அரக்கர் தென் இலங்கை
இருந்தார் - தம்மை உடன்கொண்டு அங்கு எழிலார் ஒளிப்ப . . .[112]

என்ற பெரிய திருமொழிப் பாசுரம் குறிப்பிடுகிறது.

மற்ற அரக்கர்களை விலக்கி, மாவலியையும் அழிக்காது பாதாளத்திற்கு அரசனாக அனுப்பியவன் திருமால் என்ற கருத்தில் மேற்குறித்த துறையைப் பொருத்திப்பார்க்க முடிகிறது.

**தும்பை**

'தும்பை' என்பது, மாற்றரசனுடன் போர் செய்வதைக் குறிக்கும் துறையாகும். இது புறநானூற்றில் வைத்து,

இறையும் பெயரும் தோற்றி நுமருள்
நாள் முறை தபுத்தீர் வம்பின், ஈங்கு என
போர் மலைத்து ஒரு சிறை நிற்ப யாவரும்
அரவு உமிழ் மணியின் குறுகார் . . .[113]

எனப் பாடப்பட்டுள்ளது.

பாசறையிலிருந்து சென்று வலிமையான படைக்கலன்களை ஏந்தி, கூற்றுவனைப் போல் வீரர்களின் புகழும், மன்னனின் புகழும் விளங்குமாறு போரிட்டதாக இப்பாடல் கருத்துத் தெரிவிக்கிறது.

இத்துறையைப் பாடவந்த திருமங்கையாழ்வார், இளஞ்சந்திரன் போன்று ஒளிவிடும் கோரைப்பற்கள் விளங்கப் போர்புரிய வந்த திருமால், அசுரர்களின் உடல்களை முறித்து எறிய, அசுரர்கள் வயிறு எரியும்படி வென்று நின்ற பெருமான் என்ற வகையில்,

பிறையின் ஒளி எயிறு இலக முறுகி
எதிர் பொருதும் எனவந்த அசுரர்
இரைகள் அவை நெறு-நெறு எனவெறிய[114]

என்று பாடுகின்றார்.

போர் செய்வோம் என்று வந்த அசுரர்களுடைய தோள்களும், கால்களும் பொடிப்பொடியாகும்படி நொடிப்பொழுதில் அம்புகளைச் செலுத்தியவன் என்ற பெருமானின் பெருமையை,

மூள எரி சிந்தி முனிவு எய்தி அமர் செய்தும்
எனவந்த அசுரர் . . .[115]

என்றும் அவர் பேசுகின்றார்.

**பொருண்மொழிக் காஞ்சி**

'பொருண்மொழிக் காஞ்சி' என்ற துறையானது உயிர்க்கு நலந்தரும் இம்மை, மறுமைக்குரிய கடமைகளை எடுத்துக் கூறுவதாகும். இத்துறை,

தென் கடல் வளாகம் பொதுமையின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமையோர்க்கும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
உண்பது நாழி உடுப்பவை இரண்டே
பிறவும் எல்லாம் ஓர்ஒக் கும்மே
செல்வத்துப் பயனே ஈதல்;
துய்ப்பேம் எளிளே தப்புற பலவே[116]

என்றவாறு புறநானூற்றில் பதிவாகியுள்ளது.

இவ்வுலகினை ஆளும் அரசர் ஒருவர், வேட்டையாடும் அருளில்லா ஒருவர் என்னும் இவ்விருவர்க்கும் உண்ணும் உணவு நாழி அளவே; உடுப்பது இரண்டே. அதனால், செல்வத்துப் பயன் பிறர்க்குக் கொடுத்தலே. தாமே அடைவோம், உண்போம் என்று கருதாது வாழவேண்டும் என்னும் கருத்தைக் கூறுவதாக இப்பாடல் உள்ளது.

மெய்ப்பொருளை வலியுறுத்தும் கருத்துகள் அடங்கிய பாசுரத்தின் தேவையை உணர்ந்து, ஆழ்வார்களும் அவ்வாறு படைக்கத் துணிந்தனர் எனலாம். இத்துணிவின் வெளிப்பாடாகவே,

தோட்டம் இல்லவன் ஆத் தொழு ஓடை
துடவையும் கிணறும் இவை எல்லாம்
வாட்டமின்றி உன்பொன்னடிக் கீழே
வனப்பு - அகம் வகுத்துக் கொண்டிருந்தேன்
நாட்டு மானிடத்தோடு எனக்கு அரிது[117]

எனவரும் ஆழ்வார்ப் பாசுரத்தைச் சுட்டமுடிகிறது.

தொண்டரடிப்பொடியாழ்வார் மனிதர்கள் வேத சாத்திரத்தின்படி நூறாண்டுகள் வாழ்ந்தாலும், அதில் பாதியான ஐம்பதாண்டுகள் உறக்கத்தில் கழியும்; மீதமுள்ள ஐம்பதாண்டுகளும் ஒன்றுமறியாத குழந்தைப் பருவம்,

பிந்திய பாலப்பரும், உடல் வேட்கையால் துன்புறும் இளமைப்பருவம், நோயாளியாகித் துன்புறுதல் எனப் பல்வேறு துன்பங்களாயும் கழியும். இவ்வாறு இழிபிறவியைத் தான் விரும்பவில்லை என வெறுத்து மெய்பொருளை நாடுவதாக உரைக்கும் பாங்கில்,

பிணி பசி, மூப்புத் துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன்[118]

என்று இறைவனை வேண்டிப் பாடுகின்றார்.

**பூவை நிலை**

'பூவை நிலை' என்ற துறையானது திருமாலின் காத்தற்புகழினையும், பிரமன், சிவன் என்னும் ஏனோர்க்கு முறையே படைத்தல், அழித்தல் ஆகிய புகழினையும் மன்னரின் தொழிலுக்கு உவமித்தலாகும். இதனடிப்படையில் அமைந்த பாடற்பகுதி,

ஆரம் தாழ்ந்த அணிகிளர் மார்பின்
தாள்தோய், தடக்கை தகைமாண் வழுதி,
வல்லை மன்ற நீ நயந்து அளித்தல்[119]

என்றவாறு புறநானூற்றில் உள்ளது. இது 'பாண்டிய மன்னன் அருள் செய்தலில் பெரியவனாக, பொய்யை விரும்பாது வெவ்விய கதிரவனுக்கு ஒப்பானவன்' என்ற பொருளில் நாடுகாக்கும் தொழிலைச் சிறப்பித்துள்ளது.

இத்துறையை விரும்பிய நம்மாழ்வார். திருமால் காப்பதையே தொழிலாகக் கொண்ட திருமால், தன் தலைவியாகிய திருமகளுடன் ஏழு உலகங்களையும் காத்து அனைவரையும் மகிழ்விக்கிறார்கள் என்பதை,

இன்பம் பயக்க எழில் மலர் மாதரும்
தானும் இவ்ஏழ் உலகை
இன்பம் பயக்க இனிது உடன் வீற்றிருந்து
ஆள்கின்ற எங்கள் பிரான்[120]

என்னும் இத்தொடர்களில் வைத்துப் போற்றுகிறார்.

**மறக்கள வேள்வி**

*'வேள்வி நிலை' என்பது மன்னன் வேள்வி நடத்திய சிறப்பினைக் கூறுவதாக அமைந்த துறையாகும். சங்க காலத்தில் மன்னர்கள் வேள்வியின் மூலம் மேன்மைகள் அடையலாம் என நம்பினர். பசுக்களின் நெய்யை, நீர் நாணும்படிச் சொரிந்து வேள்வி செய்தனரென்பதை,*

நீர் நாண நெய்வழங்கியும்
எண் நாணப் பலவேட்டும்[121]

*என்று பதிற்றுப் பத்தும்,*

வதுவை விழவின் புதுவோர்க்கு எல்லாம்
வெவ்வாய் பெய்த பூதநீர் சால்க எனப்
புலவுக்களம் பெலிய வேட்டோய்[122]

*என்று புறநானூறும் கூறுகின்றன.*

*ஆழ்வார்ப் பாசுமொன்று தேவர்களை மகிழ்விக்க வேள்விகள் செய்ததைப் பாடுகிறது. நான்மறைகளைக் கற்ற வேதியர்கள் சோம வேள்வி செய்ய, அதன் விளைவாக நெற்பயிர்களானவை வயல்களிலே செழித்து விளங்கும் காட்சியை,*

தூய நான் மறையாளர் சோமூச் செய்ய
செஞ்சாலி விளை வயலுள் திகழ்ந்து தோன்றும்[123]

*என்று பாடுவதைக் கொண்டு, மறக்கள வேள்வியினால் மன்னன் வென்று நாடு செழித்தாற் போன்று, அறக்கள வேள்வியினால் உலகம் செழித்தது என்று பாடமுயன்று ஆழ்வார்கள் சிறந்தனர் எனக் கூறமுடிகிறது. மேலும் திருமாலே வேள்வியாகவும் விளங்குவதாக,*

வேதமும், வேள்வியும், விண்ணும் இருசுடரும்
ஆதியும் ஆனான் அருள் தந்தவா நமக்கு[124]

*என்ற பாசுர அடிகள் சுட்டுவதும் குறிக்கத்தக்கது.*

**பசு தானம் வழங்கிய செய்தி**

*வறுமை நீங்க, தானியம், பொன், பொருள் என்பனவற்றைத் தானமாகக் கொடுப்பது போன்று, பசுவையும் தானமாகக் கொடுக்கும் முறையானது பண்டு இருந்து வந்ததைப் பதிற்றுப்பத்து,*

குடக்கோ நெடுஞ்சேர லாதற்கு வேளள்
தண்டா ரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
தொண்டியுள் தந்து கொடுப்பித்துப் பார்ப்பார்க்குக்
கபிலையோடு குடநாட்டு ஓர் ஊர் ஈத்து[125]

எனக்குறிக்கிறது. இது பார்ப்பனர்க்குக் குரால் பசுக்களோடு ஓர் ஊரினையும் தானமாகக் கொடுத்ததை இயம்புகிறது.

பாசுரத்தில் பசுதானம் செய்த நிகழ்வினைப் பற்றி, நமனும் முற்கலனும் - அதாவது 'முற்கலன்' என்ற பாவி ஒருவனும் பேசுவதாகத் தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலைப் போற்றும் வகையில் பாடுகின்றார்.

முற்கலன் ஒருநாள் பசுதானம் செய்யும்போது 'கிருட்டினாய' என்று சொல்லித் தானம் செய்தான். பின்பு அவன் ஒருநாள் மாண்டபின், யமன் அவனை எதிர்கொண்டழைத்துச்சென்றான். முற்கலன் யமனை நோக்கி, 'என்னைப் பாராட்டிச் சிறப்பிக்கக் காரணம் என்னவென்று கேட்டான். அதற்கு யமன், 'இறை நாமம் சொல்லிப் பசுதானம் செய்ததால் அதன் பலனை இப்பொழுது காண்கிறாய்' என்று கூற, முற்கலனும் அவ்வாறே மீண்டும் இறை நாமம் சொல்ல, திருமாலின் திருநாமத்தை நரகத்திலுள்ளோர் கேட்டவுடன் நரகமே சொர்க்கமாக மாறியது எனப் பேசப்படுவது மரபு. இதனை,

நமனும் முற்கலனும்பேச நரகில் நின்றார் கேட்க
நரகமே சுவர்க்கம் ஆகும் நாமங்கள் உடைய நம்பி[126]

என்கின்றன ஆழ்வாரின் பாடலடிகள். இதனைக் கொண்டு, பசுதானம் பற்றிப்பேசும் சங்க இலக்கியக் கூற்றினை ஆழ்வார்களும் தமதாக்கிக் கொண்டனர் எனலாம்.

**வாழ்த்தியல்**

'வாழ்த்தியல்' என்பது அரசனுக்கு நலந்தரும் இம்மை மறுமைக்குரிய கடமைகளை எடுத்துக்கூறிப் புலவர்கள் வாழ்த்தும் துறையாகும். அவ்வாறு காரிகிழார் என்பவர் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை,

தண்டா ஈகைத் தகைமாண் குடுமி
தண் கதிர் மதியம் போலவும் தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்
மன்னிய பெரும! நீ நில மிசையானே[127]

என்றவாறு பாடுகின்றார்.

உலகில் குளிர்ந்த திங்கள் போலவும், செஞ்ஞாயிறு போலவும் எப்பொழுதும் நிலைத்து வாழுமாறு வாழ்த்துகிறார். அத்தன்மையில் பெரியாழ்வார், திருமாலுக்குக் குறையொன்றுமின்றி என்றும் மங்களமாக இருக்க வேண்டுமென மங்கள வாழ்த்தாகப் பின்வருமாறு வாழ்த்துகின்றார்.

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம் மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா
உன் சேவடி செவ்வித் திருக்காப்பு[128]

'வலிய தோளினையும் இரத்தினம் போன்ற நிறத்தையுமுடையவனே! அனேக கோடி இலட்சம் ஆண்டுகள் சிவந்த திருவடிகளின் அழகுக்குக் குறைவற்ற பாதுகாப்பு உண்டாகுக!' என்று பாடுவதைக் காணமுடிகிறது. பதிற்றுப்பத்தில் வரும்,

நின்நாள் திங்கள் அனைய வாக? திங்கள்
யாண்டு ஓர் அனைய ஆக! யாண்டே
ஊழி அனைய ஆக, உழி
வெள்ள வரம்பின ஆக![129]

என்ற பாடலடிகளும் எண்ணத்தக்கன. இவற்றுள் இம்மன்னனின் வாழ்நாள்கள் திங்களானவை ஆண்டுகள் போலும், ஆண்டுகளானவை ஊழிபோலவும் ஆக வேண்டுமென்றும் வாழ்த்துவது பதிவாகியுள்ளது.

இவ்வாழ்த்தியலின் இன்றியமையாமையினை உணர்ந்த ஆழ்வார்கள், இத்துறையைத் தமது பாசுரங்கள் பலவற்றில் பயன்படுத்தி எழுதினர் எனக் கூறமுடிகிறது.

**சிறுவர், சிறுமியர் விளையாட்டு**

*சிறுவர்கள் சிறுதேர் உருட்டி விளையாடிக் கொண்டிருப்பர். ஆங்குப் பெண்கள் முற்றத்தே உணவு தானியங்களை உலர வைத்திருப்பர். அப்பொழுது, அதனைக் கொத்தித் தின்ன வரும் கோழிகளை, மகளிர் தன் காதில் அணிந்துள்ள மகரக் குழைகளையெறிந்து விரட்டுவர் அக்குழைகளானவை, அச்சிறார் உருட்டும் மூன்று உருளைகளை உடைய சிறுதேரின் முன் உருளையில் பட்டு, அதனைச் செல்லவிடாது தடுக்கும். இது பட்டினப்பாலையில்,*

அகனகர் வியன் முற்றத்துச்
சுடர் நுதல் மடநோக்கின்
நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவியின்றுட்டும்
முக்காற் சிறுதேர் முன் வழி விலக்கும்[130]

*எனக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. இதனையடியொற்றிய நிலையில், பெண்கள் அமைத்து விளையாடும் சிற்றிலைச் சிதைத்து விளையாடும் கண்ணனின் செயலினை ஆழ்வார்ப் பாசுரங்கள் பல இடங்களில் பேசுகின்றன.*

*சிறுவர் சிறுமியர் விளையாட்டில் வைத்துப் பாடும் ஆழ்வாரின் பாசுரமொன்று குறிக்கத்தக்கது. சிறுமியர் ஆற்றங்கரை வெண்மணலில் சிற்றில் அமைத்து விளையாடிக் கொண்டிருக்க, அதனைக் கண்ட சிறுவர்கள், அதனைச் சிதைத்து விளையாடுவர் என்று வருணிக்கும்,*

பற்று மஞ்சள் பூசிப் பாவை மாரொடு பாடியில்
சிற்றில் சிதைத்து எங்கும் தீமை செய்து திரியாமே[131]

*என்ற பாசுர அடிகளில் சங்க இலக்கியத்தாக்கம் தென்படுகிறது.*

**கையறுநிலை**

*‘கையறு நிலை’ என்ற துறையானது, இறப்ப, இறந்தவரின் குற்றங்களைக் கூறாது, இறந்தவரின் குணங்கள் மற்றும் பெருமைகளைச் சொல்லி வருந்தி நிற்றலாகும். இதனைப் புறநானூறு பல இடங்களில் சுட்டியுள்ளது. அவற்றுள் ஒன்று,*

மண்முழா மறப்ப பண்யாழ் மறப்ப
இருங்கண் குழிசி கவிழ்ந்து இழுது மறப்பக்
கரும்பு ஆர் தேறல் சுற்றம் மறப்ப . . .[132]

என்ற பாடற்பகுதியாகும்.

இழப்பினால் முரசு இயம்ப மறந்தது; யாழானது இசைமீட்டலை இழந்தது. இதனால், அகன்ற பானையில் தயிர் கடைதலும் நின்று போனது. உழவர் உழுதொழிலை இழக்கும் வண்ணம் வருந்தினர் என்பதையும், அவ்வளவு சிறப்புப் பெற்ற மன்னனின்றி வாழும் நாட்கள், முன்போல் இராது என்பதை வெளிப்படுத்துவதாகவும் இப்பாடல் அமைகிறது.

இறந்தவர்களின் குணங்களைப் பாடுதலைப் பொதிந்துள்ள பெரியாழ்வாரின் பாசுர மொன்றனையும் இங்குச் சுட்ட முடிகிறது. ‘கையறு நிலை’யை வெளிப்படுத்துவதாகப் புனையப்பட்ட பெரியாழ்வார் திருமொழியில் வரும்,

கூடிக்கூடி உற்றார்கள் இருந்து குற்றம்நிற்க நற்றங்கள் பறைந்து
பாடிப்பாடி ஓர் பாடையில் இட்டு நரிப்படைக்கு ஒரு பாகுடம் போலே
கோடி மூடி எடுப்பான் முன்னம் . . .[133]

என்ற பாசுரம் குறிக்கத்தக்கது. உறவினர்கள் சேர்ந்து, இறந்தவர்கள் குற்றங்களைச் சொல்லாமல் நன்மைகளையே சொல்லிப் புலம்பிப் புலம்பி, உயிர் நீங்கிய உடலைப் புதிய ஆடையால் மூடி எடுத்துச் செல்லும் நிலையைக் கூறி, அவலச் சுவையை வெளிப்படுத்தி பக்தி செய்யச் சொல்கிறது இப்பாசுரம். மனிதநேயத்தைப் போற்ற நினைத்த சங்ககாலப் புலவர்களின் உளப்பாங்கினை நன்கு உணர்ந்திருந்ததாலேயே, ஆழ்வார்கள் இத்தகைய பாசுரங்களைப் படைத்து, பக்தி வளர்ச்சிக்கு உரமூட்டினர் எனக் கூற முடிகிறது.

**துறவறம்**

‘துறவறம்’ என்ற துறையானது துறவாகிய அறத்தின் சிறப்பைக் கூறுவதாகும். நிலையாமையை உணர்வோர் உலகப் பற்றினைக் கைவிடுவர். அவ்வாறு கைவிட்டால், துறவு என்பது ஒருவற்கு எளிதாகும்.

இதனுடன் தொடர்புடைய கருத்தினை,

பருதி சூழ்ந்த இப்பயம்கெழு மாநிலம்
ஒரு பகல் எழுவர் எய்தியற்றே;
வையமும் எழுவர் தூக்கின்; தலத்துக்கு
ஐயவி அனைத்தும் ஆற்றாது ஆகலின் திருவே
. . . . . . . . . . . . . .
விடா அதோர் இவன் விடப்பட்டோரே[134]

என்று புறநானூறு சுட்டுகின்றது.

கதிரவன் உலவும் இவ்வுலகினைப் பலர் ஆண்டனர். உலகையும் தத்துவத்தையும் ஆராய்ந்தால் தவத்திற்கு உலகம் கடுகளவும் ஒப்பாகாது. அதனால், வீட்டின்பம் விரும்பியவர்கள் இல்வாழ்வைத் துறந்தவர்களாயினர். பற்று விட்டாரைத் திருமகள் விடாமல் பற்றிக் கொள்வாள். அவ்வாறு திருமகளால் பற்றப்படாதவர்கள் இல்வாழ்வில் பற்று விடாதவராக இருப்பர் என்பது இப்பாடற் கருத்தாகும்.

பற்றுவிட்ட அத்தகையோரின் தன்மையையும் செயல்பாடுகளையும் எண்ணுபவர்களுக்கு நிலையாமை என்ற கருத்து ஊக்கமூட்டுவதாக இருக்கும்; இறையுணர்வும் மிகும் என்றும் கருதினர். இக்கருத்தினை ஏற்ற ஆண்டாள் தனது திருப்பாவையில்,

செங்கல் பொடிக் கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்[135]

என்றும்,

உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரி என்ற பேர் அரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்து. . . . . . . . .[136]

என்றும் பாடுகின்றார்.

'முக்கோல்பகவர்' என்று கூறப்படும் சித்து, அசித்து, ஈசுவரன் என்ற தத்துவத்தின் அடிப்படையில், வைணவ சந்நியாசி காவி உடையில் வாழ்ந்தனரென்பதைத் திருப்பாவை எடுத்துரைக்கிறது. மேலும், முனிவர்களும்

யோகிகளும் தம் உள்ளத்திற்கொண்டு நிதானமாக எழுந்து, 'அரிஅரி' என்று பலமுறை கூறிய வண்ணம் இருப்பர் என்பதையும் தெரிவிக்கிறது. திருமழிசையாரின்,

சிற்றெயிற்று முற்றல் மூங்கில் மூன்று தண்டர் ஒன்றினர்[137]

என்ற பாசுர அடியும் இச்செய்தியைக் கூறுகின்றது.

**மகட்பாற் காஞ்சி**

'மகட்பாற் காஞ்சி' என்ற துறையானது மகளைக் கேட்கும் தலைவனுக்கு அவளைத் தராது மாறுபட்டு நிற்கும் நிலையைக் கூறுவதாக அமைவதாகும். இது அக்காலச் சமுதாய நிலையை வெளிப்படுத்துவதாகும். பெண்தர மறுத்ததால் போர் ஏற்படுள்ளதை,

களிறு பொறக் கலங்கிய தண்கயம்[138]

என்றும்,

மரம் படுசிறு தீப்போல. . . . .[139]

என்றும் புறநானூறு புனைந்துரைத்துள்ளது.

சீதையைக் கவர்ந்து சென்ற தவறான செய்கையால் இராவணன் அழிந்த செய்தியையும், இலங்கை அழிவையும், அசோகவனம் தீயினால் அழிந்ததையும் இராமாயணம் தெரிவிக்கிறது.

பெண்ணின் காரணமாக நிகழ்ந்த போரினைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுவதை அறிந்த ஆழ்வார்கள், பெண்ணின் தனி உரிமையில் தலையிடுவதால் தீய விளைவுகள் ஏற்படும் என்ற கருத்தினை இராமாயணக் கூறுகளைச் சுட்டுவதன் மூலம் வெளிப்படத்தலாம் என்று கருதிக் தமது பாசுரங்களில் அச்செய்தியினை ஏற்றிப்பாடினர். கடும் போரினை ஏற்படுத்திய வலிமையான இராவணனுடைய நகரான இலங்கை பாழாகும்படியாக இராமன் போர்புரிந்ததைக் குறிக்கும் புராணக் கூறினைப் பெரிய திருமொழி,

விளைந்த வெம்போர் விறல் வாள் அரக்கர் நகர் பாழ்பட
வளைந்த வல்-வில் தடக்கை. . . . .[140]

என்று பாடியமை குறிக்கத்தக்கதாகும்.

**மறுமையுலகம் பற்றிய குறிப்புகள்**

மெய்யுணர்ந்து வீடுபேறடைவது குறித்துக் கூறும் குறுந்தொகை,

இறுமுறை என ஒன்று இன்றி
மறுமை உலகத்தும் மன்னுதல் பெறினே[141]

என்கிறது. மறுமை குறித்துப் பேசும் திருவள்ளுவரும்,

அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு[142]

எனச் சுட்டுகின்றார். துறக்க உலகம் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் நிரம்ப உண்டு.

தலைவன் திருமணத்திற்கான ஏற்பாடுகளுடன் வருகிறான் என்ற நற்செய்தியைத் தாயானவள் தன் மகளிடம் கூறுகிறாள். அதனைக் கேட்டு மகிழ்ந்து நல்ல செய்தி சொன்ன தாயானவள், 'தேவலோக அமிழ்தத்தையும் உணவாகப் பெறுவோளாக' என்று மகளாகிய தலைவி கூறுவதாக வரும்,

அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆக
பெரும் பெயர் உலகம் பெறீஇயரோ அன்னை[143]

என்ற குறுந்தொகை அடிகள், இக்கருத்து மிக்கனவாகும். இதன்மூலம் மறுமையுலகம் பற்றிய நம்பிக்கை மக்களிடம் இருந்தமை தெளிவாகிறது.

மறுமை குறித்த உணர்வினை வைணவ அடியார்கட்கும் ஊட்டினால் பக்திச் சிறப்பு மேலிடும் எனக் கருதிய ஆழ்வார்கள், அவ்வாறு பல பாசுரங்களைப் பாடினர்.

மறுமையுலகை அருளும் திருமாலைப் போற்றுவதாக அமையும் பாசுரங்கள் பல உள்ளன. அவற்றுள்,

எளிவரும் இயல்பினன் நிலை வரம்புஇல பலபிறப்பாய்
ஒளிவரும் முழுநலம் முதல் இல கேடுஇல வீடுஆம்
தெளிதரும் நிலைமையது ஒழிவுஇலன் முழுவதும் இறையோர்
அளிவரும் அருளினோடு அகத்தனன் புறத்தனன் அமைந்தே[144]

என்ற திருவாய்மொழிப் பாசுரம் குறிக்கத்தக்கது. இதில், திருவருளோடு அடியார்களுக்கு அகத்தானாய் இருந்தும் மற்றவர்களுக்குப் புறத்தானாக

*இருந்தும் வீட்டுலகைத் தருபவன் திருமால் என்ற கருத்து நன்கு பதிவாகியுள்ளது.*

*நம்மாழ்வாரும் வீட்டுலகம் பற்றிச் சங்க இலக்கியங்களில் கூறப்பட்ட கருத்துக்களை ஏற்றுக் கொள்கின்றார். அவர் இன்பமுடைய சுவர்க்கத்திற்கும் திருமாலே தலைவனாக இருக்கிறான் என்று உறுதியாக நம்புகின்றார். தனது அந்த நம்பிக்கையை வெளிப்படுத்தி வைணவத்தை வளர்க்கவேண்டும் என்று கருதியே,*

துன்பமும் இன்பமும் ஆகிய செய்வினை
ஆய் உலகங்களும் ஆய்
இன்பம்இல் வெம்நரகு ஆகிய இனியநல்
வான் சுவர்க்கங்களும் ஆய்
மன்பல் உயிர்களும் ஆகிப் பலபல....[145]

*என்று தனது இப்பாசுரத்தை அமைத்தார் எனக் கூறமுடிகின்றது.*

**நிலையாமை**

*இளமையின்பம் முதுமையில் இராது. எனவே, இளமையும் இன்பமும் நிலையற்றது என்பதைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. பெருங்காஞ்சி முதல் பாலைநிலை வரையிலான துறைகளில், போரினால் இறந்து கிடக்கும் வீரனின் உடலைக் கண்ட மனைவி, அந்நிலையினைக் கண்டு வருந்தினாள் என்பதைக் கூறி, இன்பம் நிலையில்லாதது என்பதை உணர்த்துகிறது. இதனை,*

இளமையும் காமமும் நின் பாணி நல்லா[146]

*என்ற கலித்தொகையினடி கூடச் சுட்டுகின்றது.*

*மலர்கள் மலர்வதும், வாடுவதும், பொருட்கள் அழிவதும் இயற்கையானதேயாகும். மனித வாழ்வும் அத்தன்மையதே. உலக அடிப்படைத் தத்துவம் இதுவே. 'தோற்றம் உள்ள பொருளுக்கு மறைவும், மறைந்த பொருளுக்குத் தோற்றமும் உண்டு' என்பதைப் பெரும்பாலோர் ஏற்பர். நிலையாமையே நிலையானது என்பதைச் சுருங்கக் கூறுவோரும் உண்டு என்பர் பெரியோர்.*

*வைணவத்தில் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களும் இறைவனது தொழில் என்ற நிலையில் பேசப்படுகிறது. இதனால் 'பொருட்களின் அழிவு என்பது மாற்ற முடியாத ஒன்று'*[147] *என்பது அறியப்படுகிறது.*

*தொல்காப்பியமானது நிலையாமையினைச் சுட்டுகின்றது. பிற்காலத்தில் தோன்றிய 'புறப்பொருள் வெண்பாமாலையும்', 'காஞ்சிப் பொதுவியல்' என்ற பகுதியில் மலைகள் உயர்ந்து நிற்கும் இடமான உலகத்தின்கண் தோற்றமுடையன யாவும் நிலைத்து நிற்பது இல்லை என்பதைக் கூறுகிறது.*

**காற்று, கனவு**

*காற்றைக் காட்டிலும் நிலையற்றதாக வாழ்நாள் கழியும். கனவுபோல் நாட்கள் கழிந்து இளமைபோய் முதுமை வரும் என்பதை அகநானூறு,*

. . . . . . . . . . .நாளும்
கனவுக் கழிந்தனையாவாகி. . . . . .
அரிது பெறு சிறப்பின் காமத்து இயற்கை[148]

*என்றவாறு கூறுகின்றது.*

**ஆற்று நீர்**

*ஓரிடத்தில் நில்லாத ஆற்றுநீர் தொடர்ந்து ஓடுதல் போன்றது காலக்கழிவும். இளமையும் அவ்வாறானது என்பதை மதுரைக்காஞ்சி,*

பொய்யறியா வாய்மொழியால்
புகழ் நிறைந்த நல். . . . . .
நல்ஊழி அடிப்படர
பல் வெள்ளம் மீக்கூற
உலகம் ஆண்ட உயர்ந்தோர் மருக[149]

*என்றும்,*

பிணைகெழு பெருந்திறல் பல்வேல் மன்னர்
கரைபொரு திரங்குங் கனையிரு முந்நீர்த்

திரையிடு மணலினும் பலரே உரைசெல
மலர் தலையுலகம் ஆண்டு கழிந்தோரே[150]

என்றும் பதிவு செய்துள்ளது.

மரணம் யாவர்க்கும் வருவது உறுதி என்பதைப் புறநானூறு,

விழுக்கடிப்பு அறைந்த முழுக் குரல்முரசம்
. . . . . . . . . . . . . . . .
நீர்நிலை பெருத்த வார் மணல் அடைகரை
காவு தொறும். . . . . . . . .
மடங்கல் உண்மை மாயமோ அன்றே[151]

எனக் குறிக்கிறது.

**நல்லறம்**

இளமை கழிந்து, மூப்பும் இறப்பும் வருமுன்னே நல்லறம் செய்யவேண்டுமென்பதைப் புறநானூறு,

பலரே தகைய.்.து அறியாதோரே;
அன்னோர் அற்று அதன் பண்பே அதனால்
நிச்சமும் ஒழுக்கம் முட்டிலை பரிசில். . . . .[152]

எனக் கூறுவதைப் போலவே,

இருகடல் உடுத்த இப்பெருங்கண் மாநிலம்
உடையிவை நடுவணது இடை பிறர்க்கு இன்றி
தாமே ஆண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே; சுடுபிணைக்
காடுபதி ஆகப் போகி. . . . . .[153]

என்று ஐங்குறுநூறும் தெரிவிக்கின்றது.

நாட்டு மக்கள் தீயநெறியினை விலக்கி நன்னெறியில் வாழவேண்டும். பலவகை அறங்களும் சேர்ந்து விளங்கினால்தான் மக்கள் அமைதியாக வாழமுடியும் என்பதை,

அறம் நனி சிறக்க அல்லது கெடுக

என்றவாறு ஐங்குறுநூறு கூறுகின்றது. நன்மை தருவனவற்றைச் செய்யாவிட்டாலும், அறமல்லாததைச் செய்தல் ஆகாது என்பதை,

நல்லது செய்தல் ஆற்றீராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்பது, அன்றியும்
நல்லாற்றுப் படுஉம் நெறியு மார் அதுவே[154]

என்ற புறப்பாடல் புலப்படுத்துகிறது.

### நிலையாத முன்னோர்

மதுரைக்காஞ்சி நேரடியாக அறிவுரை கூறாது, பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அவனது முன்னோன் பெருமையைக் கூறி நிலையாமையை வலியுறுத்தும் வகையில்,

நாடு எனும் பேர் காடு ஆக
ஆ சேர்ந்த வழி மா சேப்பப்[155]
ஊர் இருந்தவழி பாழ்ஆக
. . . . . . . . . . . . . . . . .[156]
பேய் மகளிர் பெயர்பு ஆக. . . . .[157]

என்றெல்லாம் குறிக்கின்றது.

நிலையாமை குறித்துச் சங்கப் பாடல்கள் கூறிய செய்திகளெல்லாம் அனைவரின் மனத்திலும் பதியத்தக்கவை எனலாம். ஆதலால், இவற்றை உள்வாங்கிக் கொண்ட ஆழ்வார்கள், தமது பாசுரங்களில் தத்தமது கண்ணோட்டத்தில் அவற்றை வெளியிட்டனர்.

பக்தர்களை நோக்கிய ஆழ்வார்கள், திருமாலே நிலையானவன் என்றும், பிற எல்லாம் நிலையற்றனவே என்றும் பாசுரங்களின்வழி பக்தர்கட்குத் தெரிவிக்க விரும்பினர். அவர்களது இத்தகைய விருப்பம் நிறைவேறியது எனக் கூறமுடிகிறது. அதற்குச் சான்றாக,

இன்று சாதல் நின்று சாதல் அன்றி யாரும் வையகத்து
ஒன்றி நின்று வாழ்தல் இன்மை கண்டும் நீசர் என் கொலோ[158]

என்ற பாசுர அடிகளை முன்வைக்க முடிகின்றது.

இளமை நில்லாது என்ற சங்ககாலக் கருத்தினை ஏற்கும் திருமழிசையாழ்வார், ஆயுளை அறுக்கும் வாள் போலவே நாட்கள் கழிய, உலகிலே வலிமையிழந்து கிழத்தன்மை அடைந்து இறந்து போகும் காலம் வருமென்பதை,

வாள்கள் ஆகி நாட்கள் செல்ல நோய்மை குன்றி மூப்பு எய்தி

மாளும் நாள் அது; ஆதலால் வணங்கி வாழ்த்து என் நெஞ்சமே[159]

*எனத் தனது பாசுரத்தில் குறிப்பிட்டுள்ளார்.*

*திருமழிசையாழ்வாருடன் இது குறித்து ஒத்த கருத்துடைய நம்மாழ்வார், பதவி நிலையாது, மன்னரும் நாட்டைவிட்டுக் காடாளும் தன்மைவாய்க்க வழியுண்டு என்பதை அங்கீகரிக்கும் வகையில்,*

. . . . . . . . . . . .

அடிசேர் முடியினர் ஆகி அரசர்கள் தாம்தொழ

இடிசேர் முரசங்கள் முற்றத்து இயம்ப இருந்தவர்

பொடிசேர் துகளாய்ப் போவார்கள் ஆதலின்....[160]

*என்றும்,*

ஒரு நாயகமாய் ஓட உலகுஉடன் ஆண்டவர்

கருநாய் கவர்ந்த காலர், சிதைகிய பானையர்[161]

*என்றும் பாடுகின்றார். மேலும்,*

நினைப்பான் புகில் கடல் எக்கலின் நுண் மணலில் பலர்

எனைத்தோர் உலகங்களும் இவ்உலகு ஆண்டு கழிந்தவர்

மனைப்பால் மருங்கு அறமாய்தல் அல்லால் மற்றுக் கண்டிலம்[162]

*என்ற கருத்து, மதுரைக்காஞ்சியின் கருத்துடன் நன்கு ஒன்றுபடுகிறது. வாழ்வானது மழைநீரில் தோன்றும் நீர்க்குமிழியைப் போன்றது என்ற நோக்கிலான,*

வாழ்ந்தார்கள் வாழ்ந்து மாமழை மொக்குளின் மாய்ந்து மாய்ந்து[163]

*என்ற நம்மாழ்வாரின் கருத்தும் சுவையானது.*

*‘நிலையாமை’யை உணர்பவரே வாழ்வில் அறம் செய்வர். இது கருதியே, அறம் வேண்டிய சங்ககாலப் புலவர்கள் இதனை வலியுறுத்தினர். இந்’நிலையாமை’ எண்ணம் குறிப்பாக, சமய அடியார்களிடம் நிலைநிற்க வேண்டும். அப்பொழுதுதான் பக்திநெறி சிறந்து விளங்கும் என்பதுணர்ந்த ஆழ்வார்கள், சங்கப் புலவர்களை அடியொற்றியே தமது பாசுரங்களை அமைத்துக் கொண்டனர் எனக் கூறமுடிகிறது.*

**முடிவுரை**

அகமல்லாத, புறம் சார்ந்த வாழ்க்கை ஒழுகலாறுகளைச் சுட்டும் புறத்திணைக் கூறுகளைச் சங்க இலக்கியங்கள் நயமுறப் பாடியுள்ளன. குடியாட்சியை அடிப்படையாகக் கொண்ட சங்ககாலத்தில், போர் என்பது தவிர்க்கவியலாத ஒன்றாகவே இருந்துள்ளது. அரசர்கள் பிற நாட்டுடன் போரிடும் பொழுதும் அறநெறியைக் கடைப்பிடித்தனர். அதற்குச் சான்றாக, போரின் தொடக்கமாகிய ஆநிரை கவர்தலையும், அவற்றைப் பாதுகாத்தலையும் சுட்டமுடிகின்றது.

ஆநிரை மற்றும் அதன் இனங்களோடு முல்லை நிலம் தொடர்புடையதாக இருந்தது. முதல், கரு, உரிப்பொருள்களைச் சங்கப் புலவர்கள் உட்பொதித்துச் சுவையான பாடல்களைத் தந்து புறவாழ்வின் மேன்மையினைச் சுட்டினர். இதே பாங்கில் ஆழ்வார்களும் பாசுரங்கள் இயற்றினர் என்பதைப் பல பாடல்கள் சான்று காட்டுகின்றன.

உண்டாட்டு, பாதீடு, நெடுமொழி கூறல், வேத்தியல், குடிநிலை, வஞ்சி, வள்ளன்மை போன்றன சங்க காலத்தில் மன்னன்மேல் வைத்துப் பாடப்பட்டன. பக்திக் காலத்தில் வைணவர்கள் திருமாலையே தமது மன்னனாக மனத்தில் கற்பித்துக் கொண்டனர். ஆதலால், புறத்திணைக் கூறுகள் அடங்கிய சங்க இலக்கியங்களைப் படித்துத் தேர்ந்த ஆழ்வார்கள், தமது பாசுரங்களில் இத்தகைய புறத்திணைக் கூறுகளை அமைத்துப் பாடினர். அப்பாசுரங்களும் பக்திச் சுவை குன்றாதனவாய் அமைந்துவிட்டன எனலாம்.

கண்படை நிலை, போர்க்கருவிகளைப் போற்றுதல், நிலையாமையை அறிவுறுத்தல், பொலிவு மங்கலம், நாள்மங்கலம் போன்ற புறத்திணைக் கூறுகளைச் சங்கப்பாடல்களின் வழிக் கற்று அமைக்கத் தெரிந்த ஆழ்வார்கள், அவற்றைத் திருமால் மீது ஏற்றிப் போற்றித் தமது பாசுரங்களைப் படைத்துள்ளதை அறியமுடிகிறது. இதனாலும், புறத்திணைக் கூறுகளைப் பொருத்தவரை, சங்க இலக்கியத் தாக்கம் ஆழ்வார்ப் பாசுரங்களில் உள்ளமையினை வெளிப்படுத்த இயலுகின்றது.

**சான்றெண் விளக்கம்**

1. தேவநேயரின் போர் குறித்த செய்திகள், **வைணவ இலக்கியம்,** ப.67.
2. **நெடு.**, அ.ள்.3-5.
3. **பெரியாழ்.தி.மொ.**, பாசு.266.
4. மேலது., பாசு.265.
5. **புறப்பொருள் வெண்பாமாலை**, நூ.14.
6. **பெரியாழ்.தி.மொ.**, பாசு.1258.
7. மேலது., பாசு.180.
8. **புறம்.**, பா.258.
9. ம.பெ.சீனிவாசன், **ஆழ்வார்களும் தமிழ் மரபும்.**
10. **பெரியாழ்.தி.மொ.**, பாசு.268.
11. **திருவாய்.**, பாசு.3117.
12. ம.பெ.சீனிவாசன், **ஆழ்வார்களும் தமிழ் மரபும்.**
13. **பெரியாழ்.தி.மொ.**, பாசு.1858.
14. **பெரும்பாண்.**, அ.ள்.29-32.
15. **புறம்.**, பா.298.
16. **திருச்சந். வி.**, பாசு.810.
17. **புறம்.**, பா.291.
18. **பெரியாழ்.தி.மொ.**, பாசு.1272.
19. **புறம்.**, பா.290.
20. **பெரியாழ்.தி.மொ.**, பாசு.1568.
21. **புறம்.**, பா.17:5-8.
22. **பெரியாழ்.தி.மொ.,** பாசு.1061.
23. **புறம்.**, பா.7:6-7.
24. **மதுரைக்.**, பா.125-126.
25. **பெரியாழ்.தி.மொ.**, பாசு.1079.
26. மேலது., பாசு.1402.
27. **புறம்.**, பா.91.
28. **திருவாய்.**, பாசு.3047.

29. **மதுரைக்.**, *அ.ள்.751-752.*

30. **பொருநர்.**, *பா.151-155.*

31. **திருப்பாவை**, *பாசு.500.*

32. **திருவாய்.**, *பாசு.2843.*

33. **குறுந்.**, *பா.91.*

34. **நற்.**, *பா.381.*

35. **சிறுபாண்.**, *அடி.102.*

36. **பதிற்றுப்பத்து**, *பா.60.*

37. **பெருமாள் தி.மொ.**, *பாசு.656.*

38. **புறம்.**, *பா.186:1-2.*

39. **திருவாய்.**, *பாசு.3293.*

40. **புறம்.**, *பா.23.*

41. **திருப்பாவை**, *பாசு.497.*

42. **புறம்.**, *பா.368.*

43. மேலது., *பா.369.*

44. **நான்மு.திரு.**, *பாசு.2404.*

45. **திருக்குறள்.** *எண்.85.*

46. **புறம்.**, *பா.257:5-7.*

47. **திருவிருத்தம்**, *பாசு.2514.*

48. **புறம்.**, *பா.57:5-11.*

49. **பெருமாள் தி.மொ.**, *பாசு.747.*

50. **புறம்.**, *பா.99:10-14.*

51. **பெரிய திருமொழி,** *பாசு.1275.*

52. **புறம்.**, *பா.95.*

53. **பதிற்று.**, *பா.66.*

54. **பெரிய திருமொழி,** *பாசு.1068.*

55. **புறம்.**, *பா.60.*

56. **முதல் திருவந்.**, *பாசு.53.*

57. **புறம்.**, *பா.170:14-17.*

58. **பெரிய திருமொழி,** *பாசு.1403.*

59. **மூன்றாம் திருவந்.**, *பாசு.2347.*

60. **புறம்.**, *பா.86.*

61. **பெரியாழ்.தி.மொ.**, *பாசு.60.*

62. மேலது., *பாசு.61.*

63. மேலது., *பாசு.62.*

64. **புறம்.**, *பா.20:12-20.*

65. மேலது., *பா.21.*

66. மேலது., *பா.42.*

67. **திருவாய்.**, *பாசு.3060.*

68. மேலது., *பாசு.3051.*

69. மேலது., *பாசு.3521.*

70. **புறம்.**, *பா.305.*

71. **பெரியாழ்.தி.மொ.**, *பாசு.99.*

72. மேலது., *பாசு.118.*

73. **புறம்.**, *பா.279.*

74. **பெரிய திருமொழி,** *பாசு.1113.*

75. **பதிற்றுப்.**, *பா.89.*

76. **புறம்.**, *பா.57.*

77. **திருவாய்.**, *பாசு.2968.*

78. **தொல். புறத்.**, *நூ.89.*

79. **புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம்,** கொளு *197.*

80. **புறம்.**, *பா.105.*

81. **பெரியாழ்.தி.மொ.**, *பாசு.44.*

82. **திருப்பள்ளி.**, *பாசு.917.*

83. **புறம்.**, *பா.383.*

84. **திருப்பாவை**, *பாசு.485.*

85. மேலது., *பாசு.489.*

86. **புறம்.**, *பா.100.*

87. **பெரியாழ்.தி.மொ.**, *பாசு.14.*

88. மேலது., *பாசு.15.*

89. **மதுரைக்.**, *அ.ள்.590-591.*

90. **பெரியாழ்.தி.மொ.**, *பாசு.9.*

91. மேலது., *153.*

92. மேலது., *பாசு.252.*

93. **பதிற்றுப்.**, *பா.79:13-20.*

94. **திருநெடுந்.,** *பாசு.2058.*

95. **புறம்.**, *பா.312.*

96. மேலது., *பா.299.*

97. மேலது., *பா.302.*

98. **பெரிய திருமொழி,** *பாசு.1120.*

99. **புறம்.**, *பா.68.*

100. **திருவாய்.**, *பாசு.3686.*

101. *நம்மாழ்வார் திருவாய்மொழி பத்தாம் பத்து அகல உரை.*

102. **திருவாய்.**, *பாசு.3680.*

103. **புறம்.**, *பா.257.*

104. **பெரிய திருமொழி,** *பாசு.1090.*

105. **நாச்சி. தி.மொ.**, *பாசு.637.*

106. **புறம்.**, *பா.58.*

107. **பெரியாழ்.தி.மொ.**, *பாசு.90.*

108. **புறம்.**, *பா.58.*

109. **பெரிய திருமொழி,** *பாசு.1651.*

110. **நாச்சி. தி.மொ.**, *பாசு.567.*

111. **புறம்.**, *பா.301.*

112. **பெரிய திருமொழி,** *பாசு.1699.*

113. **புறம்.**, *பா.294.*

114. **பெரிய திருமொழி,** *பாசு.1441.*

115. மேலது., *பாசு.1442.*

116. **புறம்.**, *பா.189.*

117. **பெரியாழ்.தி.மொ.**, *பாசு.437.*

118. **திருமாலை.**, *பாசு.874.*

119. **புறம்.**, *பா.59.*

120. **திருவாய்.**, *பாசு.3436.*

121. **பதிற்றுப்பத்து**, பா.54.
122. **புறம்.**, பா.372.
123. **பெரிய திருமொழி,** பாசு.1786.
124. **பெரிய திருமொழி,** பாசு.1786.
125. **பதிற்றுப்.**, பா.50.
126. **திருமாலை.**, பாசு.883.
127. **புறம்.**, பா.6.
128. **பெரியாழ்.தி.மொ.**, பாசு.1.
129. **பதிற்றுப்.**, பா.90:50-55.
130. **பட்டினப்பாலை**, அடி.20-25.
131. **பெரியாழ்.தி.மொ.**, பாசு.235.
132. **புறம்.**, பா.65.
133. **பெரியாழ்.தி.மொ.,** பாசு.378.
134. **புறம்.**, பா.358.
135. **திருப்பாவை**, பாசு.487.
136. மேலது., பாசு.479.
137. **திருச்சந்த.**, பாசு.803.
138. **புறம்.**, பா.341.
139. மேலது., பா.349.
140. **பெரிய திருமொழி,** பாசு.1381.
141. **குறுந்.**, பா.199, அடி.7-8.
142. **திருக்குறள்**, எண்.247.
143. **குறுந்.**, பா.83, அடி.1-2.
144. **திருவாய்.**, பாசு.2698.
145. மேலது., பாசு.3002.
146. **கலித்.**, பா.12, அடி.12-15.
147. ஈசான சிவாச்சாரியர் கருத்து.
148. **அகம்.**, பா.327, அடி.1-6.
149. **மதுரைக்.**, அடி.19-23.
150. மேலது., அ.ள்.234-237.

151. **புறம்.**, பா.364.

152. மேலது., பா.360, அடி.10-14.

153. **ஐங்.**, பா.7, அடி.2

154. **புறம்.**, பா.363.

155. **மதுரைக்.**, அடி.156.

156. மேலது., அடி.158.

157. மேலது., அடி.159.

158. **திருச்சந்த.**, பாசு.817.

159. மேலது., பாசு.863.

160. **திருவாய்.**, பாசு.3009.

161. மேலது., பாசு.3007.

162. மேலது., பாசு.3010.

163. மேலது., பாசு.3012.

# இயல் 4

# வேத, புராண, இதிகாசக் கூறுகள்

**முன்னுரை**

இருக்கு, யசுர், சாம, அதர்வணம் என்னும் நான்கு வகை வேதங்களும் முற்கால மக்களை உரிய நெறிகளால் இயக்கின எனலாம். வேதகாலத் தத்துவங்கள் பிற்கால இலக்கியங்களில் படிந்தன.

மதநம்பிக்கைகளை விளக்குவதற்காக எழுந்தவையே புராணங்கள் எனலாம். இவ்வுலகில் ஒன்பது கண்டங்களும், ஏழு தீவுகளும் உள்ளன என்பது புராணக் கருத்து. கருத்துள்ள பழைய கூறுகளைப் புது வடிவில் தருவன (புரா + நவ = புராணம்) புராணங்கள் எனக் கூறப்படுவதுண்டு. சமய வளர்ச்சியை முன்னெடுத்துச் செல்வனவாகப் புராணங்கள் விளங்கி வருகின்றன.

இதிகாசம் என்பதற்கு முற்காலம் அல்லது பழங்கதை என்று பொருள். ஆக, இம்மண்ணின் காலம், வரலாறு, மரபு என்பனவற்றைக் குறிக்கும் வேத, புராண, இதிகாசக் கூறுகள் சங்க இலக்கியங்களில் உள்ளன. அதன் தாக்கம் ஆழ்வார்ப் பாசுரங்களிலும் உள்ளமை குறித்து இவ்வியல் ஆய்கின்றது.

தமிழ் இலக்கியங்களுள், மணிமேகலையில் ‘புராணம்’ என்ற இச்சொல் முதன்முதலில் பயன்படுத்தப்பட்டுள்ளது. பழைமையான பண்புகள் நிறைந்த நாட்டுப் பாடல்களில் வாய்மொழிக் கதை வடிவமே புராணமாகுமென்பர். முந்தைய சமூகத்தில் வழக்கிலிருந்த கதைகளும், வீரதீரச் செயல்கள் செய்த மனிதர்களைப் பற்றிய நிகழ்வுகளும், வியக்கத்தக்க நிகழ்ச்சிகளுமே புராணங்களாக உருவெடுக்கின்றன என்பர். அவ்வாறு செவிவழிச் செய்தியாக வந்த தொன்மைக் கதைகளைச் செப்பனிட்டுக் கூறுவன புராணங்கள் ஆகும்.

**புராண அமைப்பு**

புராணம் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பொருளையும் நுணுக்கமாகக் கூறுமாறு அமைவதாகும். இறைவனின் திருவருட்செயல்களைப் புராணங்கள் புகழ்ந்து பேசுகின்றன. பழங்காலத்தில் செவிவழி அறியப்பட்ட பாத்திரங்களையும் கருத்துகளையும் கவிதை முறையில் எழுதி, அவற்றின் செயற்பாடுகளை எடுத்தியம்புவனவாகப் புராணங்கள் அமைந்துள்ளன.

காக்கும் கடவுளாகக் கருதப்படும் திருமாலுக்கெனக் கூறப்படும் அவதாரங்களைப் பற்றிய கதைகளைப் பதினெண் புராணங்களும், இராமாயணம், மகாபாரதம் என்னும் இதிகாசங்களும் புகழ்ந்து கூறுகின்றன.

ஆழ்வார்கள் திருமாலின் பத்து அவதாரங்களைப் பற்றிய புராணக் குறிப்புகளை இணைத்துப் பாசுரங்களில் பாடியருளியுள்ளனர். சமயக் கொள்கைகளையும், கடவுளர் குறித்த புராணக் கதைகளையும் புனைந்துரைத்து, அத்துடன் வேத வேதாந்தக் கருத்துக்களையும் நாலாயிர திவ்ய பிரபந்தம் மூலமாக இலக்கிய உலகிற்கு எடுத்துரைக்கின்றனர். வைணவப் பெரியாராக விளங்கிய வேதாந்த தேசிகர், 'தெளியாத மறைநிலங்கள் தெளிவாக அறிவோமே' என்பார்.

வேதக் கருத்துக்களை எளிதாக அறியும் வண்ணம் நம்மாழ்வாரின் பாசுரங்கள் அமைந்துள்ளன. நான்கு வேதங்களின் சாரமெனவே கருதுமாறு திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு நூல்களைப் படைத்து, அப்பான்மையினால் நம்மாழ்வார் 'வேதம் தமிழ் செய்த மாறன்' என்று வைணவ சமய உலகில் போற்றப்படுவது அறிந்ததே.

ஆழ்வார்கள் புராண இதிகாசத் தத்துவங்களின் வழியே வைணவத்தை வளர்த்துள்ளனர் எனக் கூறமுடிகிறது. இந்தியாவிலுள்ள மகாவிட்டுணுவுக்கான தலங்கள் பலவற்றை அவர்கள் பாடியுள்ளனர். அவர்தம் காலத்தில் பல புதிய கோயில்கள் அமையவும் அடித்தளமிட்டனர். ஆழ்வார்ப்

பாசுரங்களில் பாடப்பட்ட தலங்கள் எல்லாம், ‘திவ்ய தேசம்’ என்று போற்றப்படுகின்றன.

மன்னர்களையும், வள்ளல்களையும் பாடுவதைக் காட்டிலும், திருமாலைப் பாடுவதே மேன்மையானது என்பதும், வள்ளல்கள் தரும் செல்வங்களைக் காட்டிலும், பெருஞ்செல்வமான பேரின்பத்தைத் தரவல்லவன் திருமாலே என்பதும் வைணவர்களின் கருத்தாக இருந்தது. அதனாலேயே, அத்திருமாலே வேதத்தின் முழுமுதற்கடவுள் என்று அவர்தம் பாசுரங்கள் தெரிவிக்கின்றன.

சங்கப்புலவர்கள் சிலர், வைணவ சமயம் குறித்துப் பாடியவற்றைப் பிற்கால ஆழ்வார்களும் கொண்டு செலுத்தி, அச்சமயத்தை மேலும் வளர்த்தனர் எனலாம். தமிழக முல்லைநிலக் கடவுளான மாயோன் ‘மாலாக’ மாற்றப்பட்டு, வேத புராண இதிகாச மகாவிட்டுணுவுடன் ஒன்றிணைக்கப் படுகிறான். மேலும்,

> இருக்கு முதலிய வேதங்களிற் சொல்லப்படும் விட்ணு, இந்திரன் முதலியோரும், தமிழ்நாட்டு மாயோன், வேந்தன் முதலானோரும் ஒருவரல்லர்[1]

என்பர் ந.சி.கந்தையா. ஆதலால், வேதகாலத்தில் போற்றப்பட்ட விட்டுணு, சங்க காலத்தில் மாயோனாகச் சிறப்பிக்கப்பட்டுப் பின்னர் ஆழ்வார்கள் காலத்தில், திருமாலாகச் சிறப்பாகப் போற்றப்பட்டான் எனக் கருதமுடிகிறது.

கலித்தொகை, பரிபாடல், பெரும்பாணாற்றுப்படை போன்ற சங்க இலக்கியங்கள் திருமால் குறித்து மிகுதியாகப் பாடுகின்றன. மற்ற இலக்கியங்களிலும் திருமால் சிறப்பிக்கப்படுகிறான்.

புலவர்கள் என்போர், வாழ்வியலைப் பாடுதலும் நீதியுரைத்தலும் பல்கிப் பெருகியிருந்த நிலை மாறி, இறைவனைப் பாடுதலும், அடியார்களைப் புகழ்தலுமாகிய நிலை தோன்றியது. வைணவத்தைப் பொருத்தவரை ஆழ்வார்களின் அத்தகைய விருப்பம் பக்திப் பாசுரங்கள் என்ற நிலையில் திவ்ய பிரபந்தமாக உருவெடுத்தது எனலாம். தனிப்பாடல்கள் என்ற

பக்தி இலக்கிய வளர்ச்சி என்பது காப்பியக் கூறுகள் பல அமைய, புராண இலக்கியங்களாகப் பிற்காலத்தில் வளர்ச்சியுற்றன.

**சங்க இலக்கியங்களில் காணலாகும் புராணக் கூறுகள்**

புராணம் என்பது தொன்மையானவற்றைப் புதுமையாக்கிக் கூறுவது என்பதாக முன்னரே கூறப்பட்டது. மாணிக்கவாசகர் இறைவனின் தொன்மை குறித்துக் கூறும் பொழுது, 'முன்னைப் பழமைக்கும் பழம்பொருளாய், பின்னைப் புதுமைக்கும் புதுமை பெற்றவன்' என்கிறார். அவரது இக்கருத்தானது, புராணக் கூறுகளுக்கும் பொருந்தும் எனலாம்.

சங்ககால முதலே திருமால் வழிபாடு இருந்து வந்ததைச் சங்க நூல்களைக் கொண்டே தெளிய முடிகிறது. சங்கப் புலவர்கள் திருமால் பற்றிய பல செய்திகளையும், வேத உபநிடதம் கூறும் மெய்ப்புகளையும், அவதார நிகழ்வுகள், அவுணரை மாய்த்து உலகைக் காத்தது போன்ற பல சிறப்புகளையும் பாடியுள்ளதை இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது.

**மல்லரைச் சாய்த்தது**

திருமால் கண்ணனாக அவதாரம் எடுத்த பொழுது நிகழ்ந்ததாகக் கூறப்படுவதைக் கலித்தொகைப் பாடலடி,

மல்லரை மறம் சாய்த்த மால் போல்[2]

என்று குறிப்பிடுகின்றது. கண்ணபிரானை அழிப்பதற்காகக் 'கம்சன்' இரு அசுரர்களை ஏவுகிறான். அவர்களும், கண்ணன் ஏறி விளையாடி மகிழும் குருந்த மரத்தில் ஆவேசித்துக் காத்திருக்கிறார்கள். இதனையறிந்த கண்ணபிரான், குருந்த மரத்தையொசித்து மல்லர்களை அழித்தான் என்ற செய்தியை அது தெரிவிக்கின்றது. இச்செய்தி மேற்சுட்டிய அடியடங்கிய அவ்விலக்கியப் பாடலில் உள்ளது.

மல்லரை மறம் சாய்த்த மலர்த் தண் தார் அகலத்தோன்[3]

என்ற பாடலடி, கம்சன் ஏவிய மல்லர்களின் ஆற்றலைப் பயனின்றி நீக்கச் செய்தவன் என்றும், குளிர்ந்த மாலையை அணிந்த திருமார்பன் என்றும் கண்ணனைப் புகழ்ந்து பாடுகிறது.

ஆண்டாள் நாச்சியார் இதே கருத்தினை,

. . . . மல்லரை மாட்டிய

தேவாதி தேவனை . . .[4]

என்று பாடித் தெரிவிக்கின்றாள். கம்சனால் அனுப்பப்பட்ட மல்லர்களை அழித்த, தேவர்களுக்கெல்லாம் தேவனான கண்ணனிடம் பக்தர்கள் தம் தேவைகளைக் கூறி வணங்கினால் அவர்களுக்கு அவன் அருள் புரிவான் என்று கூறும் திருப்பாவையும் மல்லரை அழித்த செய்தியைச் சுட்டுவதை அறியமுடிகிறது.

**சந்திரனின் சாபத்தைப் போக்கியவன்**

கலித்தொகையில் ஏறுதழுவுதல் என்பது காட்சிப்படுத்தப்படுகிறது. காளைகளை வரிசையாக நிறுத்தியிருக்க, அவற்றில் கரியநிறக் காளை ஒன்றினை அடக்குவதற்குப் பொதுவன் முயல்கிறான். அவ்ஏறுதழுவும் நிலை,

பால் மதி சேர்ந்த அரவினைக் கோல் விடுக்கும்[5]

எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது. அதாவது, சந்திரனைக் கேது என்ற பாம்பு பிடிக்க, அப்பிடியினின்றும் சந்திரனை விடுவிப்பதற்காக வந்த கண்ணன்போல, அக்கரிய நிறக் காளை இருந்தது என்று கூறிக் காளையின் தோற்றம் விவரிக்கப்படுகிறது. இதில் சந்திரனைப் பாம்பு பிடித்தது என்றும், கண்ணபிரான் அதனின்று சந்திரனைக் காத்தான் என்றும் நிலவும் புராணச் செய்தி பெறப்படுகிறது. இதற்கேற்ற வகையில், ஆழ்வார்ப் பாசுரத்தில் சந்திரனைப் பற்றி வந்துள்ள செய்தியினைச் சுட்டமுடிகிறது.

மதித்தாய் போய் நான்கில் மதியார்போய்வீழ

மதித்தாய்; மதிகோள் விடுத்தாய்![6]

என்ற நான்முகன் திருவந்தாதியின் பகுதி, சந்திரன் இருபத்தேழு நட்சத்திரங்களையும் மணந்து கொண்டான் என்ற செய்தியைக் கூறுகிறது. அவர்களுள் ரோகிணியிடம் மட்டும் சந்திரன் கூடி வாழ, அதனால் மற்ற நட்சத்திரங்கள் வருத்தம் கொள்ள, இதனையறிந்த பெண்களின் தந்தையானவர் கோபத்தால் சபித்தார். அத்தகைய சாபத்தினால் சந்திரனின் உடலானது சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கியது. இதனால் வருத்தமுற்ற சந்திரன், திருவரங்கநாதரிடம் சரணடைந்து முறையிட, மீண்டும் கலைகள் நாள்தோறும்

வளரச் செய்தார் என்ற செய்தி பெறப்படுகிறது. இதனைத் திருமங்கையாழ்வார்,

பால் மதிக்கு இடர்தீர்த்தவன் . . .[7]

என்று சந்திரனுக்கு உதவியதைப் பாடுகின்றார். இவ்வாறு சந்திரனுக்குச் சாபம் தீர்த்த புராணக் கதையை, கலித்தொகை குறிப்பிடும் அதே பாங்கில் ஆழ்வார்ப் பாசுரங்களும் குறிப்பிடுவதை அறியமுடிகிறது.

**மகாபாரதப் போர்க்களம்**

இதிகாசமான மகாபாரதத்தில் வருணிக்கப்படும் போர்க்களக் காட்சியானது கலித்தொகையிலும் உரிய உவமைகளுடன் குறிக்கப்பட்டுள்ளது.

முல்லை நில ஆடவர்கள் ஏறுதழுவுகின்றனர். ஏறுதழுவும் இளைஞன் ஒருவனின் குடலைக் காளையொன்று கிழித்து எறிகிறது. இளைஞனின் எலும்பு முறிந்து, அவன் தசை கிழியக் கீழே கிடக்கின்றான். அப்பொழுது, இடியைப் போல இசைக்கருவிகள் இசைக்கப்பட, அவற்றைப் பார்க்கும் பொழுது, பாண்டவர் செய்த போர்க்களம் போல் உள்ளது என்பதாக,

வரி புனை வல்வில் ஐவர் அட்ட
பொரு களம் போலும் . . .[8]

என்ற கலித்தொகைப் பாடலடிகள் சுட்டுகின்றன.

மகாபாரதத்தின் செய்திகளைத் தாங்கிய ஆழ்வார்ப் பாசுரங்கள் பல காணப்படுகின்றன. அவற்றுள், பாரதப் போர்க்களத்தில் கண்ணன் தேரோட்டிய நிகழ்வு, கலித்தொகை கூறும் போர்க்களத்துடன் இணைத்துப் பார்க்கும் வகையில்,

கலக்க ஏழ்கடல் ஏழ்மலை உலகு
ஏழும் கழியக் கடாய்
உலகத் தேர் கொடு சென்ற மாயம்[9]

என்றவாறு பதிவு செய்யப்பட்டுள்ளது. ஏறு தழுவுகின்ற இடத்தில் இடி இடிப்பது போன்று இசை இசைக்கப்படுவதாகச் சித்திரிக்கப்படுவதற்கேற்ப, இங்குக் கண்ணபிரான் தேரோட்டும் பொழுது ஏற்படக்கூடிய ஆரவாரத்திலும், அதன் வேகத்திலும் ஏழு கடல்களும், மலைகளும், உலகமும் கலங்கியது என்றும், அவ்வாறு செலுத்தும் பொழுது பூமிக்கு எவ்விதத் துன்பமும் நேராது

அவன் நடத்தினான் என்றும், அந்த வியக்கத்தக்க போர்க்கள நிகழ்வினை நம்மாழ்வார்ப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**பாஞ்சாலிக்கு நேர்ந்த துன்பம்**

திரௌபதிக்கு நேர்ந்த துன்பம் முல்லைக்கலியில்,

அம்சீர் அசை இயல் கூந்தற்கை நீட்டியான்
நெஞ்சம் பிளந்திட்டு நேரார் . . .[10]

என்று விளக்கப்பட்டுள்ளது.

திரௌபதியின் கூந்தலைப் பிடித்துத் துரியோதனன் இழுத்து வருகிறான். அதைக் கண்ட பீமன், அவளது அத்துன்பத்திற்குக் காரணமாக இருந்த துரியோதனனை அழிக்க வேண்டுமெனச் சூளுரைக்கிறான். அச்சூளுரைக்கேற்பக் கூந்தலைத் தொட்டு இழுத்த துரியோதனனை மார்பில் அடித்துக் கொல்கிறான் அவன். மகாபாரதத்தில் வரும் இப்பகுதி, கலித்தொகையில் நன்கு பதிவு செய்யப்பட்டுள்ளது.

அத்தகைய செய்தியைக் குறிப்பாக விளக்கும் வகையில், ஆழ்வார்கள் அதனை உள்வாங்கிக் கொண்டனர் எனலாம். அவ்வகையில், திரௌபதிக்கு நேர்ந்த துன்பத்தினைக் கண்டு கண்ணபிரான் சினங்கொண்டு துரியோதனனை அழிக்க வேண்டுமென்பதற்காகப் பஞ்சவர்க்குத் துணைநின்று, பீமனால் அழியும்படி செய்தார் என்பதைத் திருமங்கையாழ்வார் தனது பாசுரத்தில்,

மாற்று அரசர் மணிமுடியும் திறலும் தேசும்
மற்று - அவர் தம் காதலிமார் குழையும்[11]

எனப் பாடுகின்றார்.

பெரியாழ்வாரும் இதே கருத்தினை உள்வாங்கிக் கொண்டார். அதனைத் தனது பாசுரத்தில் பதிவு செய்துள்ளார்.

பாண்டவர் தம்முடைய பாஞ்சாலி மறுக்கமெல்லாம்
ஆண்டு அங்கு நூற்றுவர்தம் பெண்டிர்மேல் வைத்த அப்பன்[12]

என்பது அப்பாசுரப் பகுதியாகும்.

*திரௌபதிக்கு நேர்ந்த கொடுமையை நினைத்துச் சினங்கொண்ட கண்ணபிரான், துரியோதனாதியரின் மனைவியர்க்கு அந்தத் துன்பத்தையெல்லாம் அனுபவிக்கும்படி செய்தவன் என்று பாடப்படுவதன் மூலம் பாஞ்சாலிக்கு நேர்ந்த துன்பமும், அதனால் சூரியனை அழிக்கக் கண்ணன் துணைநின்ற செய்தியும் பெறப்படுகிறது.*

*மேலும், திரௌபதியின் கூந்தலைப் பிடித்து இழுத்து வந்த 'துச்சாதனனின் குருதியைத் தலையில் இட்டுக் கூந்தலை முடிப்பேன்' என்று பாஞ்சாலி செய்த சபதத்தினை விளக்கும் வகையில் பெரியாழ்வார்,*

மைத்துனன் மார் காதலியை மயிர் முடிப்பித்து[13]

*என்று, திரௌபதியின் விரித்த கூந்தலை முடிக்கச் செய்தவன் என்ற செய்தியைப் பாடுகிறார்.*

**சூரியனை மறைத்த அசுரர்கள்**

*பிறரைத் துன்புறுத்தும் நோக்கமே உடைய அசுரர்கள் ஒருமுறை சூரியனை மறைத்து, உலகத்திலுள்ளோர் கண்ணொளியிழந்து துன்புறும்படியாகச் செய்தனர். அத்துன்பத்தினை நீக்கிச் சூரியனை வெளிக்கொண்டு வந்தவன் திருமால் என்ற புராணச் செய்தியைப் புறநானூறு,*

அணங்குடைஅ வுணர் கணம் கொண்டு ஒளித்தென
சேண் விளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது
இருள் கண் கெடுத்த பருதி, ஞாலத்து
இடும்பைகொள் பருவரல் தீரக் கடுந்திறல்
அஞ்சன உருவன் தந்து நிறுத் தாங்கு[14]

*எனப் பதிவு செய்துள்ளது.*

*திருமால் கதிரவனை வெளிக்கொண்டு வந்து செயத்ரதனை அழித்த இதே கதையைப் பெரியாழ்வார்ப் பாசுரமானது தெளிவாக்குகிறது.*

*கதிரவன் மறைவதற்குள் சயத்ரதனை அழிப்பேன் என்றும், அவ்வாறு அழிக்கவில்லையெனில், தன்னைத்தானே மாய்த்துக் கொள்வேன் என்றும் மகாபாரதப் போரில் அருச்சுனன் சபதம் செய்கிறான். இதனை அறிந்த*

*சயத்ரதன், பன்னிரண்டு காததூரம் சென்று தள்ளியிருக்கிறான். ஏனெனில், வழியில் தென்படும் மற்றவரை அழித்துக் கொண்டே அருச்சுனன் வந்து சேர்வதற்குள் இரவாகிவிடும் என்றெண்ணிக் கமல வியூகம் அமைத்திருந்தான். இதனையறிந்த கண்ணபிரான், தனது ஆழிப்படையைக் கொண்டு சூரியனை மறைக்கச் செய்தான்.*

*அதனால் துணிவுடன் வெளிவந்தவனை அருச்சுனன் அம்பினைச் செலுத்திச் சயத்ரதனின் தலையை வீழ்த்தி உருளச் செய்தான். இப்புராணச் செய்தியைச் சுட்ட எண்ணிய பெரியாழ்வார்,*

நாழிகை கூறி இட்டுக் காத்து நின்ற அரசர்கள் தம் முகப்பே
நாழிகை போக படை பொருதவன் . . .
ஆழிகொண்டு அன்று இரவி மறைப்பச் சயத்ரதன் தலையை
பாழில் உருளப்படை பொருதவன்[15]

*என்று பாடியுள்ளார்.*

**ஊழி முடிவில் உலகம் கடலுள் ஆழ்தல்**

*ஊழிக்கால முடிவில் கடல் பொங்கி பேரிரைச்சலோடு மேலெழும்பியது. அதனைக் கண்டு உலகவுயிர்களெல்லாம் அஞ்சி நடுங்கின. உலகத்தைப் படைத்த திருமாலே, மீண்டும் அதனைத் தன்னிடத்தே ஒடுக்கிக் கொள்வது போன்றதான நிகழ்வினைக் கலித்தொகைப் பாடலானது,*

ஒரு நிலையே நடுங்குற்று இவ்வுலகெலாம் அச்சுர
இருநிலம் பெயர்ப் பன்ன . . .[16]

*என்று பதிவு செய்துள்ளது.*

*இத்தகைய பிரளயகாலச் சூழலைப் பெரியாழ்வார்,*

உய்ய உலகுபடைத்து உண்ட மணி வயிறா
ஊழிதோறு ஊழிபல ஆலின் இலையதன் மேல்
பைய உயோடு - துயில்கொண்ட பரம்பரனே![17]

*என்ற பாசுரத்தில் வருணித்துள்ளார். உயிர்களெல்லாம் பிழைக்கும்படி உலகத்தைப் படைத்தவன். பிரளய காலத்தில் அதனைக் காப்பதற்காக அவற்றை உண்ட வயிற்றை உடையவன் என்று புகழ்கிறார். மேலும், பல*

ஊழிக்காலங்களிலும் ஆலிலையின் மேல் தன் திருவயிற்றிலுள்ள உலகங்கள் அசையாதவாறு மெல்ல யோக நித்திரை செய்த பெருமான் என்று பாடுவதைக் கொண்டு, ஊழிக்காலத்தின் முடிவில் உலகைத் தனது வயிற்றில் ஒடுக்கிக் காத்த நிகழ்வினைக் கலித்தொகையில் குறிப்பிடப்பட்டுள்ளவாறே, அப்புராணக் கூறினது சுவை மாறாத வண்ணம் பாசுரமாக்கப்பட்டுள்ளமை எண்ணி மகிழத்தக்கதாக உள்ளது.

**கண்ணன் ஆடைகளைக் கவர்ந்த செய்தி**

கண்ணனின் விளையாட்டுக்களில் ஒன்றாக, அவன் ஆயமகளிரின் ஆடைகளைக் கவர்ந்து, அவர்களை அதிர்ச்சியடையச் செய்வது குறிக்கப்படும். இதனை,

. . . . வடா அது
வண்புனல் தொழுதை வார்மணல் அகன்றுறை
அண்டர் மகளிர் தண்டழை உடீஇ இயர்
மரஞ் செல மிதித்த மாஅல்போல . . .[18]

என்று அகநானூறு பாடியுள்ளது.

ஆயமகளிர் யமுனையில் நீராடுகின்றனர். அவர்கள் கரையில் இட்டுவைத்த ஆடைகளைக் கண்ணபிரான் விளையாட்டாக எடுத்து மறைத்து வைத்துவிட்டுக் குருந்த மரத்தில் ஏறி இருந்தான். அப்பொழுது பலராமன் அந்தப் பக்கம் வருகிறான். ஆதலால், அம்மகளிர் தங்களை மறைத்துக் கொள்வதற்காக, அந்த மரத்தின் தழைகளைக் கொண்டு மறைக்கும்படியாகக் கிளைகளைத் தாழ்த்திக் கொடுத்தான் கண்ணபிரான். இப்புராணச் செய்தியையே மேற்சுட்டிய அப்பாடல் குறிப்பிடுகிறது.

கண்ணன் ஆயர் மகளிரின் ஆடைகளைக் கவர்ந்த செய்தியைத் திருமங்கையாழ்வாரும் சுவை குன்றாமல் பாடியுள்ளார். அப்பாசுரமானது,

துளை ஆர் கரு மென்குழல் ஆய்ச்சியர்தம்
துகில் வாரியும் சிற்றில் சிதைத்தும் முற்றா
இளையர் விளையாட்டொடு காதல் வெள்ளம்
விளைவித்த அம்மான் இடம்[19]

*என்ற பகுதியை உள்ளடக்கியதாகும். திருமங்கையாழ்வாரைப் போலவே பெரியாழ்வாரும் அச்செய்தியினை,*

அந்நாள் எங்கள் பூம் பட்டுக் கொண்ட

அரட்டன் வந்து அப்பூச்சிக் காட்டுகின்றான்[20]

*என்ற அடிகளில் குறிப்பிடுகின்றார். அகநானூறு ஆடையென்றுதான் குறிப்பிடுகிறதே தவிர, இன்ன ஆடை எனக் குறிக்கவில்லை. ஆனால், ஆய்ச்சியர் பாவனையில், தாங்கள் யமுனையில் நீராடிய அந்தக் காலத்தில் அவர்களின் பட்டாடைகளை வாரிக்கொண்டு சென்றான் என்று பெரியாழ்வார் பாடுகின்றார். பட்டாடைகளைக் குறிப்பிடுவது ஆழ்வார் காலத்திலான நாகரிக வளர்ச்சியின் பாற்பட்டதாகும் எனக் கூற முடிகிறது. இதே செய்தியைக் குறிப்பிடும் ஆண்டாளும்,*

குருந்திடை கூறை பணியாய் . . .[21]

*என்கிறார். மேலும் அவர்,*

கோழி அழைப்பதன் முன்னம் குடைந்து

நீராடுவான் போந்தோம்;

ஆழியஞ் செல்வன் எழுந்தான் அரவுஅணை

மேல்பள்ளி கொண்டாய்

ஏழமை ஆற்றவும் பட்டோம் இனி

ஒன்றும் பொய்கைக்கு வாரோம்

தோழியும் நானும் தொழுதோம்

துகிலைப் பணிந்தருளாயே[22]

*என்றும் பாடுகின்றார். கோழி கூவுவதற்கு முன்னம் வந்தவர்கள், சூரியன் உதித்து விட்டதாகவும், இனிமேல் தாம் குளத்திற்கு வரமாட்டோம் என்றும் கூறி, அதற்கும் மேலாகக் கண்ணனிடம், அவன் கேட்பதையெல்லாம் தருவதாகக் கூறியதுடன், பலரும் காணாதபடி போய்விடுகிறோம் என்று மிகவும் வேண்டி, சேலைகளைத் தந்துவிடுமாறு அவர்கள் கேட்பதை,*

. . . நீ வேண்டியது எல்லாம் தருவோம்

பலரும் காணோமே போவோம் பட்டாடை பணிந்தருளாயே[23]

*என நாச்சியார் திருமொழி குறிப்பிடுகிறது.*

இச்செய்திகளைப் படித்தறியும்பொழுது, கண்ணனின் திருவிளையாடல்கள் பாசுரங்களில் இணைத்துப் பேசப்படும் பொழுது, அப்பாசுரங்கள் பக்தி நயமிக்கனவாக விளங்குமென்பதையறிந்தே ஆழ்வார்கள், அப்புராணக் கூறுகளை உரியவாறு இணைத்துப் பாடியுள்ளனர் எனக் கூறமுடிகிறது.

**குருந்தொசித்தது**

கண்ணன் விளையாடுமிடங்களில் இன்றியமையதான யமுனையாற்றங்கரையும், அதன் அருகிலிருந்த குருந்த மரமும் ஆகும். கோபியரின் ஆடைகளை மறைத்து வைப்பதற்கும், ஏறிக்குதித்து விளையாடுவதற்குமாகக் குருந்த மரத்தைக் கண்ணன் பயன்படுத்துவான். இதனை அறிந்த கம்சன், கண்ணனைக் கொல்வதற்காக அசுரன் ஒருவனை ஏவுகிறான். அந்த அசுரன் கண்ணன் விளையாட வரும்பொழுது அவனை நலிவடையச் செய்ய வேண்டுமென்பதற்காக அந்தக் குருந்த மரத்தில் ஆவேசித்திருந்தான்.

இதனை அறிந்த கண்ணன், அம்மரத்தை முறித்துக் கீழே வீழ்த்துகின்றான். இவ்வரலாற்றினை,

கொல்லை யஞ்சவற்க . . . மாதவன்[24]

என்ற சொற்றொடருக்கு, ‘புனக்கொல்லையைச் சாய்த்தவிடத்து வஞ்சனையால் வந்து நின்ற அசுரனைக் கொல்வதற்காகக் குருந்தை முறித்த மாயவன்’ என்ற அடியார்க்கு நல்லாரின் உரைப் பொருளை மேற்கோள் காட்டுகின்றார் ந.சுப்புரெட்டியார்.

இக்கூற்றினையடியொற்றிய நிலையில் ஆழ்வார்ப் பாசுரமானது,

கொங்கலர்ந்த மலர்க் குருந்தமொசித்த கோவலன்[25]

என்று குறிக்கிறது. இதில் வரும் ‘குருந்தொசித்த’ என்ற தொடரானது, இப்புராண மரபை ஒட்டிய செய்தியையே எடுத்து வந்துள்ளதை அறியமுடிகிறது.

**வேதம் கூறும் இறைத் தத்துவம்**

வைணவ வழிபாட்டு மரபு விட்டுணுவை பரம்பொருளாகக் கருதினாலும், இக்கொள்கையை, சிந்தனையோட்டங்களின் ஒருமித்த நிலையாகும் என்று கூறும் ஆர்.ஜி.பண்டர்கர் போன்ற ஆய்வறிஞர்களின் கருத்தினை மேற்கோளாகக் காட்டி ந.சுப்புரெட்டியார் வைணவ மரபினைப் பற்றிக் கூறுகிறார்.

1. வேதங்களில் காணப்பெறும் விட்டுணுவைப் பற்றிய கருத்து. 2. மெய்ப்பொருளியல் சார்ந்த இறைவனான நாராயணன் பற்றியக் கருத்து. 3. வரலாறு சார்ந்த இறைவன் எனக் கருதப்பெறும் வாசுதேவனைப் பற்றிய கருத்து மற்றும் 4. ஆயர் இனத்தைச் சேர்ந்த இறைவனான கண்ணனைப் பற்றிய கருத்து என்பதாகும். இந்த நான்கு வகைக் கருத்துக்களும் இணைந்ததே இன்றைய வைணவ மரபாகத் திகழ்கின்ற ஒன்றாகும்.

வைணவ மரபின் தோற்றக் கருத்துக்கள் ‘இருக்கு’ வேதத்தில் காணப்பெறுகின்றன. ‘விட்டுணு’ என்ற சொல் ‘அனைத்திலும் பரவியிருத்தல்’ என்ற பொருளைத் தருவதாகும். எனவே, உலகமுழுவதும் பரவியிருக்கக்கூடிய தெய்வமாகத் திருமால் கருதப்படுகின்றான் என்பதை அறியமுடிகின்றது. காக்கும் கடவுளாகத் திருமாலினைக் கொண்டு, அவனது செயல்களாக, நல்லது செய்தல், அடியாரின் விருப்பத்தை நிறைவேற்றுதல், ஆற்றலனைத்தையும் தன்னுள் அடக்கியிருத்தல் என்பன கூறப்படுகின்றன.

இத்தகைய இறைவனிருக்கும் இடமாகக் கருதப்படுவது எதுவெனில், பக்தர்கள் நிலையான மகிழ்வுடன் வாழும் ஒளிபொருந்திய இடமே என்பர்.[26]

‘உயிர்கள் தன்னை இறைவனிடம் ஒப்படைத்தலே அவனை அடையும் வழி’ என்ற சரணாகதித் தத்துவமானது அன்பு நெறியே உயர்ந்தது என்பதையும், அதுவே எளிமையானது என்பதையும் குறிப்பிடுவதாகும்.

மேலும், விட்டுணுவை நோக்கி, வேள்வி இயற்றினால் பாதுகாப்பும், பொருள் மற்றும் நல்வாழ்வும் பெறலாம் என்ற குறிப்பும் வேதத்தில் கூறப்பட்டுள்ளது என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும்.

**யசுர்வேதம்**

விட்டுணுவுக்குத் திருப்படையல் அளிப்பதை வேதம் குறிப்பிடுகிறது. இதனையறியும்பொழுது, 'இருக்கு' வேதக் கருத்துக்களையும், 'யசுர்' வேதப் படையலையும், வேள்வி வழிபாடு நிகழ்த்தியமையும் சங்க இலக்கியங்களிலிருந்து அறியமுடிகிறது. ஆழ்வார்ப் பாசுரங்களிலும் இவ்வேதக் கருத்துக்கள் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

**சங்க இலக்கியங்களில் வேதக் கருத்துக்கள்**

நற்றிணையில் திருமாலானவன் 'வேத முதல்வன்' என்று போற்றப் பெறுகிறான். மேலும் அவன், தனது கையில் சக்கரப் படையுடன் விளங்கியமையினையும் நற்றிணையடிகள்,

மாநிலஞ் சேவடியாக தூநீர்
வளைநரல் பௌவம் உடுக்கையாக
விசும்பு மெய்யாக திசையாக்கையாக,
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
இயன்ற எல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வன் என்ப . . . [27]

என்றவாறு சுட்டுகின்றன.

ஊழிக்காலத்தில் மண்ணுலகமும், விண்ணுலகமும் பாழ்பட்டதையடுத்துத் திருமால் அவற்றைக் காத்தான். அதனால், 'வேதமுதல்வன்' என அவனைப் போற்றித் தொழுவதாகப் பாடும் பரிபாடல்,

ஊழி யாவரும் உணரா
ஆழி முதல்வ! நிற் பேணுதும், தொழுது[28]

என்கிறது.

*திருமால் எங்கும் பரந்து விரிந்துள்ளவன். அவனுக்கெனத் தனியுருவம் ஒன்றில்லை. இந்த அண்டசராசரங்களையும் உள்ளடக்கியதான ஒரு சக்தியே திருமாலாக வணங்கப்பட்டது என்பது இக்கூற்றின் சாரமாகும்.*

*திருமால் மறைகளால் போற்றப்படும் நிலையையும் கூறி, உயிரற்ற பொருட்களிலும் உள்ளவன் எனக் கருதப்படும் அந்தர்யாமித்துவத்தையும் நற்றிணை வெளிப்படுத்துகிறது. மேலும் பரிபாடல், நாவன்மை மிக்க அந்தணர் ஓயாது ஓதும் வேதத்திற்கும் மூலப்பொருளாக நிற்பவன் இறைவன் என்பதை,*

நாவல் அந்தணர் அருமறைப் பொருளே
அவ்வும் பிறவும் ஒத்தனை; உவ்வும்
எவ்வயினோயும் நீயே . . .[29]

*என்ற பாடலடிகளின் உணர்த்துகின்றது.*

*திருமாலின் உயர்வினை மற்றவர்கள் அறிந்து, எல்லை கூற விரும்பினால், அது முடியாத செயலாகும். அவ்வாறு கூறமுடியாத தன்மையனாக அவன் உள்ளான் என்பதும், அப்படிக் கூறவேண்டுமெனில், திருமால் தன்னைத்தானே கூறிக் கொள்ள வேண்டிவரும் என்பதையும் பரிபாடல் கூறுகிறது.*

*எல்லாப் பொருட்களிலும் பரந்து விரிந்துள்ள தன்மையினையும், வேதத்தில் மந்திரமாக இருக்கக் கூடியவன் அவன் என்பதையும்,*

தீயுனுள் தெறல்நீ; பூவினுள் நாற்றநீ,
. . . . . . . . . . . . . . . . . . . .
வேதத்து மறைநீ . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . .
முதல்முறை, இடைமுறை, கடைமுறைதொழிலில்[30]

*என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன.*

*காக்கும் தன்மையில் ‘பொறுமையானவன்’ என்ற பொருளில், இறைவன் நிலத்திற்கு ஒப்பாகிறான். இறைவனின் மணமும், ஒளியும்,*

அவனின் நிறமான காயாம்பூவிலுள்ளது. இறைவனின் பிறப்பும், மறைவும் காற்றிலுள்ளன. அவனிடமிருந்து தோன்றிய எல்லாப் பொருட்களிலும் பொருந்தி நிற்பவன். இத்தகைய வேதக் கருத்துகளைப் பரிபாடல் உள்ளிட்ட இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. ஆழ்வார்களும் இதனைக் கருதித் தத்தம் பாசுரங்களில் இவற்றை வைத்துப் படைத்துள்ளனர்.

வேத உபநிடதங்கள் வாய்வழியாக வழிவழி வந்தவையாக இருப்பதால், 'வாய்மொழி ஓடை' என்று இவற்றைப் பரிபாடல் குறித்ததாகக் கொள்ளமுடிகிறது. மேலும், தாமரை மலர்வதற்கு நீரோடை இன்றியமையாததாகிறது. திருமாலின் கொப்பூழில் மலர்ந்த தாமரையினின்றும், பிரமன் உலகைப் படைத்தல் என்ற செயலைச் செய்கிறான். அது வேதங்களால் விதிக்கப்பட்ட ஒன்றாக உள்ளதனால், வேதங்கள் வாய்மொழி ஓடையானது.

தாமரை மலர் படைப்புக்கு முதலாக வருவது என்பதும், அதற்கு அடிப்படையானது வேதமே என்பதும் நம்பிக்கையாதலால் அதனை ஓடையாகக் கூறினர் என்பர்.[31]

இத்தகைய வேதக் கருத்தினையடியொற்றிய நிலையில் நம்மாழ்வார், அனைத்துலகங்களிலும், அனைத்து உயிர்களிலும் திருமாலே நிறைந்திருக்கிறான் என்ற பொருளில்,

தானே ஆகி நிறைந்து எல்லா உலகும்
உயிரும் தானே ஆய் . . .[32]

எனத் திருவாய்மொழியில் பாடுகின்றார்.

இதே இலக்கியம், இதனைக் காட்டிலும் வேறு நுணுக்கங்களே இல்லை என்ற நிலையில், பழமையான வேதத்தில் சொல்லப்பட்ட சித்தாகவும், அசித்தாகவும் அவ்இறைவன் இருப்பதை,

. . . தொல்லை நல்நூலில் சொன்ன அருவும் உருவும் நீயே[33]

என்று பதிவுசெய்துள்ளது.

அந்தர்யாமித்துவத்தைக் கூறவந்த நம்மாழ்வார், உலகைப் படைக்கும் பிரம்மதேவருக்கும், தமோகுணம் கொண்ட உலகையழிக்கும் சிவனுக்கும் அந்தர்யாமியாக நின்று, சத்துவகுணத்தினைக் கொண்டு உலகைக் காக்கும் திருமால் மும்மூர்த்தியின் வடிவம் பெறுகிறான் என்பதை,

கொண்ட மூர்த்தி ஓர் மூவராய் . . .[34]

என்றும்,

யாவருமாய் யாவையுமாய்
எழில் வேதப் பொருள்களுமாய்
மூவராய் நின்ற முதலாய மூர்த்தி[35]

என்றும் பாடுகிறார். மேலும் வேதங்களால் பேசக்கூடிய நேர்மையான குணத்தையுடையவன் திருமால் என்பதை,

ஓதம்போர் கிளர் வேத நீரனே[36]

என்று அவ்ஆழ்வாரே குறிப்பிடுகின்றார்.

திருமால் வேதங்களுக்குத் தலைவனாக இருந்து, வேதங்களினுள்ளே மறைபொருளாகவும் இருக்கும் தன்மையினைத் திருமழிசையாழ்வார்,

அங்கம் ஆறும் வேதம் நான்கும் ஆகிநின்று
தாங்குகின்ற தன்மையாய் அவற்றுள்ளே[37]

என்கிறார். இவ்வாறு திருமால் என்பவன், மேலான தேவகணங்களாகவும், கீழான தாவரங்கள், புண்ணிய பாவம் கலந்த மனிதர்கள், விலங்குகள் ஆகியவற்றில் பேரொளியாயும் தோன்றி நிற்பதையும் பெரும்பாலான பாசுரங்கள் சுட்டுகின்றன.

வேத சாத்திரங்கள் அறிவதற்கு அரியன என்றறிந்தவாறாகக் கூறி, ஞானிகளும் முனிவர்களும் அரியைப் போற்றுகின்றனர். திருமாலே பிறவி நோயைத் தீர்க்கும் மருந்து என்று அறிந்ததும் இறைவனாலேயே தனக்குக் கிடைத்தது என்பதையும் நம்மாழ்வாரின் கீழ்க்கண்ட பாடலடிகள் சுட்டுகின்றன.

அறிந்தன வேத அரும்பொருள் நூல்கள்
அறிந்தன கொள்க அரும்பொருள் ஆதல்

அறிந்தனர் எல்லாம் அரியை வணங்கி

அறிந்தனர் - நோய்கள் அறுக்கும் மருந்தே[38]

என்று பாடுகிறார்.

வேதக் கருத்துக்களை, பரிபாடல் கூறும் கருத்துக்களுடன் ஒப்புடையதாக விளங்குமாறு ஆழ்வார்கள் படைத்துக் காட்டியிருக்கின்றனர். ஆதலால், வேதம், வேதப்பொருள் என்ற நிலையில் பாசுரங்கள் சங்க இலக்கியத் தாக்கம் பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

**வேள்வி**

வேள்வி செய்வதன் மூலம், இறைவனுடனான தொடர்பினை மனிதன் ஏற்படுத்திக் கொள்ளலாம் என வேதம் கூறுவதாகத் தெரிவிப்பர் சான்றோர். வேள்வி இயற்றி, அதன்வழி இறைவனை வழிபட்டால் நன்மை கிட்டும் என்று சங்க கால மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையினைப் பரிபாடல் வெளிப்படுத்துகிறது. இதற்கு அவ்இலக்கியத்தின்,

வேள்வியில் வேள்வி முதல்வனாய் அமைந்தவனே

படிநிலை வேள்வியுள் பற்றி ஆடு கொளலும்[39]

என்ற அடிகள் சான்றாகின்றன.

வேள்வி நிகழ்த்துவதால் நன்மை ஏற்படும் என்ற சங்ககாலத்திலிருந்த நம்பிக்கையினைப் பிற்கால ஆழ்வார்களும் புதுப்பித்துக் கொண்டனர் எனலாம். ஆதலால், ஆழ்வார்கள் அனைவரும் தத்தம் பாசுரங்களில் வேள்வி குறித்துப் பேசுகின்றனர் என்றும் கூறலாம்.

வேத இதிகாசப் புராணச் செல்வத்தைப் பெற்றுள்ள வடமொழியில் வல்ல அந்தணர்கள், வேள்வி செய்கின்றனர் என்பது வெளிப்படை. அவர்கள் செய்யும் வேள்விகளில் சொரியப்பட்ட நெய்யால் எழுந்த புகையானது, உயரே வானம் வரை வளர்ந்து சென்று தேவருலகத்தை மறைக்குமென்பதைத் திருவாய்மொழி,

வடமொழி மறைவாணர் வேள்வியுள் நெய் அழல்

வான் புகைபோய்

திட விசும்பில் அமரர் நாட்டை மறைக்கும்[40]

*என்ற அடிகளால் சுட்டுகின்றது. இவ்வாறு வேள்வி குறித்துப் பரிபாடல் கூறிய கருத்து ஆழ்வார்களின் எண்ணங்களில் ஒருவிதத் தாக்கத்தை ஏற்படுத்தியதாலேயே, அவர்களும் தமது பாசுரங்களில் இச்செய்தியை ஏற்றுப் போற்றினர் எனலாம். அதற்குச் சான்றே மேற்சுட்டிய திருவாய்மொழிப் பகுதி எனக் கூறமுடிகிறது.*

**திருமால் - காக்கும் கடவுள்**

*திருமால் காத்தல் தொழிலை மேற்கொண்டு மூவேழுலகங்களையும் ஒரு குடையின் கீழ்க் காத்தருளுகிறான் என்பது பண்டைக் கால முதல் வைணவரிடையே இருந்து வரும் நம்பிக்கையாகும். சங்க காலத்தில் நிலவி வந்த இந்நம்பிக்கையைப் பரிபாடலும் அறிவிக்கிறது.*

*காயாம்பு நிறத்தினையொத்த திருமால், ‘அறம்’ என்னும் குடைக்காம்பினையுடைய ‘அருள்’ என்னும் குடையைப் பிடித்து, அந்நிழலின் கீழ் மூவேழுலகத்தாரையும் தங்க வைத்துக் காக்கிறான். ஆயினும், தான் அக்குடை நிழலில் தங்காத பெருமையுடையவன் என்றவாறு பாடியுள்ளது பரிபாடல். இதனை அவ்விலக்கியத்தின்,*

பறவாப் பூவைப் பூவினோயே

அருள் குடையாக அறம் கோலாக

இருநிழல் படாமை மூவேழ் உலகமும்

ஒரு நிழல் . . .[41]

*என்ற அடிகளின் மூலம் அறியமுடிகிறது. மேலும், உலக உயிர்களைப் பாதுகாப்பதன் பொருட்டே, திருமால் தனது கையில் ஆழிப்படையாகிய சக்கரத்தினை ஏந்தியுள்ளான் என்ற கருத்தையும் பரிபாடல்,*

வாய்மொழி மகனொடு மலர்ந்த

தாமரை பொகுட்டு நின் நேமி நிழலே[42]

*என்ற அடிகளின் மூலம் முன்வைக்கிறது.*

அடியார்கள் வேண்டுவதை அவர்கள் எண்ணியாங்கு தரும் இயல்புடையவனாக இருந்து, அவர்களின் அன்பு என்ற ஒன்றிற்காக அவர்கட்கு ஏவலனாகவும், பக்தர்களாகிய அவ்வடியார்கள் செய்யும் செயல்கள் ஒவ்வொன்றும் தொய்வு பெறாது நடைபெற அனைத்திற்கும் காவலனாகவும் உள்ளவன் என்றும் பரிபாடல் திருமாலைச் சித்திரிக்கிறது. இச்சித்திரிப்பு,

அவரவர் ஏவலாளனும் நீயே
அவரவர் செய் பொருட்கு அரணும் நீயே[43]

என்ற அடிகளில் உண்டு.

'அறிவில் சிறந்தோர்', 'அவ்வாறு சிறவாதோர்' என்ற வேறுபாடின்றித் தன்னைப் போற்றுவோர்க்கு அருளிப் பாதுகாக்கும் பொறுப்பினைத் திருமால் ஏற்றுக் கொள்கிறான். அவ்வாறு காக்கும் கடவுளாக உள்ளவன் என்ற கருத்தானது பரிபாடல் முழுவதும் விரவியிருப்பதை அறியமுடிகிறது. பரிபாடல் தவிர்த்த சங்க இலக்கியங்கள் சிலவற்றிலும் இக்கருத்து உள்ளமையினை அறியமுடிகிறது.

'திருமால் காக்கும் கடவுள்' என்ற இக்கருத்தினைச் சங்க இலக்கியங்களில் சில சுட்டியுள்ளதைக் கருத்திற்கொண்ட ஆழ்வார்களும் தங்கள் பாசுரங்களின் வழியே, காப்பதற்கென்றே கோயில் கொண்டுள்ளவன் திருமாலாகிய எம்பெருமான் எனப் பாடிப் போற்றினர்.

திருமாலானவன், பக்தர்கள் அனுபவிக்கும் கொடிய பாவ பலன்களையெல்லாம் அவர்களை நெருங்காதவாறு பார்த்துக் கொள்கிறான். எதையும் ஆராய வேண்டுமென்று எமதூதர்களுக்குக் கட்டளையிடும் திருமாலே, தன் அடியார்களை ஆராய வேண்டாம் என்று கூறியருளுகின்றான் என்னும் கருத்தினை,

நீண்டான் குறள்ஆய் நெடு வான் அளவும்
அடியார் படும் ஆழ்துயர் ஆயஎல்லாம்
தீண்டாமை நினைந்து, இடையோர் அளவும்
செல வைத்த பிரான் அது அன்றியும்முன்

வேண்டாமை நமன்-தமர் என் தாமரை
வினவப் பெறுவார் அலர் என்று[44]

எனப் பெரிய திருமொழி குறிப்பிடுகிறது.

பெரியபிராட்டியான தாயார், உலகத்திலுள்ள அனைவர்க்கும் அன்னையாக விளங்கி அருள்பவள். அவளுக்குத் தனது குழந்தைகளான மக்களைக் காப்பதே மகிழ்ச்சி தரும்.

திருமால், மகாலெட்சுமியான பெரியபிராட்டிக்கு மகிழ்வை உண்டாக்கும்படியாகத் தன் அருளினால் ஏழு உலகங்களையும் காக்கிறான் என்ற செய்தியை நம்மாழ்வாரின்,

இன்பம் பயக்க எழில் மலர் மாதரும்
தானும் இவ் ஏழ் உலகை
இன்பம் பயக்க இனிது உடன் வீற்றிருந்து
ஆள்கின்ற எங்கள் பிரான்[45]

என்னும் பாசுர அடிகள் சுட்டியுள்ளன.

திருமால், தன்னைச் சரணடைந்தாரைக் காப்பவனாகவும், அவர்தம் துன்பத்தை நீக்குபவனாகவும் உள்ளான் என்ற குறிப்பினையும்,

அன்றி மற்று ஒன்று இலம் நின் சரணே என்று
அகல் இரும் பொய்கையின் வாய்
நின்று தன் நீள் கழல் ஏந்திய ஆனையின்[46]

என்றவாறு நம்மாழ்வார் தந்துள்ளதை அறியமுடிகிறது. முதலையின் வாயில் யானை அகப்பட்டபொழுது, அவனைத் தவிரத் தன்னைக் காப்பதற்கு எவருமில்லை என்ற கருத்தில், எம்பெருமானை நோக்கி, 'திருமாலின் திருவடிகளே சரணம்' என்று அது கதறியது. உடனே, கஜேந்திரனைப் பாதுகாக்க வேண்டித் திருமால் கருடாரூடனாக வந்து துன்பம் நீங்கிக் காப்பாற்றினான் என்ற செய்தியைத் தருவதாக அமைகிறது.

காப்பதற்கு உரியவனாக இருப்பதற்கான தகுதியாக இருப்பது தோற்றமும் அழிவும் இல்லாதவனாக இருப்பது. அழிவுடைய

பொருட்களையும் தனது உடைமையாகக் கொண்டு திருமால் காக்கின்றான் என்ற செய்தியை நம்மாழ்வார்,

தோற்றக் கேடு அவை இல்லவன் உடை
யான் அவன் ஒரு மூர்த்தியாய்,
. . . . . . . . . . . . . . .
நாற்றம், தோற்றம் சுவை ஒலி உறல்
ஆகி நின்ற எம் வானவர்
ஏற்றையே அன்றி மற்றொருவரை
யான் இலேன்[47]

என்றும், திருமாலடியார்கள் எவ்வளவு உயர்ந்தவர்கள் என்பதை,

அளிக்கும் பரமனை கண்ணனை ஆழிப்பிரான் தன்னை
துளிக்கும் நறும் கண்ணித் தூமணி வண்ணன் எம்மான் தன்னை
ஒளிக்கொண்ட சோதியை உள்ளத்துக் கொள்ளும் அவர் கண்டீர்
சலிப்பு இன்றி ஆண்டு எம்மைச் சன்ம சன்மாந்தரம் காப்பவரே[48]

என்றும் பாடிச் சுட்டுகிறார்.

கண்ணபிரான் பக்தர்களைக் காப்பதையே தன் இயல்பாகக் கொண்டவன். சோதி வடிவிலான இறைவனைத் தன் மனத்தில் வைத்து வணங்கி வழிபடும் அடியார்கள் எமக்குத் தலைவர்கள் என்கிறார் நம்மாழ்வார். இவ்வடியார்களே சலிப்பில்லாமல் தன்னை அடிமை கொண்டு இப்பிறவி மட்டுமின்றி, வரும் பிறவிகளிலும் காப்பாற்றுபவர் ஆவர் என்று பாடுகிறார். இவ்வாறு அடியார்களின் பெருமையைச் சிறப்பித்து, அதனினும் உயர்ந்த திருமாலைக் காட்டுவதாக அமைந்துள்ளதை அறிந்து மகிழமுடிகிறது.

**திருமாலின் அவதாரங்கள்**

**கூர்மம்**

திருப்பாற்கடலைக் கடைந்தபொழுது மந்தர மலையை மத்தாகவும், வாசுகி என்ற பாம்பினைக் கயிறாகவும் கொண்டு, தேவர்கள் ஒருபுறம் நின்றும், அவுணர்கள் ஒரு புறம் நின்றும் கடைந்தனர். அப்பொழுது, மலையாகிய மத்து அப்படியே கடலுள் அழுந்தியது.

அவ்வாறு அழுந்தியதால், கடலைக் கடைந்து அமிழ்தம் எடுக்கவியலாத நிலை ஏற்பட்டது. அந்நிலையில், மலையை மேலே சிறிது உயர்ந்த நிலையில் வைத்தால், கடைய ஏதுவாகுமென்றெண்ணிய திருமால், அதனை உயர்த்துதற்காக ஆமை உருக்கொண்டு, தன் முதுகில் அம்மலையை ஏற்றி வைத்து உயரச் செய்தான் என்றும், பின்பு கடைந்து அமிழ்தம் பெறும்படி செய்தான் என்றும் வரும் நிகழ்வினைப் பரிபாடல் திரட்டில் வரும்,

திகழ் ஒளி . . . வெற்பு
திகழ்பு எழ வாங்கித் தம்சீர் சிரத்து ஏற்றி
மகர மறிகடல் வைத்து நிறுத்தி[49]

என்ற அடிகள் சுட்டுகின்றன.

இத்தகைய செய்தியினைத் திருமங்கையாழ்வார்,

. . . .
வோ ராமையாய் விலங்கல் திரியத் தடங் கடலுள்
சுமந்து கிடந்த வித்தகன்[50]

என்றும்,

பளு வரை யொன்று நின்று முதுகிற் பரந்து
சுழலக் கிடந்து . . .
. . . . . . . . . . . அடலாமை
யான திருமால் நமக்கோர் அரண்[51]

என்றும் குறிப்பிடுகிறார். இவ்வாறு ஆமையாக வடிவு கொண்ட திருமாலின் புகழினைப் பாடும் சங்கப் பாடலடிகளை அடிப்படையாகக் கொண்டு இப்புராணக் கூறினைப் பாடி மகிழ்கிறார்.

**வராக அவதாரம்**

இரணிய கசிபின் சகோதரன் இரண்யாக்கதன் என்பான், நிலவுலகை எடுத்துக் கொண்டு கடலுக்கடியில் புகுந்து மறைந்திருந்தான். தேவர்கள் இதனைப் பற்றித் திருமாலிடம் முறையிட, திருமால் பன்றி அவதாரம் எடுத்து உலகை மீட்டார் என்பது புராணச் செய்தியாகும். இதனைப் பரிபாடல்,

கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய
ஊழி ஒருவனை உணர்தலின் . . .[52]

என்றும்,

ஊழி யழிக்க ணிரு நில முருகெழு

கேழலாய் மருப்பினுழுதோ யெனவும்[53]

என்றும் பாடிச் சிறப்பிக்கிறது.

பரிபாடலின் இத்தாக்கத்தினைத் திருமழிசையாரின்,

ஏனொருவனாய் எயிற்றில் தாங்கியதும் யானொருவன்

இன்றா அறிகிறேன் அல்லேன்[54]

என்ற பாசுர அடிகளில் காணமுடிகிறது. இவர், திருமாலானவன் வராகமாக வந்து பூமியைத் தன்னெயிற்றில் தாங்கியவாறு வந்து பூமியைக் காத்தவன் என்ற செய்தியைத் தான் முன்பே அறிந்திருந்ததாகக் கூறுகின்றார். ஆதலால், இப்பாசுரத்தில் சங்கப்பாடலின் தாக்கம் உள்ளமையினை வெளிப்படையாக அறியமுடிகிறது. இதே வெளிப்படைத் தாக்கத்தினைப் பெரியாழ்வாரின்,

ஏனத்து உருவாய் இடந்த இம்மண்ணினைத்

தானத்தே வைத்தானால் . . .[55]

என்ற பாடலடிகளின் மூலமும் அறியமுடிகிறது.

மழைமேகம் போன்ற கரிய நிறத்துடன் பன்றி வடிவம் கொண்டு, மகிழ்வுடன் விளையாடிக் கொண்டே இந்தப் பூமியைக் குத்தி எடுத்து, முன்பிருந்த இடத்திலேயே திருமால் அதனை வைத்தான் என்று கருத்துரைத்துப் போற்றுவது குறிக்கத்தக்கதாக உள்ளது.

**நரசிம்ம அவதாரம்**

பரமபக்தனைக் காக்கும் பொருட்டு எடுக்கப்பட்ட அவதாரம் நரசிம்மாவதாரமாகும். இரணியன் அனைத்துலகையும், உயிர்களையும் தனக்கு அடிமையாக்க விரும்பினான். அது அவனது ஆணவத்தின் வெளிப்பாடாகும். இதனால் துன்புற்றவர்கள் திருமாலிடம் முறையிட, அதன்பொருட்டுத் தலை சிங்கமாக, உடல் மனிதனாக அமைந்த உருவில் ‘நரசிம்மம்’ தோற்றம் பெற்றது. இரணியனை அழித்துப் பிரகலாதனைக் காத்தார் திருமால். பிரகலாதனின் திருமால் மீதான பக்தியை வெளிப்படுத்தும் பொருட்டு, காக்கும் கடவுளான திருமால் தோன்றியதாகப் பதியப்பட்டுள்ளது. இது நாடகப் பாங்கில்,

செய்தீர் செங்கட் செல்வ நின்புகழும்
புகைந்த நெஞ்சில் புலர்ந்த சாந்தில்
பிருங்கலாதன் பல பல பிணிபட . . .[56]

என்றும்,

நன்றா நட்ட அவன் நன் மார்பு முயங்கி
ஒன்றா நட்டவன் உறுவரை மார்பின்
படிமதம் சாம்ப ஒதுங்கி
இன்னல் இன்ன ரொடு இடி முரசு இயம்ப
வெடி படா ஓடி தூ தடியொடு
தடிதடி பலபட - வகிர் வாய்த்த உகிரினை[57]

என்றும் பரிபாடலில் வெளிப்பட்டுள்ளது.

இரணியன் அழிக்கப்பட்ட இச்செய்தியைக் குறிப்பிடும் பெரியாழ்வாரும்,

உரம் பற்றி இரணியனை உகிர்-நுதியால்
ஒள்ளிய மார்பு உறைக்க ஊன்றி
சிரம் பற்றி முடி இடியக் கண்பிதுங்க வாய்
அலரத் தொழித்தான்[58]

எனப் பாடியுள்ளார்.

**வாமனாவதாரம்**

மகாபலிச் சக்கரவர்த்தியின் ஆணவத்தினை அழிப்பதற்காக எடுத்தது வாமன அவதாரமாகும். சிறிய உருவம் கொண்டு வரும் அவன், கையில் தாழங் குடையுடனும் கமண்டலத்துடனும் மகாபலியின் யாக சாலையில் நுழைந்து நின்றான். தனக்குத் தானமாகத் தன் கால் அடியினால் மூவடி மண் வேண்டிக் கேட்கிறான். குறளுருவின் தன்மையினை அறியாத மகாபலி, தனக்கேயுரிய ஆணவத்துடன் ‘அளித்தேன்’ என்று கூறியவுடனே, திருமால் குறளுருவம் நீங்கிப் பேருருவம் கொண்டு காட்சியளித்தான். தனது ஓரடியினால் பூமியையும், மற்றொரு அடியினால் மற்ற உலகையும் அளக்க, மூன்றாவது அடிக்கு இடமின்றி இருந்ததைக் கண்ட மாபலி, தன் தலையைக் காட்ட, அதன்மீது தனது மூன்றாவது அடியை வைத்தான் திருமால்.

வந்தவனின் சிறிய உருவினைக் கண்டு எள்ளித் தானமளித்துத் தன்னைத்தானே இழந்து ஏமாற்றமடைந்த நிலையை அறிந்த மாபலிச் சக்கரவர்த்தி, தனது ஆணவம் மறந்து இறைவனை நினைந்தான். உடனே, திருமாலின் திருவடியைப் போற்றி வணங்கினான். இச்செய்தியை,

நீர் செல நிமிர்ந்த மாஅல் போல[59]

என்ற முல்லைப் பாட்டின் அடி குறிப்பிடுகின்றது. இதில், மாவலி வார்த்த நீர் கையில் பட்டவுடன், உயர்ந்தோங்கி நின்ற திருமாலின் வாமனாவதாரச் சிறப்புக் கூறப்படுகின்றது.

பெரும்பாலான ஆழ்வார்கள் பத்து அவதாரங்களையும் புகழ்ந்து போற்றுவதைப் பாசுரங்களின் வழி அறியமுடிகிறது. அவர்களுள் திருமங்கையாழ்வார்,

வன் கையான் அவுணர்க்கு நாயகன்
வேள்வியில் சென்று மணியாய்[60]

என்றும், பொய்கையாழ்வார்,

சேவடி நீட்டித் திசை நடுங்க விண் துளங்க
மாவடிவின் நீ அளந்த மண்[61]

என்றும் வாமன அவதாரம் பற்றிப் பாடியுள்ளமை குறிக்கத்தக்கது.

செந்தாமரை போன்ற திருவடிகளை நீட்டி, இவ்வுலகில் உள்ளோரும் மேலுலகங்களில் உள்ளோரும் நடுங்கும்படியாக ஒரு பெரிய உருவத்தினையெடுத்தான். அப்பெரிய வடிவத்துடன் திருமால் அளந்து தன் திருவடியின் கீழ் இட்டபூமி இதுதான் என்று வரும் பொய்கையாழ்வாரின் இப்புகழுரைகள், சங்கச் சாயல்கள் உடையன எனலாம்.

நம்மாழ்வாரும் இவர்களைப் போன்றே இந்த அவதாரத்தினை,

ஆழி எழ சங்கும் வில்லும் எழ திசை
வாழிஎழ தண்டும் வாளும் எழ அண்டம்
மோழை எழ முடி பாதம் எழ அப்பன்
ஊழி எழ உலகம் கொண்ட வாறே[62]

எனப் புகழ்ந்து பாடியுள்ளமையும் இத்தகையதே எனக் கூறமுடிகிறது.

**பரசுராம அவதாரம்**

*திருமால் மழுவினை ஆயுதமாகக் கொண்டு பரசுராமனாக அவதரித்தான். திருமாலின் இவ்வவதார நிகழ்வினைக் காட்டும் விதமாக, அவரது தந்தையைக் கொன்ற மன்னனின் வழியினரான இருபத்தொரு தலைமுறையை அழித்தவன் என்ற செய்தி சங்க இலக்கியங்களில் உண்டு.*

*இதற்குச் சான்றாக அகநானூறு இலக்கியத்தைச் சுட்டமுடிகிறது. பின்வரும்,*

கடாஅ யானைக் குழூஉச் சமம் ததைய
மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்
முள் முயன்று அரிதினின் முடித்த வேள்வி[63]

*என்ற அவ்இலக்கியப் பகுதி எண்ணத்தக்கது. இது, போர்க்களத்தில் யானைக் கூட்டங்கள் அழியும்படியாகப் பரசுராமன் அழிவு நிகழ்த்தியதைச் சுட்டுகிறது. இதனை உள்வாங்கிக் கொண்ட திருமங்கையாழ்வார்,*

முனியாய் வந்து மூவெழுகால்
முடிசேர் மன்னர் உடல் துனிய
தனிவாய் மழுவின் படை ஆண்ட
தாரார் தோளான்[64]

*என்று பாடுகிறார்.*

*பரசுராமனாய் அவதரித்து இருபத்தொரு தலைமுறை அளவும் முடி உடையவரான அரசர்களின் உடல்கள் தொலையும்படியாக, கூரிய வாயையுடைய கோடரிப்படையை ஆயுதமாகக் கொண்டு அழித்ததை இவ்ஆழ்வார் வருணித்துப் பாடியுள்ளார்.*

**இராமாவதாரம்**

*தயரதராமனாகப் பிறந்து, சீதையை மணந்து இராவணனால் சீதை கவரப்பட்டதும், அதன்பின் இராவணனை அழித்த செய்திகளையும் மற்றும் இடையில் நிகழும் நிகழ்வுகளையும் உவமைப்படுத்திச் சங்க இலக்கியப் புலவர்கள் பாடி மகிழ்ந்திருப்பதைக் காணமுடிகிறது.*

ஆழ்வார்கள் இராமாயணத்தின் தொடக்கம் முதல் முடிவு வரையிலான அனைத்துச் செய்திகளையும் பாசுரங்களில் அமைத்துப் பாடியுள்ளனர் எனலாம்.

அகநானூற்றில் இராமன், இராவணனை அழிப்பதற்காக வானரப் படைகளுடன் இலங்கை நோக்கிப் புறப்பட்டுச் செல்கின்றனர். அப்படிச் செல்லும் வழியில் கோடியக்கரையில் ஓர் ஆலமரத்தின் கீழ் அனைவரும் தங்குகின்றனர். அரிய மறைகள் தொடர்பாகச் சில அறிவுரைகளைக் கேட்டும், கூறியும் உரையாடிக் கொண்டிருக்கின்றனர். உரையாடலுக்கு இடையூறு நேருமாறு ஆலமரத்திலுள்ள பறவைகள் மிகுந்த ஒலி எழுப்பின. இது, அவர்களுக்குச் சினமூட்டியது. அதனால், அங்கிருந்த பறவைகள் ஒலிக்காதவாறு இராமன் தன் ஆணையினால் அடக்குகின்றான். இப்புராண நிகழ்வினை அகநானூறு,

வென் வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கி வரும் பௌவம் இரங்கு முன்றுறை
வெல்போர் இராமன் அருமறைக் குவித்த
வல்வீ லாலம் போல . . .[65]

என்ற அடிகளில் வருணிக்கின்றது.

புறநானூற்றிலும் இராமாயணத்தின் இக்கிளைக்கதைக் கூறு,

விரற் சொறி மரபின செவித் தொடக் குநரும்
அரைக்கு அமை மரபின மிடற்றுயாக் குநரும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
கடுந்தெறல் இராமனுடன் புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை
நிலம் சேர் மதர் அணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப் பொலிந்தா அங்கு[66]

எனப் பதிவாகியுள்ளது.

சோழ மன்னன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி என்பவன், ஊன்பதி பசுங்குடையார்க்குச் சில பரிசுப் பொருட்களை நல்கினான். அவற்றில்

பல வகையான அணிகலன்கள் இருந்தன. அவை பொருநர்க்கென்று செய்யப்படாதன. அதாவது, அவர்களால் பயன்படுத்தப்படாததாக, பழக்கத்தில் இல்லாத அணிகலன்களாகவும், போரில் பகைவரிடமிருந்து கொண்டதாகவும் அவை இருந்தன.

ஊன்பதி பசுங்குடையார், அவருக்குக் கொடுக்கப்பட்டதைத் தன் சுற்றத்தினருடன் பகிர்ந்து கொள்ள, அவர்கள் அனைவரும் ஆர்வமுடன் அணிந்து மகிழ்ந்தனர். இதனை ஒரு பொருநன் கூற்றில் வைத்து, அதற்கு உவமையாக இதற்குப் பொருந்திய இவ்இராமாயணக் காட்சியை ஒப்பிட்டுக் காட்டுகிறார் புறநானூற்றுப் புலவர்.

சீதையை இராவணன் கவர்ந்து சென்றபொழுது, அவள் தன் அணிகலன்களை வழியில் கழற்றியெறிந்தாள். அதனைக் கண்ட குரங்குகள் அவற்றை எடுத்து அணிந்து கொண்டன. அவற்றை அணிந்து கொள்ளும் வகையறியாமல் விரலில் அணிவதைச் செவியிலும், செவியில் அணிவதை விரலிலும், கழுத்தணிகளை இடுப்பிலும் அணிந்திருந்தமை நகைப்பிற்குரியது. இந்த இராமாவதாரக் கால நிகழ்வுக் குறிப்பினைப் புறநானூறு மனத்திற் பதியுறுமாறு பாடியுள்ளது.

நம்மாழ்வார் இராமாவதாரத்தைச் சிறப்பிக்கும் வகையில்,

கற்பார் இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ?[67]

என்றும், திருமங்கையாழ்வார்,

இலை மலி பள்ளி எய்தி - இது மாயம்

. . . . . . . . . . . . . . . . . . .

இலங்கைப் பொடியாக வென்றி அமருள்

சிலைமலி செஞ்சரங்கள் செலவுய்த்த[68]

என்றும், திருமழிசையாழ்வார்,

இராவணனை ஊனொடுங்க வெய்தான்[69]

என்றும், பெரிய திருமொழியில்,

செம் பொன் நீள்முடி எங்கள் இராவணன்

சீதை என்பது ஓர் தெய்வம் கொணர்ந்து[70]

என்றும் பாடியுள்ளமை எண்ணத்தக்கது.

இவற்றில் இராவணன் சீதையைக் கவர்ந்ததுவும், அசோகவனத்தில் சிறைவைத்ததுவும், இலங்கையை அழித்த நிகழ்வுகளும் காட்சிப்படுத்தப் பட்டுள்ளன. இவை, சங்க இலக்கியங்களின்வழி இதிகாசக் கூறுகளை உள்ளடக்கிப் பாசுரங்களை அமைத்துப் பாடி ஆழ்வார்கள் மகிழ்ந்தவாற்றை முன்வைக்கின்றன.

## பலராமவதாரம்

பலராம அவதாரம் பற்றிய குறிப்புகள் ஆங்காங்கே சங்க இலக்கியங்களில் வந்துள்ளமையினைக் காணமுடிகிறது. பலராமன், கண்ணன் அவதாரத்திற்கு முன்பாக, கண்ணனுக்கு அண்ணனாக அவதரித்தவன் என்பதும், அவனுக்குரிய கொடி, மேனி வண்ணம், படை என்றவாறு குறிப்பிட்டுப் பாடல்கள் புனையப்பட்டுள்ளன. சான்றாகப் பரிபாடல்,

விளையொடு புரையும் வாலியோற்கு அவன்
இளையன் . . .[71]

என்றும்,

பொலம் பனை கொடி யோற்கு[72]

என்றும் கூறுகிறது. நாஞ்சிலை ஆயுதமாக உடையவன் திருமால் என்பதை,

கொடுமிடல் நாஞ்சிலான்[73]

என்ற கலித்தொகைச் சொற்றொடர் குறிக்கின்றது. இக்கருத்திலான கலித்தொகையின் தாக்கத்தினை,

ஒற்றைக் குழையும் நாஞ்சிலும் ஒருபால் தோன்ற தான்தோன்றி[74]

என வரும் பெரியதிருமொழியின் அடியின்வழி அறியமுடிகின்றது. மேலும், மேனி வண்ணத்தைக் கூறவந்த திருமங்கையாழ்வார்,

வளைகொண்ட வண்ணத்தன் பின்தோன்றல்[75]

என்று குறிப்பிடுகிறார். இவற்றைக் கலித்தொகை, பரிபாடல் இலக்கிய அடிகளுடன் ஒப்பவைத்து எண்ண முடிகிறது.

## கண்ணன் அவதாரம்

சங்க இலக்கியங்கள் மற்ற அவதாரங்களை விடக் கண்ணனாக அவதாரமெடுத்து அவன் செய்த செயல்களையே மிகுதியாகக் குறிப்பிடுகின்றன. கலித்தொகையில் கண்ணன் ஏறு தழுவி நப்பின்னையை

மணந்தது, சிறுபிள்ளையாக இருந்தபொழுது குருந்த மரம் ஒசித்தது, ஆயர்குலக் கன்னியரின் ஆடையைக் கவர்ந்தது எனப் பலவற்றைத் தெரிவிக்கின்றது.

கண்ணன் வசுதேவருக்கும் தேவகிக்கும் மகனாகப் பிறந்து, அவளது மாமன் கம்சனால் துன்பம் விளைவிக்கப்பட, அதனைக் கண்ணபிரான் முறியடித்தவிதமும் குறிக்கப்பட்டுள்ளது.

இதிகாசச் செய்திகளாக மகாபாரதப் போர்க்களத்தில் கண்ணனின் செயல்களையும் அப்போருக்குக் கண்ணனே காரணமாக இருந்து பஞ்சவர்க்கு வெற்றியைக் கொடுத்தான் என்பதாகவும், பாண்டவர்க்காகத் தூது சென்றவன் என்பதையும் சங்க இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன.

கண்ணன் குறித்த செய்திகளைப் பல பாசுரங்களில் பெரும்பான்மை மாற்றங்களின்றி ஆழ்வார்கள் எடுத்தாண்டுள்ளனர். பெரியாழ்வார் தாய்பாவனையில் பாடிய பாசுரங்களில், கண்ணனின் குழவிப் பருவங்களைப் பாடி, பிள்ளைத்தமிழ் இலக்கிய வளர்ச்சியை மேலும் ஊக்குவித்தார் எனக் கூறமுடிகிறது.

**அன்ன வடிவம்**

அன்னப்பறவையாகத் திருமால் வடிவெடுத்ததைப் பரிபாடலானது,

மா விசும்பு ஒழுகு புனம் வறள அன்னச்
சேவலாய்ச் சிறகர்ப் புலர்த்தியோய்! எனவும்
ஞாலத்து உறையுள் தேவரும் வானத்து
நால் எண் தேவரும் நயந்து நின் பாடுவோர்
பாடும் வகையே எம்பாடல்தாம் அப்
பாடுவார் பாடும் வகை. . . . . .[76]

எனப் பாடுகின்றது. அதாவது, திருமால், வானிலுள்ள மேகங்கள் அனைத்தையும் வறண்டு போகுமாறு செய்துவிட்டு அன்னச்சேவலாகி பிரமன் என்ற நிலையில் தோன்றி வானுலகம் சென்றான் என்றும், அவ்வாறு சென்றவனை நிலவுலகத்திலும், மேலுகத்திலும் தேவர்கள் பாடித்துதித்தனர் என்றும், அத்தகைய வழியிலேயே தானும் துதித்ததாகவும் இளவெயினனார்

*பாடுகிறார். இவ்வாறு பரிபாடல் கூறும் அன்னமாக அவதாரமெடுத்த மேன்மையைத் திருமங்கையாழ்வாரின்,*

அன்னமாகி அன்று அருமறை
பயத்தவனே[77]

*என்று பாசுர அடிகள் கூறுகின்றன.*

*ஒரு காலத்தில் இவ்வுலகங்களெல்லாம் இருளில் ஆழ்ந்திருந்தது. அதனால், தேவர்கள் திருமாலை வணங்க, அப்பொழுது திருமால் அன்னமாகி அருமையான வேதங்களைக் கற்பித்தான் என்பதாக, அன்ன அவதாரத்தைப் பாடுகிறார் திருமங்கையாழ்வார்.*

**பிரம்மா, சிவன், திருமால் குறித்த செய்திகள்**

**சிவன்**

*சிவபெருமானின் தோற்றம், அவனது அற்புதச் செயல்கள் குறித்த செய்திகள் சங்க இலக்கியங்களில் உள்ளன. சிவனின் உருவத்தினைக் கூறும்பொழுது, நெற்றிக்கண்ணையுடையவன், சிறந்த நிறத்தன் என்பதாகவும், கழுத்தில் கண்டத்தினைக் கொண்டவன், நெற்றியில் சாம்பலை அணிந்தவன், புலித்தோலினை இருப்பில் உடுத்திக் கபாலம் கையில் ஏந்திக் கொண்டு, தலையில் பிறையைச் சூடியவன் என்பதாகவும் குறிப்புகள் உள்ளன. மேலும், எருதினை வாகனமாகக் கொண்டு அமர்ந்து வருபவன் என்றும் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.*

*பரிபாடல் நெற்றிக்கண்ணால் காமனை அழித்த செயலினைக் கூறுவதுடன், முப்புரம் அழித்த செயலையும்,*

முப்புரத்தை எரித்து இமயமலையை அப்பெருமான்
கொண்ட வில்லிற்கு
ஏற்ற நாணாகிப் பெருமானுக்கு. . .[78]

*என்றவாறு பாடுகின்றது.*

*முப்புரத்தை அழிப்பதற்கு ஆதிசேடன் துணைநின்ற குறிப்பும் இதில் உள்ளது. மேலும், கலித்தொகையின் கடவுள் வாழ்த்தில் வரும்,*

தேறு நீர் சடைகரந்து திரிபுரம் தீ மடுத்து[79]

என்ற தொடர் எண்ணத்தக்கது. இதில் கங்கையின் வேகத்தினைச் சிவன் தன் சடையில் அடக்கிக் கொண்டவன் என்பதும், சிவனின் கையில் பல இசைக்கருவிகள் முழங்க ‘கொடுகொட்டி’க் கூத்தினை ஆடுபவன் என்பதும் அழகுறச் சுட்டப்படுகிறது.

கொன்றை மாலை அணிந்த சிவபெருமான் உமையொரு பாகனாக இருப்பவன் என்பதையும், தட்சிணாமூர்த்தி வடிவம் கொண்டு கமண்டலத்துடன் காட்சியளிப்பவன் என்பதையும் கலித்தொகையானது,

சீர்மிகு சிறப்பினோன் மரமுதல் கைசேர்ந்த
நீர்மலி கரகம்போல் பழம்தூங்குமுடத்தாழ[80]

என்ற பாடலடிகளில் சிறப்பிக்கின்றது. அதாவது, மணல் மேட்டின் மேல் பலாமரத்தின் அடிப்பகுதியில் காய்த்துள்ள பலாப்பழமானது பார்ப்பதற்குத் தட்சிணாமூர்த்தி தொங்கவிட்ட கமண்டலம் போல் காட்சியளித்தது என வருணிக்கப்பட்டிருப்பது சுவையுடையதாக உள்ளது.

சிவபெருமான் குறித்த செய்திகளைக் கலித்தொகை, பரிபாடல் என்பன பாடியதை அடியொற்றிய நிலையில், ஆழ்வார்களும் சிறப்பாகப் பாடியுள்ளனர். சிவபெருமான் திரிபுரங்களை அழித்தவன் என்றும், நெற்றிக்கண்ணையுடையவன் என்றும், அவன் திருமாலின் திருமேனியில் வேறுபாடின்றியுள்ளவன் என்றும் பொய்கையார் பாடுகிறார்.

சிவன் திருநீறு அணிந்துள்ளமையும், தன்மேனியின் இடதுபுறம் பார்வதியைக் கொண்டுள்ளமையும், நீண்ட சடைமுடியைத் தரித்து அச்சடையில் கங்கையைத் தாங்கியுள்ளமையுமாகிய சில செய்திகளை அவர் கூறுகின்றார். அவரது அக்கூற்று,

ஏற்றான் எயில்எரித்தான் மார்பு இடந்தான்
நீற்றான் நிழல்மணி வண்ணத்தான் - கூற்று
ஒருபால் மங்கையான், வார்சடையான் நீள்முடியான்
கங்கையான் நீள்கழலான். . .[81]

எனப் பாடல் வடிவம் பெற்றுள்ளமையினைச் சுவைத்து மகிழ முடிகின்றது. இச்சுவை, கலித்தொகை இலக்கியம் வடித்துள்ள சுவையுடன் எவ்விதத்திலும்

மாறுபடவில்லை என்பதை உணரும்பொழுது, கலித்தொகையின் தாக்கம் பொய்கையாழ்வார்க்கு இருந்துள்ளமையினைச் சுட்டிக்கூற முடிகின்றது.

சங்க இலக்கியம் போன்றே தெட்சிணாமூர்த்தி உருவினைக் கூறவந்த பொய்கையாழ்வார், சிவபெருமான் ஆலமரத்தின் நிழலில் அமர்ந்து அகத்தியர், புலத்தியர், தட்சர், மார்க்கண்டேயர் என்கிற சீடர் நால்வர்க்கு ஆசானாக இருந்து கற்பித்ததாக (தர்மோபதேசம்) வரும் புராணக் குறிப்பினைத் தனது பாசுரமொன்றில் தந்துள்ளார். நஞ்சினை மிடற்றில் அடக்கியுள்ள சிவன் என்று தட்சிணாமூர்த்தியினைக் குறிப்பிட முனையும் அவ்ஆழ்வார்,

நெறிவாசல் தானேயாய் நின்றானை ஐந்து
பொறிவாசல் போர்க்கதவம் சாத்தி அறிவானாம்
ஆலமர நிழல் அறம் நால்வர்க்கு அன்றுஉரைத்த
ஆலம் அமர்கண்டத்து அரன்[82]

என்று பாடுகிறார்.

கலித்தொகையில் சுட்டப்பட்டவாறே தட்சிணாமூர்த்தியின் உருவை உவமைப்படுத்திக் கூறும் பொய்கையார், தென்முகக் கடவுளின் செயல்களை விளக்கிக் காட்டுவதும் ஒப்புமையுடையதாக உள்ளது. மேலும், கபாலம் ஏந்திய சிவனின் கையிலுள்ள கபாலத்தை நிறைக்கும் பொருட்டுத் திருமால் தன் மார்பினின்று குருதியைப் பாய்ச்சி அதனை நிரப்பினார் என்பதையும் பாடுகிறார். இப்பாடலிலும் சங்க இலக்கியத் தாக்கத்தினை உணரமுடிகின்றது.

### ஆழ்வார்கள் சிவபெருமானைப் பாடிய தலங்கள்

ஒரு சில திவ்யதேசங்களில் சிவபெருமானுக்கும் சந்நிதிகள் அமைக்கப்பட்டுள்ளன. சுற்றுக் கோயிலாகக் கருதப்படும் அவற்றுள், சிவனைப் பரிவார தேவதையாக நிலைப்படுத்தியுள்ளமையினை அறிய முடியும். அங்குச் சிவாகம பூசையே செய்யப்படுவது வழக்கமாக உள்ளது.

பாண்டிய நாட்டிலுள்ள வைணவ ஆலயங்களான திருக்கோட்டியூரிலும், திருக்குறுங்குடியிலும் இவ்வாறு சிவபெருமானுக்குத்

தனிச் சந்நிதிகள் உள்ளன. இவை, திருமங்கையாழ்வாரால் பாடப்பெற்றுள்ளன.

திருமங்கையாழ்வாரின்,

ஏறுமேறி இலங்கும் ஒண் மழுப்பற்றும்
ஈசற்கிசைந்து உடம்பிலோர்
கூறுதான் கொடுத்தான் குலமகட்கினி[83]

என்ற பாசுரப்பகுதியானது திருக்கோட்டியூரிலுள்ள சிவனைப் பாடியுள்ளமையினைச் சுட்டமுடிகின்றது. மேலும், அதே பாசுரம் திருக்குறுங்குடியிலுள்ள சிவனை,

அக்கும் புலியின் அதளும் உடையார் - அவர் ஒருவர்
பக்கம் நிற்க, நின்ற பண்பர் ஊர்போலும்[84]

என்ற அதன் பகுதியில் சுட்டுகின்றது. எலும்பையும் புலியின் தோலையும் உடைய சிவபிரானாகிய ஒருவர் அருகில் இருக்குமாறு அவருக்கு இடங்கொடுத்து எழுந்தருளியிருக்கின்ற நற்குணமுள்ள பெருமானுடைய திருத்தலம் என்பதாக அவரது பாசுரம் குறிப்பிடுகிறது.

திருமங்கையாழ்வார் குறிப்பிடும், திருக்கோட்டியூர் மற்றும் திருக்குறுங்குடியில் உள்ள இச்சிவபெருமானை சைவசமய குரவர்கள் பாடவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**பிரம்மா**

பிரம்மனைக் குறித்துப் பரிபாடலும், கலித்தொகையும், திருமுருகாற்றுப்படையும் ஏராளமான செய்திகளைத் தருகின்றன.

பிரமனானவன் திருமாலால் உந்தித்தாமரையில் பிறந்தவன். பிரமனின் தந்தை திருமால் எனப் பரிபாடல் கூறுகிறது. மேலும் பிரமன் அன்னச் சேவலாகி மேலே சென்றவன் என்பதையும், வேதங்களுக்குரியவன் என்பதையும் அவ்விலக்கியமே காட்டுகிறது.

ஆயர்கள் மாடுகளை மேய்த்தல் உள்ளிட்ட செயல்களைப் பிரமனின் செயலோடு ஒப்பிட்டுக் கூறும் கலித்தொகை,

அவ் வேற்றை

பிரிவு கொண்டு இடைப்போக்கி இனத்தோடு புனத்துஏற்றி

இரு திறனா நீங்கும் பொதுவர்

உருகெழு மாநிலம் இயற்றுவான்

விரிதிரை நீக்குவான் வியன்குறிப்பு - ஒத்தனர்[85]

என்று பாடியுள்ளது.

மாடுகள் ஒன்றுடன் ஒன்று போர் செய்யாமல் தடுக்கக் காளைகளை இடையில் புகவிட்டுத் தத்தம் இனத்தோடு அவை சேர்ந்து மேய்வதற்கு இரண்டு கூட்டங்களாகப் பிரிப்பது ஆயர்களின் செயலாகும். இச்செயலை, ஊழிக்காலத்திற்குப் பிறகு நிலவுலகை மீண்டும் படைக்க எண்ணிய பிரமன், ஆழ்ந்த சிந்தனையோடு முதலில் பரந்து விரிந்த நீர்ப்பரப்பாகிய கடலினை நிலத்தை விட்டுப் பிரித்தான் என்ற செய்தியைக் கூறி, ஆயர்களின் செயலினை பிரமனின் செயலுடன் ஒப்பிட்டுப் பாடியுள்ளது அக்கலித்தொகை.

படைக்கும் தொழிலையுடையவன் பிரமன் என்பதையும், நாராயணனே பிரமனைப் படைத்தான் என்பதையும் சங்க இலக்கியம் குறிப்பிடுகின்றது. புராணச் செய்தியாகிய இதனை,

தாமரைப் பூவினுள் பிறந்தோனும் தாதைநீ[86]

என்ற பரிபாடலடியானது குறிக்கின்றது.

பிரமனின் தொழிலைக் கூறும் திருமுருகாற்றுப்படை,

தாமரை பயந்த தாவின் ஊழி[87]

என்ற பாடலடியடங்கிய பகுதியால் சுட்டுகின்றது.

நாராயணன் நான்முகனைப் படைத்தான் எனக் கலித்தொகை கூறுவதை உள்வாங்கிக் கொண்ட திருமழிசை ஆழ்வார்,

நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும்

தான்முகமாய் சங்கரனைத் தான் படைத்தான்[88]

என்று அறிவிக்கத் தொடங்கியதில், திருமால் நான்முகனைப் படைத்தான் என்பதையும், நான்முகன் சிவனைப் படைத்தான் என்பதையும்

குறிப்பிடுகின்றார். பிரமன் தான் படைத்த நல்லுலகங்களோடு தானும் திருமாலின் உந்தித் தாமரையில் உள்ளான் என்ற செய்தியினை நம்மாழ்வார்,

எழு திசை முகன் படைத்த நல் உலகமும் தானும்[89]

எனக் குறிக்கின்றார்.

ஆழ்வார்ப் பாசுரங்கள், கையில் கபாலம் ஏந்தியவனாக, பிச்சையேற்று நின்றானுக்கு மார்பகத்தின் குருதியைப் பாய்ச்சி நிறைத்தவனாகச் சிவனைக் குறிக்கின்றன. அவ்வாறு பிரம்மகபாலம் நிரப்பிய நிகழ்வின் மூலம் பிரமனின் தலை சிவனால் கொய்யப்பட்டது என்ற புராணக் கூற்றினையும் காட்டுவதாக வந்துள்ளதை அறியமுடிகிறது.

**இலக்கியத்தில் கூறப்பட்ட திருத்தல புராணம்**

திருவெஃகா என்ற திருத்தலத்தில், திருமால் 'வேகவதி' என்ற நதியைத் தடுக்கும் விதத்தில், தானே அணையாகப் படுத்துக்கொண்டருளியவன் என்பது புராணச் செய்தியாகும். இச்செய்தியினைப் பெரும்பாணாற்றுப்படை,

. . . . . . . . . . . .
பாம்பணை பள்ளி அமர்ந்தோன் ஆங்கண்
வெய்யில் நுழைபு . . . . . . . . . . . . . . . . . .[90]

என்று பாடித் திருவெஃகாவையும் திருமால் வழிபாட்டையும் குறிக்கிறது.

வேகவதி என்ற நதிக்கு அணையாகத் திருமால் படுத்துக்கொண்டதால் 'வேகசேது' என்று அவ்வணையும் பெயர்பெற்றதாகக் கூறப்படும் செய்தியைத் திருமங்கையாழ்வார் தானும் தனது பாசுரத்தின் வழி வெளிப்படுத்த முனைகின்றார்.

'பள்ளி கொண்டவன்' என்று அவனது திருவுருவச் சிறப்பினை,

நாகத்து அணைக் குடந்தை, வெ∴கா, திருஎவ்வுள்
நாகத்து அணை அரங்கம், பேர், அன்பில் நாகத்து
அணைப் பாற்கடல் கிடக்கும், ஆதி நெடுமால்
அணைப்பார் கருத்தன் ஆவான்[91]

என்று திருமழிசையாழ்வார் கூறுகின்றார்.

*பேயாழ்வார் அருளிய மூன்றாம் திருவந்தாதியில், எம்பெருமான் ஒருநாளும் விட்டு நீங்காதவனாய் நித்திய வாசம் செய்யுமிடங்கள் எவையெவை என்பதைக் குறிப்பிடுகிறார். அவற்றில் திருவெஃகாவாகிய திருத்தலத்தையும் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு.*

சிறந்த என் சிந்தையும் செங்கண் அரவும்
நிறைந்த சீர் நீள் கச்சியுள்ளும் - உறைந்ததுவும்
வேங்கடமும் வெ.்.காவும் வேளுக்கைப் பாடியுமே.[92]

*இலக்கியம் கூறும் திருத்தலமான 'திருவெஃகா'வின் தலபுராணத்தைக் கொண்டு,* இத்தலத்தின் *பெயர் 'திருவெஃகா' என்று வந்ததற்கான காரணத்தை அறியமுடிகிறது.*

*ஒரு காலத்தில், பிரம்மா செய்த வேள்வியை அழிக்க வந்த சரஸ்வதி* தேவி, *நதியாக மாறி வெள்ளமெனப் பெருக்கெடுத்து வந்தாள். வேகமாக வந்ததால் வேகவதியானாள். தாம் வேள்வி செய்யும் பகுதியை நோக்கி நதி வருவதையறிந்த பிரம்மன், பெருமாளை நோக்கித் தவம் செய்ய, பிரம்மனையும் அவன் வேள்வியையும் காக்கும் பொருட்டுத் திருமால் அவ்வெள்ளத்தில் அணையாகப்படுத்தார். அவ்வாறு எம்பெருமான் படுத்திருந்த திருக்கோலத்தைக் கண்ட சரஸ்வதி, 'வேகவணை' என்றாள்.* இதுவே *'வெஃகா' ஆயிற்று. பின்னர் சரஸ்வதி மறைந்தாள். திருமால் தன்* தேவியுடன் *பிரம்மாவுக்குக் காட்சி கொடுத்தார் என்பதே* இத்தலத்தின் *புராணமாகும்.*[93] இப்பெருமானின் *கிடந்தகோலத்தையே முற்சுட்டியவாறு பெரும்பாணாற்றுப்படை புகழ்கிறது. ஆழ்வார்கள் அனைவரும் 'திருவெஃகா' தலத்துடன், மற்ற* இடங்களில் *கிடந்த திருக்கோலம் கொண்டு விளங்கும் திருமாலையும் சேர்த்து 'அரங்கம், குடந்தை, எவ்வுள், அன்பில், திருப்பேர்' என்றவாறு சேர்த்துப் பாடி மகிழ்வதைக் காணமுடிகிறது.*

*பேயாழ்வார்,*

பொருப்பிடையே நின்றும் புனல்குளித்தும் ஐந்து
நெருப்பிடையை நிற்கவும் நீர்வேண்டா விருப்பு உடைய
வெ.்.காவே சேர்ந்தானை மெய்ம்மலர் தூய்க் கைதொழுதால்
அ.்.காவே தீவினைகள் ஆய்ந்து[94]

*என்றவாறு பாடுகிறார்.*

**திருமால் - திருமகள்**

*திருமால் திருமகளின் மேல் மாறாத காதல் கொண்டவன். எனவே, 'திருவின் கணவன்' என்று அவன் போற்றப்படுவதாகப் பரிபாடலும், கலித்தொகையும் சுட்டுகின்றன. அத்தகைய திருவாகிய திருமகளை, என்றும் பிரியாத வகையில், திருமால் தன் மார்பில் தாங்கியவன் என்பதைக் கலித்தொகை,*

திரு மறு மார்பன்[95]

*என்றும், பரிபாடல்,*

மாவுடை மலர் மார்பன்[96]

*என்றும் குறிப்பிடுகின்றன.*

**திருமகளின் திருஉருவம்**

*தெய்வத் திருவுருவத்தின் திருமேனியழகு புகழப்படுவது மரபு. இம்மரபு சங்கப்பாடல்களில் மிகுதியும் உண்டு. திருமகளின் மேனியழகினைக் குறிப்பிடும் வகையில் கலித்தொகை, ஒரு தலைவியின் அழகினை உவமிக்கும் பாங்கில்,*

காரிகை தோற்றாளைத் . . . .[97]

*என வருணித்துள்ளது.*

*மேலும், வையையாற்றை வருணிக்கும் கலித்தொகை, திருமகளின் மார்பில் முத்துமாலை விளக்குவதுபோன்று, அதாவது, கூந்தலில் சிவந்த தலையணியைச் செருகினாற் போலச் சில இடங்களில், செந்நிற மணல் கிடக்கும் வையையின் நீர்ப்பரப்பின் நடுவில் திருமகளின் மார்பில் முத்துமாலை விளங்குவது போலக் கருமணல் அடுக்குகளையுடைய நீண்ட திட்டுக்கள் கிடக்கும் என்பதாக,*

செய்யவள் அணிஅகலத்து ஆரமொடு அணிகொள்ப[98]

*என்று கலித்தொகையடி குறிப்பிடுகிறது. பரிபாடலானது திருமகளானவள் 'பொன்னிறம்' உடையவள் என்பதை,*

பொன்னின் தோன்றிய புனை மறு மார்பன்[99]

என்ற அடியால் கூறுகிறது. மேலும், அவளது நெற்றியிலிட்ட திலகம் போன்று மதுரை மாநகரமும், வையையும் உள்ளதால் மதுரையின் புகழ் பொலிந்து நிற்பதாக,

செய்யாட்கு இழைத்த திலகம்போல் சீர்க்கு ஒப்ப
வையம் விளங்கிப் புகழ் பூத்தல் அல்லது
பொய்யாதல் உண்டோ மதுரை[100]

என்ற பரிபாடற்பகுதி கூறுகின்றது.

கலித்தொகை திருமகளின் முழு உருவினை அழகாக வெளிப்படுத்துகிறது. அதாவது, யானைகளோடு கூடிய மகாலட்சுமியை வருணிக்கின்றது. வேங்கை மரத்தால் செய்யப்பட்ட மத்தளம் போன்ற மத்தகத்தையுடைய இரண்டு யானைகள் திருமகளின் மீது கலச நீரைச் சொரிகின்றன. திருமகள் தாமரைச் செல்வியாகத் தாமரையின் மேல் தனிச்சிறப்புடன் வீற்றிருக்கும் அமைப்பினைக் கூறுவதாகவுள்ள அப்பாடலடிகள் பின்வருமாறு:

வரிநுதல் எழில் வேழம் பூ நீர் மேல் சொரிதர
புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறுஎய்தி.[101]

திருமகள் திருமாலுடன் மார்பினைச் சேர்ந்து நிற்கும் காட்சியினை, பிரிந்த தலைவன் மீண்டு வரக்கண்டு மகிழ்ந்து பின் அவனைத் தழுவி நின்ற தலைவியின் தோற்றத்துடன் ஒப்பிட்டு,

மாயவன் மார்பில் திருப்போல் அவள் சேர
ஞாயிற்று முன்னர் இருள் போல மாய்ந்தது[102]

எனப் பேசுகிறது கலித்தொகை. அதாவது, கதிரவன் முன் காரிருள் நீங்குவது போன்று தலைவனை அடைந்த பின்னர்த் தலைவியின் துன்பம் நீங்கியதாகப் பாடப்பட்டுள்ளது. இங்கு மாயவனின் தலைவியோடு மானிடத் தலைவியானவள் இணைத்துப் பேசப்படுவதனைப் படித்தறிந்து மகிழமுடிகிறது.

திருமாலும், திருமகளும் இவ்உலகிற்கே தலைவன் தலைவியாக இருந்து உலக மக்கள் அனைவருக்கும் தந்தையும் தாயுமாக இருந்து, காத்தல்

தொழிலைச் செய்கின்றனர் என்ற தத்துவத்தினைத் திருமாலடியார்களுக்கு வலியுறுத்திக் கூறவேண்டிய கடமை தெரிந்த ஆழ்வார்கள், தமது பாசுரத்தில் திருமால்-திருமகள் குறித்த செய்திகளை இவ்வாறு வெளிப்படுத்த முனைந்தனர் எனக் கூறுமுடிகிறது. இதற்கு அடிப்படையான செய்திகளைச் சங்க இலக்கியங்களிலிருந்து பெறலாம் என்று கருதிய ஆழ்வார்கள், சங்கப் பாடற்குறிப்புகளைக் கருத்திற்கொண்டு தமது பாசுரங்களை இவ்வாறு வகுத்தனர் என்று கூறமுடிகிறது.

இலக்குமியைத் தாமரைச் செல்வியாகச் சங்க இலக்கியம் போற்றுவதைப் பெரியாழ்வாரும் தம் பாசுரத்தில்,

தேன் ஆர் மலர் மேல் திருமங்கை போத் தந்தாள்[103]

என்று பாடிப்போற்றுகிறார்.

திருமாலினை விட்டுச் ‘சிறிது நேரமும் பிரியேன்’ என்று பெரிய பிராட்டியார் கூறும் கருத்தில்,

அகலகில்லேன் இறையும் என்று
அலர்மேல் மங்கை உறைமார்பா[104]

எனப் பாடிச் சிறப்பிக்கின்றார் நம்மாழ்வார்.

திருமால் தனது அடியார்களின்மேல் மாறாத அன்புகொண்டவன். அதுபோலவே, திருமகளும் அடியாரின் குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளும் தாயின் கருணையை உடையவள் என்பதும் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன.

மேலும், அடியார்களின் செயல்களில் திருமகளே ஏதேனும் குற்றம் கூறத் தொடங்கினால், உடனே திருமால் திருமகளிடம், ‘எனது அடியார் அப்படிப்பட்ட குற்றம் ஏதும் செய்யார்; அப்படியே செய்தாலும் தாய் தந்தையாக விளங்கும் நமது பொறுமையை நினைத்துச் செய்திருப்பார்கள்’ என்று கூறித் திருமகளைச் சமாதானம் செய்யக்கூடியவர். இதனைப் பெரியாழ்வார்,

தன் அடியார் திறத்தகத்துத் தாமரையாள்
ஆகினும் சிதகு உரைக்கு மேல்
என் அடியார் அது செய்யார் செய்தாரேல்
நன்று செய்தார் என்பர் போலும்[105]

என்று பாடி விளக்குகின்றார். இறைவன் - அடியார் தொடர்பினையும், அடியார்கள் இறைவனிடம் கொண்ட பக்தியையும், இறைவன் அடியார்களிடம் கொண்ட கருணையையும் பரிபாடல் உள்ளிட்ட சங்க இலக்கியங்கள் குறிக்கின்றன என்பதால், இவற்றைப் படித்துச் சுவைத்த ஆழ்வார்கள் அச்சுவை மாறாமல் தத்தம் பாசுரங்களில் அவற்றையும் குறித்துப் பாடியுள்ளனர் எனக் கூறமுடிகிறது.

### தேவர்களுக்கு அமுதமளித்தல்

தேவர்கள் இறவாவரம் வேண்டித் திருமாலை அணுகியதால், திருமால் தேவர்களுக்கு அமுதமளிக்க விரும்பினான். திருப்பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுக்கப்பட்டது. அந்த அமுதத்தைத் தேவர்களுக்கு உணவாக வழங்க வேண்டுமென்று இறைவன் உள்மனத்தில் நினைத்த மாத்திரத்திலேயே, தேவர்களுக்கு அமுதம் உண்ட பயன் வாய்த்தது. இச்செய்தியைப் பரிபாடல்,

வாயடை அமிர்தம் நின் மனத்தகத்து அடைத்தர
மூவா மரபும் ஓவா நோன்மையும்
சாவா மறபடின் அமரர்க்காச் செற்ற நின்
மரபினோய் நின்னடி[106]

எனப் பாடுகிறது. அமுதமானது மூப்பில்லாத் தன்மையினையும், அழியாத ஆற்றலையும் கொடுக்கக்கூடியது என்பதை இப்பாடற்பகுதி எடுத்துரைக்கிறது. மேலும், அமுதத்தைப் பாதுகாத்து இதனால் கேடு வராதவாறு இருக்கத் திருமால் மோகினியின் உருக்கொண்டு வந்ததையும் இவ்விலக்கியம் சுட்டுகின்றது. மோகினி வடிவம் எடுத்தபொழுது அவளின் அழகில் மயங்கிக் காமுற்ற அசுரர்களுக்கு அச்சத்தைத் தரும் வகையில் இறைவன் அமுதத்தைத் தேவர்களுக்கு வழங்கினான் என்ற செய்தியை இது குறிப்பிடுகிறது.

மோகினி அவதாரச் செய்தியினைத் திருமங்கை ஆழ்வார் குறிக்கிறார். அசுரர்களினால் கெடுதி வரும் என்பதால், அந்த அமுதம் அவர்களைச்

சென்றடையாதவாறு திருமால் மோகினி உருவெடுத்து வந்து அவுணர்கள் உண்ணாதவாறு கெடுத்தவன் என்பதாக,

பெண் ஆகி இன் அமுதம் வஞ்சித்தானை[107]

என்ற அடிகுறிக்கிறது. ஆதலால், ஆழ்வார்ப் பாசுரங்கள் இக்கருத்தில், பரிபாடலின் தாக்கம் பெற்றுள்ளமையினை அறிமுடிகிறது.

திருப்பாற்கடல் கடையப்பட்ட நிலையில், அனைவரும் வியந்த ஆதிசேடனின் பெருமையைக் கூறும் சங்கப் பாடலடிகள் பின்வருமாறு:

திகழ் ஒலி முந்நீர் கடைந்த அக்கால் வெற்பு
திகழ்பு எழ வாங்கித்தம் . . . . . . . . . . .
புகழ் சால் சிறப்பின் இருதிறத் தோர்க்கும்
அமுது கடைய இருவயின் நாண் ஆகி
மிகாஅ இருவடம் ஆழியான் வாங்க
உகாஅ வலியின் ஒரு தோழ்ம்காலம்.[108]

இத்தகைய திருப்பாற்கடல் கடைந்த செய்தியினை ஆழ்வார்கள் பல பாசுரங்களில் எடுத்துரைத்துள்ளனர். இது குறித்த பெரியாழ்வாரின்,

அடைந்திட்டு அமரர்கள் ஆழ்கடல் தன்னை
மிடைந்திட்டு மந்தரம் மத்தாக நாட்டி
வடம் சுற்றி வாசுகி வன் கயிறாக
கடைந்திட்ட கைகளால் . . . . . .[109]

என்ற பாசுரப் பகுதி எண்ணத்தக்கது. துருவாச முனிவரின் சாபத்தினால் தன்னிடமுள்ள செல்வத்தினை தேவர்கள் இழந்தனர். அதனை மீண்டும் பெற வேண்டித் திருமாலைச் சரணடைந்தனர். அதற்காகத் திருமால் திருப்பாற்கடலைக் கடைந்தான் என்ற புராணச் செய்தியைச் சங்கப்பாடல் கூறிய அவ்வாறே இப்பாசுரப்பகுதியும் எடுத்தாண்டுள்ளது.

மேற்சுட்டியவாறு, திருப்பாற்கடல் கடையப்படும்பொழுது பேரிரைச்சல் ஏற்பட்டது என்ற செய்தியையும் அழகுறக் கூறுகின்றது. இவ்வாறு வருணிக்கப்படுவது, பக்தர்களுக்கு இறைவன் மீதான அச்சம் கலந்த பக்தியுணர்வினை ஏற்படுத்துவதற்காகவே எனலாம்.

*திருப்பாற்கடலின் அப்பேரிரைச்சலைத் திருமங்கையாழ்வார் சிறப்பாக வருணிக்கின்றார். யானை பிளிறுவதைப் போல மேலெழுந்த பேரிரைச்சல், வானத்திற்கு எட்டுகிறது. இதனால் தேவலோகமும், சந்திர சூரியரும், பிற சுடர்களும், தேவதைகளும் அதிர்ச்சியடைந்தன. அத்தகைய பேரிரைச்சல் எழக்காரணம், திருமால் பல கரங்களினால் அக்கயிற்றை இழுத்ததுவே என்பதை,*

மா இருங் குன்றம் ஒன்று மத்து ஆக
மாசுணம் அதனொடும் அளவி
பா இரும் பௌவம் பகடுவிண்டு அலறப்
படுதிரை விசும்பிடைப் படர
சேய் இரு விசும்பும் திங்களும், சுடரும்
தேவரும் தாம் உடன் திசைப்ப
ஆயிரம் தோளால் அயலகடல் கடைந்தான்[110]

*என்ற பெரிய திருமொழியின் அடிகள் கூறுகின்றன.*

*ஆயிரம் தோள்களால் அலைகடல் கடைந்தான் என்ற திருமங்கையாழ்வாரின் கூற்றானது, உருவமும் பெயரும் கடந்த எண்ணிறந்த கைகளை உடையவனாகிய திருமால் எனக் கூறும் பரிபாடலின் கருத்தினை அடியொற்றியது எனக் கூறமுடிகிறது.*

*திருப்பாற்கடலின் இரைச்சலை வருணித்துப் பாடுவதில் நாட்டம் கொண்டிருந்த நம்மாழ்வரும்கூட,*

ஆறு மலைக்கு எதிர்த்து ஓடும் ஒலி அர
ஆறு சுலாய் மலை தேய்க்கும் ஒலிகடல்
மாறு சுழன்று அழைக்கின்ற ஒலி அப்பன்
சாறுபட அமுதம் கொண்ட ஞான்றே[111]

*என்று பாடியுள்ளார் என்பதை எண்ணிச் சங்க இலக்கியத்தின் தாக்கம், பாசுரங்களில் உள்ளமையை மேலும் எடுத்துரைக்க முடிகிறது.*

**துழாய் மாலை அணிந்த மார்பன்**

*திருமாலின் துழாய் மாலை அணிந்த மார்பினை இலக்கியங்கள் வருணிப்பதுண்டு. சங்க இலக்கியங்களில் இக்குறிப்பினைப் பல இடங்களில் காணமுடிகிறது.*

*திருமால் தாமோதரன் என்ற பெயரால் அழைக்கப்படுபவன் ஆவான். தாமோதரன் என்பது தாமம் + உதரன் எனப் பிரியும். தாமம் என்பது மாலையையும், உதரன் என்பது வயிற்றை உடையவன் என்பதையும் குறிக்கும். அதாவது, தாமோதரன் என்பது, மாலையைத் தாங்கும் வயிற்றையுடையோன் என்ற பொருளில் கருதப்படுகிறது. மாலையணிந்த மார்பனாகிய திருமாலினைப் பரிபாடல்,*

இணைபிரி அணிதுணி பணிஎரி புரைய
விடர்இடு சடர்படர் பொலம்புனை வினைமலர்
நெரிகிடர் எரிபுரை தனமிகு தனமுரண்மிகு
கடறரு மணியொடும் முத்து யாத்த நேரணி
நெறிசெறி வெறிஉறு முதல் விறல் வணங்கு அணங்குவில்
தார் அணி துணி மணி வெயில் உறழ் எழில்புகழ் அலர் மார்பின்[112]

*என்று வருணிக்கிறது. திருமால் அழகிய வேலைப்பாடுடன் பொன்மலர்களால் கோக்கப்பட்ட பொன் அணி மாலையை இருபுறமும் அணிந்துள்ளதாகவும், முத்து மாலையுடன் மலர் மாலையையும் அணிந்து, அவனது மார்பு பல மாலைகளால் அழகு பொருந்திப் புகழ்மிக்கதாக உள்ளது. மாலைகளில் மனம் காற்றின் வேகத்தில் கலந்து பரவுகிறது என்றெல்லாம் அழகுறப் பாடப்பட்டுள்ளது.*

*மேலும், துழாய் மாலை யணிந்த மார்பன் என்பதை,*

கோள் இருள் இருக்கை ஆய்மணி மேனி
நக்கு அலர் துழாஅய் நறுஇணர்க் கண்ணியை[113]

*என்றும் பரிபாடல் குறிக்கிறது. இதில், நீல மேனியையுடைய திருமால், தலைமாலையாக மணமிகுந்த துழாய் மாலையைக் கொண்டவன் என்னும் குறிப்பும் உண்டு.*

பேயாழ்வாரின்,

பொன் தோய் வரை மார்பில் பூந்துழாய். . .[114]

என்றும்,

வாச மலர்த் துழாய் மாலையான். . .[115]

என்றும் வரும் பாடலடிகள், மணமிக்க மலர்களோடு கூடிய திருத்துழாய் மாலையை அணிந்தவனான திருமாலினைக் குறிப்பதையும் படித்தறிந்து மகிழமுடிகிறது.

**தாமரைக் கண்ணன்**

பொதுவாக, இயற்கையின் தோற்றத்துடன் மானிடர், வானவர் என்போரின் அழகினைப் பலவாறு ஒப்பிட்டுக் காட்டுதல் மரபாகும்.

திருமாலின் திருக்கண்கள் தாமரையைப் போன்று அழகுடன் அமைந்துள்ளன என்பதை,

எரி மலர் சினை இய கண்ணை[116]

எனப் பரிபாடலும்,

தாமரைக் கண்ணான் உலகு[117]

என்று திருக்குறளும்,

முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர் மலர் மற்று அவன் கண் ஒக்கும்[118]

என்றவாறு நான்மணிக்கடிகையும் வருணிப்பதை அறியமுடிகிறது.

ஆழ்வார்கள் திருமாலைப் போற்றிப் பாடும்பொழுது, கண்களை மட்டுமின்றி, அவனையே தாமரைப் பூத்த காடெனவே வருணிக்கின்றனர். ஆண்டாள் நாச்சியார் ‘பங்கயக் கண்ணனைப்பாடு’ என்று பாவைப் பாட்டில் பாட, திருமங்கையாழ்வார் கடல் வண்ண நிறத்தனாக, காளமேகத்தை ஒத்திருக்கும் உருவமுடைய திருமாலை நீண்ட செந்தாமரைக் கண்களை உடையவனென்றும், செந்தாமரை மலர் போன்ற திருமுகத்தையுடையவன் என்றும் தாமரையுடன் ஒப்பிட்டுப் பாடுகிறார்.[119] இக்கருத்தினையே நம்மாழ்வார்,

செங்கமலத்து அலர்போலும் கண், கை, கால், செங்கனிவாய்
அக்கமலத்து இலைபோலும் திருமேனி[120]

என்றும்,

மறப்பும் ஞானமும் நான் ஒன்று உணர்ந்திலன்
மறக்கம் என்று செந்தாமரைக் கண்ணொடு
மறப்பு அற என் உள்ளே மன்னினான் தன்னை[121]

என்றும் பாடுகிறார்.

செந்தாமரை போன்ற கண்களையுடையவனான பெருமான், அவரைக் கண் குளிர நோக்கியதாகவும், அப்பார்வையில் மலரின் குளிர்ந்த தன்மை இருந்ததையும் கூறி, அத்தன்மையும் அழகும் பெற்றிருப்பதனாலேயே திருமாலினை செந்தாமரைக் கண்ணன் என்று ஆழ்வார்கள் ஏற்றத்துடன் போற்றி மகிழ்ந்தனர்.

**மராமரம் துளைத்தமை**

மராமரங்களைத் துளைத்தது என்பது திருமாலின் இராமாவதாரத்தில் நிகழ்ந்த ஒன்றாக வழங்கப்பட்டு வருவதை அறியமுடிகிறது.

இராமாயணக் காட்சியிலுள்ள இச்செய்தி, நேரடியாகச் சங்க இலக்கியங்களில் தென்படவில்லை. எனினும், கலித்தொகைப் பாடலில் முல்லைக் கலியில் ஏறு தழுவும் நிகழ்ச்சி சுட்டப்படுகிறது. ஏறு தழுவும் போட்டியில் கலந்து கொள்ளும் ஆயர்குடி இளைஞர்கள், இடிமுழக்கம் போல ஆரவாரித்துக் களத்தில் கூடினர். ஒரு புறம் பெண்கள் கூட்டம் மற்றும் இளைஞர்கள்.

ஏறு தழுவும் ஆடவர்களனைவரும், இறைவனிருக்கும் இடங்கள் எல்லாவற்றையும் வணங்கிய பின்பே களமிறங்க வேண்டுமென்ற மரபில், நீர்த்துறையிலும், ஆலமர நிழலிலுமுள்ள இறைவனை வணங்கியதுடன் மராமர நிழலிலுள்ள தெய்வத்தினையும் வணங்கி வழிபட்டதாகக் குறிப்பிடப்படுகிறது.

அவ்வழி முழக்கென. . . . . . . . . . . . . . . . . .
வழக்குமாறு கொண்டு வருபு வருபு ஈண்டி
நறையொடு துகள் எழ நல்லவர் அணிநிற்பத்
துறையும் ஆலமும், தொல்வலி மாஅமும்
முறையுளி பராஅய் பாய்ந்தனர் தொழூஉ[122]

*என்ற கலித்தொகைப் பகுதி இதனை அழகாக வருணிக்கின்றது.*

*மராமரங்களை இராமபிரான் துளைத்த வீரச் செய்தியாகிய இதனை உள்வாங்கிக் கொண்ட ஆழ்வார்கள், தமது பாசுரங்களில் உரியவாறு பாடிச் செல்கின்றனர். அவற்றுள் ஒன்று திருமழிசையாழ்வாரின்,*

மரம் பொதச் சரம் துரந்து வாலி வீழ முன் ஓர் நாள்
உரம் பொதச் சரத் துரந்த உம்பர் ஆளிர் எம்பிரான்[123]

*என்ற பாடற் கூற்றாகும்.*

*திரேதாயுகத்தில் ஏழு மராமரங்களைத் துளையுறும்படியாகப் பாணத்தை ஏவியவன் என்றும், அதன்பின் வாலியானவன் விழும்படி செய்தவன் என்றும் குறித்துப்பாடி, இராமபிரானின் பெருமையை வைணவ அடியார்களிடத்தில் தக்கவைக்கும் பாங்கில், இவ்வாறு அவர் பாடியுள்ளதாக எண்ணி மராமரங்களைத் துளைத்த அச்செய்தியை நம்மாழ்வாரும் தனது திருவாய்மொழியில்,*

சினைஏய் தழைய மராமரங்கள்
ஏழும் எய்தாய்! சிரீதரா![124]

*எனப்பாடித் தனது பக்தித் திறத்தினை வெளிப்படுத்துகிறார். மராமரச் சோலைகள் இருந்ததையும் ஆயரிளைஞன் ஏறு தழுவும் முன் இறைவழிபாடு செய்வதையும், குறிப்பாக இம்மரத்தினடியில் வழிபாடு செய்ததையும் கலித்தொகை குறிக்க, அதன் தாக்கமே ஆழ்வாரின் இதுகுறித்த பாசுரங்களின் கருத்தாயிற்று எனக் கூறமுடிகிறது.*

**சிவனின் அட்ட வீரட்டச் செயல்கள்**

*சிவபெருமானின் எட்டுவிதமான வீரச் செயல்களைக் குறிப்பிட்டுச் சைவ சமயம் போற்றிப்பாடுகிறது. அவையாவன: சிவன் பிரம்மனுடைய*

தலையைக் கொய்து செருக்கழித்தது, அந்தகாசுரனை அழித்தது, திரிபுரம் எரித்தது, தக்கன் தலையைத் தடிந்தது, சலந்தாசுரனை வதைத்தது, கயமுகாசுரனைக் கொன்று தோலை உரித்துப் போர்த்திக் கொண்டது, மன்மதனை எரித்தது, மார்க்கண்டேயனைக் காத்துக் கூற்றுவனை வதைத்தது.

**காலனைக் கொன்றது**

மார்க்கண்டேயன் வாழ்நாள் வேண்டிச் சிவபெருமானைச் சரணடைந்தான். அவனுக்கிரங்கிய சிவபெருமான், காலனை எட்டி உதைத்துத் துன்புறுத்தினான் என்பது புராணம். இப்புராணக் கூறு கலித்தொகையில் உவமைப் பொருளில் வந்துள்ளது.

ஏறுதழுவுதல் நிகழ்ந்து கொண்டிருக்கும் வேளையில், அங்கு வீரர் பலர் தமது வீரத்தினை வெளிப்படுத்துகின்றனர். அவர்களிடையே வெளிப்படும் தலைவனானவன், 'எருமை வாகனனான கூற்றுவனை மார்க்கண்டேயன் பொருட்டுத் துன்புறுத்திய சிவனைப் போன்று' தோன்றுவதாக அவ்விடத்தில் குழுமியிருந்த பெண்கள் வியந்து பேசுவதாகப் பாடல்கள் உள்ளன.

கலித்தொகையின் பாடலொன்று,

படர் அணி அந்திப் பசுங்கட் கடவுள்
இடரிய ஏற்றெருமை நெஞ்சு இடந்திட்டுக்
குடர் கூளிக்கு ஆர்த்துவான் போன்ம்!. . .[125]

என்றும், மற்றொரு பாடல்,

ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பின் இடந்திட்டு
சீற்றமொடு ஆருயிர் கொண்ட ஞான்று இன்னன் கொல்
கூற்று என் உட்கிற்று என்நெஞ்சு
இகுளை! இ∴து ஒன்று கண்டை[126]

என்றும் பாடுகின்றன.

இறைவனின், காக்கும் தன்மையை வைணவ அடியார்களுக்குச் சுட்டிக்காட்டினால், இறைவனது பெருமை மேன் மேலும் விளங்கும் என ஆழ்வார்கள் எண்ணினர். அதனால், சிவபெருமான் கூற்றுவனை உதைத்ததாகக் கூறப்படும் செய்தியைத் தமக்கு உகந்ததாக்கிக் கொள்ளும் வகையில், திருமால்

*கூற்றுவனை உதைத்ததாக அவர்கள் பாடமுனைகின்றனர் எனலாம். சங்க இலக்கியமான கலித்தொகையின் தாக்கத்தினைக் காட்டும்,*

கண்டும் தெளிந்தும் கற்றார் கண்ணற்கு ஆள் அன்றி ஆவரே
வண்டு உண் மலர்த் தொங்கல் மார்க்கண்டேயனுக்கு வாழும் நாள்
இண்டைச் சடைமுடி ஈசனுடன் கொண்டு உசாச் செல்ல
கொண்டு அங்குத் தன்னொடும் கொண்டு உடன்
சென்றது உணர்ந்துமே[127]

*என்ற நம்மாழ்வாரின் பாசுரம் இதற்குச் சான்றாகிறது. இதனையே,*

மலர் ஏற இட்டு இறைஞ்சி வாழ்த்த - வலர் ஆகில்
மார்கண்டன் கண்ட வகையே வரும் கண்டீர்[128]

*எனத் திருமழிசையாழ்வார்ப் பாசுரமும் சுட்டுவதை அறியமுடிகிறது.*

**மன்மதனை எரித்தது**

*மன்மதன் சிவபெருமானின் நெற்றிக்கண்ணால் எரிக்கப்பட்டான் என்பது அட்டவீரட்டச் செயல்களில் ஒன்றாகும். சிவபெருமானால் எரிக்கப்பட்ட 'மன்மதன்' எனப்படும் காமன், திருமாலின் மைந்தன் என்பதைப் பாசுரங்கள் சுட்டுகின்றன. மன்மதனை எரித்த சிவபெருமானின் சினத்தைச் சுட்டும் பரிபாடல்,*

காஅய் கடவு சேஎய்! செவ்வேள்[129]

*என்கிறது.*

*பரிபாடலின் இச்செய்தியை உள்வாங்கித் தன்வயமாக்கிக் கொண்ட பெரிய திருமொழி, மன்மதனை மகனாகப் பெற்ற திருமால் என்ற பொருளில்,*

. . . . . . . . . முன்
காமன் பயந்தான் கருதும் ஊர், கண்ணபுரம் நாம் தொழுதுமே[130]

*என்றவாறு திருமாலைச் சிறப்பித்துப் பாடுகிறது. 'ஐந்து மலர்க்கணைகளை ஆளும் வில்லினை உடைய மன்மதன்' என்ற கருத்தினைத் திருமங்கையாழ்வார்,*

ஐங்கணை வில் தன் ஆண்மை என்னோடு
ஆகும் - அனை அறிய மாட்டேன்[131]

*எனப் பாடிச் சிறப்பிக்கிறார்.*

*மன்மதன் எரிக்கப்பட்ட புராணக்கூறு திருமழிசையாழ்வாரால் சற்று வேறுபாடுடையதாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. மலர்க் கணைகளை வீசியதால் சிவபெருமானால் மன்மதன் எரிக்கப்படுகிறான். பின்னர் அப்பெருமையைக் கூறுவதுடன், திருமாலின் திருநாமங்கள் கூறப்பட வேண்டியதன் இன்றியமையாமையினையும் கூறுகிறாள். இதனைத் திருமழிசையாழ்வார்,*

கண்டு வணங்கினார்க்கு என்னாம் கொல் காமன் உடல்
கொண்ட தவத்தாற்கு உமை உணர்த்த வண்டு அலம்பும்
தார் அலங்கல் நீள் முடியான் தன் பெயரே கேட்டிருந்து அங்கு
ஓர் அலங்கள் ஆனமையால் ஆய்ந்து[132]

*என்ற பாசுரத்தில் பாடியுள்ளார்.*

**திரிபுரம் எரித்தமை**

*தாரகாசுரனது புதல்வர்கள் மூவர். தாராட்சன், கமலாட்சன், வித்யுந்மாலி என்ற அவர்கள், தவமியற்றிப் பிரம்மனிடம் வரங்களைப் பெற்றனர். இவர்கள் வேதங்களில் நம்பிக்கையுடையவர்கள். இவர்கள் தனித்தனியே இரும்பு, வெள்ளி, பொன்னால் மயன் அமைத்துத் தந்த கோட்டைகளுள் இருந்தவாறே வானத்தில் திரிந்து வந்தனர். அத்துடன், 'சஞ்சீவி சித்திரகூபம்' என்ற அமுதம் நிறைந்த கிணற்றையும் படைக்கச் செய்தனர். தாம் நினைத்த இடங்களில் அக்கோட்டைகளுடனே பறந்து சென்று இறங்கிப் பல இடங்களைப் பாழாக்கித் தம்மெதிர்ப்பட்டவர்களைத் துன்புறுத்தினர்.*

*இதனால் வருந்திய தேவர்களும், முனிவர்களும் சிவபெருமானிடம் முறையிட, சிவபெருமான் அவர்களுக்கு அடைக்கலம் அளித்து அத்திரிபுரங்களை எரித்தார். சிவன் திரிபுரம் எரித்த இப்புராணச் செய்தியினைப் பரிபாடல்,*

ஆதி அந்தணன் அறிந்து பரி கொளுவ
வேத மாபூண் வேயத் தேர் ஊர்ந்து
நாகம் நாணா மலை வில்லாக
மூவதை ஆர் எயில் ஓர் அழல் அம்பின் முளிய

மாதிரம் அழல எய்து அமரர் வேள்வி

பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான்[133]

*என்று பாடுகின்றது.*

*சிவபெருமான் பூமியைத் தேராகவும், பிரம்மனை சாரதியாகவும் கொண்டு, மேருமலையை வில்லாகவும், ஆதிசேடனான நாகத்தினை வடமாகவும் கொண்டு ஒரே அம்பினால் நெருப்பு வடிவமாக நின்று எரித்தார் என்பது அப்பாடற்கருத்தாகும். இச்செய்தியானது பரிபாடல் திரட்டில் உள்ள பாடலொன்றிலும்,*

செல் விடைப் பாகன் திரிபுரம் செற்றுழி

கல் உயர்சென்னி இமயவில் நாண்ஆகி

தொல் புகழ் தந்தாரும் தாம் . . .[134]

*என்று பதிவு செய்யப்பட்டுள்ளது.*

*உயர்ந்த மலையாகிய பெரிய வில்லினில் பாம்பாகிய பெரிய கயிற்றைப் பூட்டி, ஒப்பில்லாத அம்பைக் கொண்டு தொங்குகின்ற மூன்று மதில்களையும் அழித்துத் தேவர்களுக்கு வெற்றியைத் தந்த நீலகண்டனாகிய சிவபெருமான் என்ற கருத்து,*

ஓங்குமலை பெருவிற் பாம்பு ஞாண் கொளீஇ

ஒருகணை கொண்டு மூவெயிலுடற்றிப்

பெருவிற லமர்க்கு வெற்றி தந்த. . . . . .

கறை மிடற் றண்ணல். . . . . .[135]

*என்றவாறு பாடலாக்கப்பட்டுள்ளது. திருமுருகாற்றுப்படையும் இச்சிறப்புடைய சிவனை,*

மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வன்[136]

*என்கிறது.*

*ஆழ்வார்ப் பாசுரங்களில் இச்செய்தியானது எடுத்தாளப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது. பிரம்மன், சிவன் இவர்களுக்கு அந்தர்யாமியாக இருந்து திருமாலே இயக்குகிறான் என்பதைப் பரிபாடலின் கருத்திற்கேற்பத் திருமங்கையாழ்வார், திரிபுரங்களை எரித்தவனும், பிரம்மனும்*

வியப்படையும்படியாகக் கடல்போல ஆரவாரித்து மூவுலகோரும் வழிபடுமாறு உள்ளவன் என்றும் பாடப்பட்டதுடன், அட்டபுயகரத் திருமால் என்பதாகவும்,

திரிபுரம் மூன்றும் எரித்தானும் மற்றை
மலர் மிசை மேல் அயனும் வியப்ப
முரிதிரை மாகடல் போல் முழங்கி
மூவுலகும் முறையால் வணங்க[137]

என்று குறிக்கப்பட்டுள்ளான். ஆனால், வைணவத்திற்கு இன்றியமையாமை தர வேண்டும் எனக் கருதிய பெரிய திருமொழி, திரிபுரம் எரித்ததனால் சிவன் துன்பமடைந்ததாகவும் அத்துன்பத்தினைத் திருமால் நீக்கியதாகவும் கூறித் திருமாலுக்குப் பெருமை சேர்க்க விரும்பி,

செற்றவன் - தன்னைப் புரம் எரி செய்த
சிவன் உறு துயர்களை தேவை
பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு[138]

எனப் பாடுகிறது. இதிலிருந்து, சைவ சமயத்தை உயர்வுபடுத்தச் சொல்லப்பட்ட புராணக்கருத்துக்களை, எயில் அழிக்கத் திருமால் அம்பாக இருந்த காரணத்தினாலும் வைணவ சமயத்தின் இலக்கிய வழியிலான உயர்வுக்கென ஆழ்வார்கள் பயன்படுத்திக் கொண்டனர் எனக் கூறமுடிகிறது.

**முடிவுரை**

மனித வாழ்வினை நெறிப்படுத்த எழுந்த வேத, புராண, இதிகாசங்களை முதற்கால மக்கள் விரும்பி அவற்றின் கருத்துகளை மதித்தனர் எனலாம். இதனைக் கருத்திற்கொண்ட சங்ககாலப் புலவர்கள் அவற்றின் கூறுகளைத் தத்தம் பாடல்களில் அமைத்துப் பாடினர். இவற்றின் செய்திகளின் இன்றியமையாமை உணர்ந்த பிற்கால ஆழ்வார்கள் அவற்றைத் தமது பாசுரங்களில் அமைத்துப் பாடினர் எனக் கூறமுடிகிறது.

வேதங்களில் போற்றப்பட்ட ‘விட்டுணு’ வாகிய கடவுள் சங்க காலத்தில் திருமாலாக வழிபடப்பட்டான். இத்திருமாலினைத் தமது வழிபடு கடவுளாகக் கொண்ட ஆழ்வார்களின் பிரதிநிதிகளாக விளங்கிய வைணவ

இலக்கியப் படைப்பாளர்கள், திருமாலைப் பாசுரங்களில் முழுமுதற் கடவுளாகக் கொண்டு பாடினர் எனக் கருதமுடிகிறது.

திருமாலானவன் மல்லரைச் சாய்த்தது, சந்திரனின் சாபத்தைப் போக்கியது போன்றவற்றைச் சங்கப் பாடல்கள் குறித்துச் செல்வதைப் போன்றே ஆழ்வார்களும் குறித்துச் செல்கின்றனர். பாஞ்சாலிக்கு நேர்ந்த துன்பம் போக்கியது, பாரதப் போரின்பொழுது தனது ஆழிப்படையைக் கொண்டு சூரியனை மறைத்தது, ஊழியின் முடிவில் உலகைத் தனது வயிற்றில் அடக்கியது போன்றவை சங்க இலக்கியங்களில் குறிக்கப்பட்டவாறே பக்திச்சுவை குறையாமல் தமது பாசுரங்களிலும் குறித்து, வைணவம் சிறக்க முயன்றனர் எனக் கூறமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. ந.சி.கந்தையா, **தமிழகம்,** *ப.173.*
2. **கலித்.,** *பா.52.*
3. மேலது., *பா.134.*
4. **திருப்பாவை,** *பாசு.481.*
5. **கலித்.,** *பா. 104:37-38.*
6. **நான்மு.திரு.,** *பாசு.2393.*
7. **பெரிய திருமொழி**, *பாசு.1023.*
8. **கலித்.,** *பா.104:58-59.*
9. **திருவாய்.,** *பாசு.3268.*
10. **கலித்.,** *பா.101:18-19.*
11. **பெரிய திருமொழி**, *பாசு.1278.*
12. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.354.*
13. மேலது., *பாசு.417.*
14. **புறம்.,** *பா.174.*
15. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.335.*
16. **கலித்.,** *பா.134.*
17. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.64.*
18. **அகம்.,** *பா.59.*
19. **பெரிய திருமொழி**, *பாசு.1225.*
20. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.121.*
21. **நாச்சி.தி.மொ.,** *பாசு.525.*
22. மேலது., *பாசு.524.*
23. மேலது., *பாசு.526.*
24. ந.சுப்புரெட்டியார், **வைணவச் செல்வம்,** *ப.48.*
25. **பெரிய திருமொழி**, *பாசு.1018.*
26. ந.சுப்புரெட்டியார், **வைணவச் செல்வம்,** *ப.4.*
27. **நற்.,** கடவுள் வாழ்த்து.
28. **பரி.,** *பா.2:18-19.*

29. **பரி.,** பா.2:57-59.
30. மேலது., பா.2:63-72.
31. கோக்கலை ஜெ.ராஜன், **இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து,** ப.48.
32. **திருவாய்.,** பாசு.3734.
33. மேலது., பா.3423.
34. மேலது., பா.3347.
35. மேலது., பா.2953.
36. மேலது., பாசு.2761.
37. **திருச்.சந்த.விரு.,** பாசு.766.
38. **திருவாய்.,** பாசு.3581.
39. **பரி.,** பா.2:62-63.
40. **திருவாய்.,** பாசு.
41. **பரி.,** பா.3:73-76.
42. மேலது., பா.3:93-94.
43. மேலது., பா.4:72-73.
44. **பெரிய திருமொழி**, பாசு.1902.
45. **திருவாய்.,** பாசு.3436.
46. மேலது., பாசு.3443.
47. மேலது., பாசு.2957.
48. மேலது., பாசு.2968.
49. **பரி.பா.திரட்.,** பா.1:64-68.
50. **பெரிய திருமொழி**, பாசு.1719.
51. மேலது., பாசு.1983.
52. **பரி.,** பா.2:16-17.
53. மேலது., பா.3:23-24.
54. **நான்மு.திரு.,** பாசு.2451.
55. **பெரியாழ்.தி.மொ.,** பாசு.221.
56. **பரி.,** பா.4:10-12.
57. மேலது., பா.4:19-21.
58. **பெரியாழ்.தி.மொ.,** பாசு.419.

59. **முல்லை.,** *அடி.1-3.*

60. **பெரிய திருமொழி**, *பாசு.1022.*

61. **முதல்.திருவந்.,** *பாசு.2090.*

62. **திருவாய்.,** *பாசு.3370.*

63. **அகம்.,** *பா.220:4-6.*

64. **பெரிய திருமொழி**, *பாசு.1509.*

65. **அகம்.,** *பா.70.*

66. **புறம்.,** *பா.378.*

67. **திருவாய்.,** *பாசு.3381.*

68. **பெரிய திருமொழி,** *பாசு.1988.*

69. **நான்மு.திரு.,** *பாசு.2409.*

70. **பெரிய திருமொழி**, *பாசு.1862.*

71. **பரி.,** *பா.2:20-21.*

72. மேலது., *பா.2:23.*

73. **கலித்.,** *பா.36:1.*

74. **பெரிய திருமொழி**, *பாசு.74.*

75. மேலது., *பாசு.1530.*

76. **பரி.,** *பா.3:25-26.*

77. **பெரிய திருமொழி**, *பாசு.1375.*

78. **பரி.பா.திரட்.,** *பா.1:76-78.*

79. **கலித்.,** கடவுள் வாழ்த்து.

80. மேலது., *பா.133.*

81. **முதல்.திருவந்.,** *பாசு.2155.*

82. மேலது., *பா.2085.*

83. **பெரிய திருமொழி**, *பாசு.1841.*

84. மேலது., *பாசு.1798.*

85. **கலித்.,** *பா.106:15-20.*

86. **பரி.,** *பா.3:12-14.*

87. **திரு.முருகு.,** *அடி.164-165.*

88. **நான்மு.திரு.,** *பாசு.2382.*

89. **திருவாய்.,** *பாச.2705.*

90. **பெரும்பாண்.,** *அடி.371-392.*

91. **நான்முகன்.திருவந்.,** *பாசு.2417.*

92. **மூன்றாம் திருவந்.,** *பாசு.3307.*

93. எஸ்.ஜெயபாலன், என்.வி.பார்த்தசாரதி *(தொகுப்பாசிரியர்கள்),* **திருமால் திருத்தலங்கள்,** *ப.164.*

94. **மூன்றாம் திருவந்.,** *பாசு.2357.*

95. **கலித்.,** *பா.104:10.*

96. **பரி.,** *பா.*

97. **கலித்.,** *பா.104:10.*

98. மேலது., *பா.28.*

99. **பரி.,** *பா.4:59.*

100. மேலது., *பா.10.*

101. **கலித்.,** *பா.44:67.*

102. மேலது., *பா.145:64.*

103. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.50.*

104. **திருவாய்.,** *பாசு.3335.*

105. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.413.*

106. **பரி.,** *பா.2:69-76.*

107. **பெரிய திருமொழி,** *பாசு.1095.*

108. **பரி.பா.திரட்.,** *பா.1:64-78.*

109. **பெரியாழ்.தி.மொ.,** *பாசு.84.*

110. **பெரிய திருமொழி,** *பாசு.1411.*

111. **திருவாய்.,** *பாசு.3371.*

112. **பரி.,** *பா.1:14-19.*

113. மேலது., *பா.4:57-58.*

114. **மூன்றாம் திருவந்.,** *பாசு.2283.*

115. மேலது., *பாசு.2302.*

116. **பரி.,** *பா.1:6.*

117. **குறள்.***1103.*

118. **நான்மணிக்கடிகை,** கடவுள் வாழ்த்து.
119. **பெரிய திருமொழி**, *பாசு.1879.*
120. **திருவாய்.,** *பாசு.3625.*
121. மேலது., *பாசு.2783.*
122. **கலித்.,** *பா.101:10-15.*
123. **திருச்.சந்.விருத்.,** *பாசு.824.*
124. **திருவாய்.,** *பாசு.2724.*
125. **கலித்.,** *பா.101:24-26.*
126. மேலது., *பா.103:43-46.*
127. **திருவாய்.,** *பாசு.3387.*
128. **நான்மு.திரு.,** *பாசு.2396.*
129. **பரி.,** *பா.5.*
130. **பெரிய திருமொழி**, *பாசு.1702.*
131. மேலது., *பா.1794.*
132. **நான்முகன் திருவந்.,** *பாசு.2459.*
133. **பரி.,** *பா.5:22-25.*
134. **பரி.பா.தி.,** *பா.1.*
135. **புறம்.,** *பா.55:1-4.*
136. **முருகு.**
137. **பெரிய திருமொழி**, *பாசு.1118.*
138. மேலது., *பாசு.1068.*

# முடிவுரை

இறைவழிபாடு என்ற நிலையில், குறிப்பாகத் திருமால் வழிபாடு என்ற நிலையில் சங்க இலக்கியங்களுக்கும் ஆழ்வார்ப் பாசுரங்களுக்கும் நெருக்கமான தொடர்பு உள்ளமையினை அறியமுடிகிறது. சங்க இலக்கியங்களில், முல்லை நிலக் காடுகளின் நிழல் மற்றும் அடர்த்தியான காட்சித் தோற்றம் கரிய நிறமாக வருணிக்கப்பட்டது. அந்நிலத்தோடு தொடர்புடைய திருமால், கரிய நிறமுடையவனாகப் புனையப்பட்டான். இதனை நன்கு உள்வாங்கிக் கொண்ட ஆழ்வார்களுக்கு, திருமாலினைக் கரிய மாலாக, கரியநிறக் கண்ணனாகப் பாடி மகிழ்வது எளிதாக இருந்தது எனக் கூற முடிகிறது.

பாடற்கருத்து உரியவாறு படிப்போரைச் சென்றடைய வேண்டுமாயின், தொல்காப்பியர் கூறிய முதல், கரு, உரிப் பொருள்களைப் பொதித்துப் பாட வேண்டும் எனச் சங்ககாலப் புலவர்கள் எண்ணி அவ்வாறே யாத்தனர். இதனாலேயே சங்கப்பாக்கள் சிறந்தமையினை அறிந்த பக்திக்கால ஆழ்வார்களும், அவ்வாறே தமது பாசுரங்களையும் பாடினர். இப்பாசுரங்களில் சங்க இலக்கியத் தாக்கம் உள்ளமையினை வெளிப்படுத்த முடிகிறது.

அகத்திணை மாந்தர்களான கிளவித் தலைவன், தலைவியரின் பெயர் சுட்டா மரபு ஆழ்வார்ப் பாசுரங்களில் மாற்றப்பட்டதற்குக் காரணம், பாடப்படும் தலைவன் இறைவனான திருமால் என்பதே ஆகும். ஐவகைத் திணைகளின் முதல், கரு, உரிப்பொருள்கள் என்பன அகத்திணைப் பாடல்களுக்கு அடிப்படையாகவும், சுவை உடையதாகவும் இருந்ததைச் சங்கப் பாடல்களின்வழிப் படித்தறிந்த ஆழ்வார்கள், அதே நெறியில் தமது பாசுரங்களையும் யாத்தனர் என்று இயம்ப இயலுகின்றது.

திருமால் மீதான பக்தியை வளர்க்கும் உத்தி எது என்பதை ஆராய்ந்த ஆழ்வார்கள், வைணவ பக்தர்களைத் திருமாலாகிய இறைவனுடன் இணைப்பதற்குப் பாசுரக் கருத்துக்கள் உதவிடும் என எண்ணினர்; நாயகன் - நாயகி பாவத்தில் பாடுவது அக்கருத்துகளை உரியவாறு வெளிப்படுத்தும்

என்று கருதி, அவ்வாறு பாடினர். இதற்குச் சான்றாக ‘மடலேறுதல்’ என்பதைக் கூறமுடிகிறது. ஆழ்வார்களின் இத்தகைய எண்ணத்திற்குச் சங்க அக இலக்கியங்களின் தாக்கமே காரணம் எனலாம்.

சங்க இலக்கியப் பாடல்கள் ஏற்படுத்திய தாக்கமே, எல்லா உயிரினங்களுக்குப் பொதுவான ‘அன்பு’ என்பதை ‘வைணவ அடியார்களின் பக்தி’ என்று மறுகோணத்தில் சிந்திக்க ஆழ்வார்களுக்கு வாய்ப்பளித்தது எனவும் சுட்டமுடிகிறது.

ஆநிரை கவர்தல், உண்டாட்டு, பாதீடு, வேத்தியல், வஞ்சினம் கூறல், வள்ளன்மை எனப் போல்வன, சங்க காலத்தில் மன்னன் மேல் வைத்துப் பாடப்பட்டன. பக்திக் காலத்தில், வைணவர்கள் திருமாலினையே தமது மன்னனாக மனத்தில் கற்பித்துக் கொண்டனர். ஆதலால், புறத்திணைக் கூறுகள் அடங்கிய சங்க இலக்கியங்களைப் படித்துத் தேர்ந்த ஆழ்வார்கள், தமது பாசுரங்களில் இத்தகைய புறத்திணைக் கூறுகளை அமைத்துப் பாடினர். அதனால், அப்பாசுரங்களும் பக்திச் சுவை குன்றாதனவாய் அமைந்துவிட்டன என்ற முடிவுக்கு வர இயலுகின்றது.

போர்க் கருவிகளை மதித்தல், நிலையாமையை அறிவுறுத்துதல், பொலிவு மங்கலம், நாள்மங்களம் போன்றவற்றைச் சங்கப் பாடல்களின் வழிக் கற்றுத் தேர்ந்திருந்த ஆழ்வார்கள், அவற்றைத் திருமால் மீது ஏற்றிப் போற்றித் தமது பாசுரங்களைப் படைத்துள்ளமையினை எண்ணி மகிழ முடிகிறது.

வேதங்களில் போற்றப்பட்ட விட்டுணுவாகிய கடவுள், சங்க காலத்தில் திருமாலாகப் பார்க்கப்பட்டான். இத்திருமாலினைத் தமது வழிபடு கடவுளாகக் கொண்ட வைணவ பக்தர்களின் பிரதிநிதிகளாக விளங்கிய ஆழ்வார்கள், திருமாலினைத் தத்தம் பாசுரங்களில் முழுமுதற் கடவுளாகக் கொண்டு பாடினர் என்பது வெளிப்படுகின்றது.

மனித வாழ்வினை நெறிப்படுத்தத் தோன்றிய வேத, புராண, இதிகாசங்களை முற்காலத்தார் விரும்பி மதித்தனர். இதனைச் சங்கப் புலவர்களும் பின்னர் ஏற்று, அவற்றின் கூறுகளைத் தமது பாடல்களில் அமைத்துப் பாடினர். அத்தகைய பாடல்கள் நிலைபேறுடையன ஆயின.

அதனால், இக்கூறுகளின் இன்றியமையாமை உணர்ந்த பிற்கால ஆழ்வார்கள் அவற்றைத் தமது பாசுரங்களில் அமைத்துப் பாடினர் என்பதைப் பாசுரங்கள் சான்று காட்டுகின்றன.

இறைவனின் பெருமைகள், உலகிலுள்ள பொருள்களின் நிலையாமை, மனிதனின் ஒழுகலாறுகள் என்பனவற்றைத் தமது மனத்தில் நிலைநிறுத்திய சங்க காலப் புலவர்கள், அவற்றைத் தமது பாடல்களில் வைத்துப் புனைந்தனர்; அவர்தம் பாடல்களும் சிறந்தன. இது ஆழ்வார்களின் படைப்புத் திறனில் நல்லதொரு தாக்கத்தை ஏற்படுத்தியதன் விளைவாகவே நாயன்மார்களின் சைவத் திருமுறைகளைப் போன்ற, ஆழ்வார்களின் வைணவப் பாசுரங்கள் தோன்றி நிலைபெற்றன எனவும் கூறமுடிகின்றது.

சங்க இலக்கியங்களையும், ஆழ்வார்ப் பாசுரங்களையும் இணைத்து, இன்னும் வேறு கண்ணோட்டத்தில் ஆய்வு மேற்கொண்டால் மேலும் பல கருத்துகள் வெளிப்பட வாய்ப்பு உண்டு.

# துணைநூற் பட்டியல்

**முதன்மைச் சான்றாதாரம்**


கமலக்கண்ணன், இரா.வ. (தொ.ஆ.), நாலாயிர திவ்ய பிரபந்தம் (4 தொகுதிகள்), *வர்த்தமானன் பதிப்பகம், சென்னை. 2004.*

---. சங்க இலக்கியங்கள் (பத்துப்பாட்டு & எட்டுத்தொகை) (தொகுதி 1-10), *திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2008.*


**துணைமைச் சான்றாதாரங்கள்**


இலக்குமிநாராயணன், கே.சி., வேதங்களை ஏற்றுப் போற்றும் தமிழ் இலக்கியங்கள், *எல்.கே.எம்.பப்ளிகேஷன், சென்னை, 2007.*

இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், *கொற்றவை வெளியீடு, சென்னை, 2014.*

உமாராசன், எஸ்., சங்கத் தமிழ்ச் சமயங்கள், *கார்த்திக் பதிப்பகம், சென்னை, ஆ.இ.*

உலகநாதன், கவிஞர் வி.மு., ஆண்டாள் பாவையும் அழகுத் தமிழும், *வாசுகி பதிப்பகம், சென்னை, ஆ.இ.*

கபிலர், புலவர் வே., — **தமிழ் இலக்கியச் செல்வம்**, *அருணோதயம், சென்னை, 2002.*

கஸ்தூரி, இரா., — **தமிழ் இலக்கியங்களில் நிலையாமை (தொகுதி 1)**, *ஞாயிறு வெளியீடு, சென்னை, 1999.*

கோமதி, கு., — **நாலாயிர திவ்யபிரபந்தத்தில் சோழநாட்டுப் பாசுரங்கள் (இலக்கிய வகைகளும் அகப்பாடல் தன்மைகளும்)**, *பாரதிதாசன் பல்கலைக்கழக ஆய்வேடு, திருச்சிராப்பள்ளி, 2007.*

சண்முகம்பிள்ளை, பேரா. மு., — **சங்கத் தமிழரின் வழிபாடுகளும் சடங்குகளும்**, *உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், (அண்ணா நூற்றாண்டு நூலகம்), சென்னை, 2000.*

---. — **இறைவழிபாடு**, *ஆய்வுக்கோவை, தேசியக் கருத்தரங்க வெளியீடு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம், 2005.*

சம்பத் குமார், — **தமிழ்நாட்டில் வைணவம்**, *பாரத் புக்ஸ், சென்னை, 2006.*

சீனிவாசன், ம.பெ., — **ஆழ்வார்களும் தமிழ் மரபும்**, *மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2010.*

*சுந்தரமூர்த்தி, கு.,* — **அறுவகைச் சமயம் - சைவ சித்தாந்த ஒப்பீடு,** *தருமையாதீனம், தருமபுரம், 2002.*

*சுப்பிரமணியன், டாக்டர் ச.வே. (உ.ஆ.),* — **சங்க இலக்கியம் - எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும், தொகுதி 1, 2 மற்றும் 3,** *மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2010.*

*சுப்புரெட்டியார், டாக்டர் ந.,* — **வைணவச் செல்வம்,** *தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1995.*

---. — **சைவசித்தாந்தம் - ஓர் அறிமுகம்,** *கழக வெளியீடு, சென்னை, இ.ப., 2004.*

---. — **சடகோபன் செந்தமிழ்,** *விகடன் பப்ளிகேஷன், சென்னை, ஆ.இ.*

*சுப்புரெத்தினம், டாக்டர் ச. (உ.ஆ.),* — **தொல்காப்பியம் பொருளதிகாரம் (அகத்திணையியல் & புறத்திணையியல்),** *சிவா பதிப்பகம், மயிலாடுதுறை, 2014.*

*சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.),* — **புறப்பொருள் வெண்பாமாலை,** *திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1999.*

திருவள்ளுவர், **திருக்குறள்**,
திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
2007.

பாண்டுரங்கன், டாக்டர் அ., **சான்றோர் கவி**,
சேகர் பதிப்பகம்,
சென்னை,
2010.

மணி, தெள்ளாறு, அ., **திவ்ய பிரபந்தம் கூறும் திருமால் கதைகள்**,
சம்பத்து பதிப்பகம்,
சென்னை,
மு.ப., 2005.

மணிவாளன், கே.ஏ., **ஆண்டாள்**,
சாகித்ய அகாதமி,
புதுதில்லி,
மு.ப., 1990.

முத்துசாமி, டாக்டர் அ., **சங்க இலக்கியத்தில் ஆயர்**,
சென்னை,
மு.ப., 1993.

ராஜன், கோக்கலை, ஜெ., **நம்மாழ்வார் திருவாய்மொழி பத்தாம் பத்து (அகல உரை)**,
மகாராணி,
சென்னை,
மு.ப., 2002.

---. **இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து**,
மகாராணி,
சென்னை,
ஆ.இ.

வரதராசன், டாக்டர் மு., **தமிழ் இலக்கிய வரலாறு**,
சாகித்திய அக்காதெமி,
புதுதில்லி,
2005.

ஜெயபாலன், எஸ்., மற்றும் பார்த்தசாரதி, என்.வி. (தொ.ஆ.), **திருமால் திருத்தலங்கள்**,
ஈசுவர் லேசர்,
சென்னை,
2001.

ஜெயபாலன், எஸ்., மற்றும் பார்த்தசாரதி, என்.வி. (தொ.ஆ.), **திருவடி மலர்கள் கட்டுரைத் தொகுப்பு**, ஸ்ரீமத் ஆண்டவன் கலைக்கல்லூரி, திருச்சி, ஆ.இ.

---. **வைணவ இலக்கியம் (8 தொகுதிகள்)**, தமிழ் பிரிவு, தொலைதூரக் கல்வி இயக்ககம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம், மு.ப., 2013.

---. **குருவழிபாடு**, ஞானசம்பந்தம் அச்சகம், தருமபுரம், மயிலாடுதுறை, 2004.


**கலைக்களஞ்சியம்**


திருச்சிற்றம்பலம், முனைவர் சிவ., **ஸ்ரீ வைஷ்ணவ சமயக் கலைக்களஞ்சியம்**, கங்கை புத்தக நிலையம், சென்னை, 2004.


**அகராதி**


---. **லியோவின் தமிழ் அகராதி**, லியோ புக் பப்ளிஷர்ஸ், சென்னை, 2008.